


## 1. தேவ்

**தேவகி** காத்திருப்பாள்.

திருமண அழைப்பிதழைக் கொடுத்து விட்டு உடனே போய் விடலாம் என்று நினைத்துத்தான் வந்தான். பெர்னி - பெர்னார்ட் ஜோஸப் - லேசில் விட்டு விடுவானா? ஸ்டெல்லா - அவன் தங்கை நீளமாக மூஞ்சியை வைத்துக் கொண்டாள்.

"தேவ், நீ இந்தப் பக்கம் வந்து சரியாக 45 நாளாகிவிட்டது தெரியுமா? எங்களுடன் அட்லீஸ்ட் 45 நிமிடமாவது இருந்து டீ குடித்து விட்டுப் போக வேண்டும்" என்றான் பெர்னி.

"அவருக்கு எங்கேஜ்மெண்ட் ஆன நாளிலிருந்து ஸ்டெல்லாவை மறந்துவிட்டார் அண்ணா" என்றாள் ஸ்டெல்லா.

அவள் பாவம், அவனைக் காதலித்திருந்தாள். கல்யாணம் செய்து கொள்வான் என்ற நப்பாசையில் அவனுடன் ஊர் சுற்றினாள். பெரும்பாலும் டிஸ்கோ, இங்கிலீஷ் படம், காபரே என்று சேர்ந்தே சுற்றினார்கள். தேவுக்கு 'பாட்' சமாசாரத்தை அறிமுகம் செய்து வைத்ததும் அவள்தான். ஆஸிட், கிராஸ், ஸ்பீட், குளூ என்று பல பெயரில் வழங்கும் அத்தனை போதைப் பொருள்களும் அவளுக்கு அத்துப்படி. எந்த விலைக்கு எங்கே கிடைக்கும் என்று தெரிந்து வைத்திருந்தாள். இந்தப் புரசைவாக்கம் முடுக்குத் தெரு வீட்டுமாடி அறையில் எத்தனை மாலை வேளைகள் இன்பமாகப் போயிருக்கின்றன? பெர்னி, ஸ்டெல்லா, தேவ் இன்னும் வருகிற போகிற நண்பர்கள் - அவர்களில் சுரேஷ் இப்போது திருத்தமுடியாத அடிக்டாகி பாயைப் பிறாண்டும் நிலைக்குப் போய் ஆஸ்பத்திரியில் கிடக்கிறான்.

அவன் கதியைப் பார்த்த பின்புதான் தேவுக்கு விழிப்பு வந்தது. இத்தனைக்கும் வாரத்தில் ஒருநாள் தான் 'ட்ரிப்' போகும் சமாசாரமெல்லாம். மற்ற நாட்களில் அப்பாவின் ஆட்டோ மொபைல் ஸ்பேர் பார்ட்ஸ் கம்பெனியில் ஒழுங்காக வேலை செய்து வந்தான்.

பையனுக்குப் போதை மருந்துப் பழக்கம் ஏற்பட்டு விட்டது என்று அம்மாவுக்குத் தெரிந்ததுமே எச்சரிக்கையாகி விட்டார்கள். உடனடியாக ஒரு கால்கட்டுப் போட்டால் திருந்திவிடுவான் என்ற நம்பிக்கையில் தெரிந்தவர் அறிந்தவர் இடங்களில் விசாரித்துப் பார்த்துத் தேவகியைத் தேடிப் பிடித்தார்கள்.

தேவகி தந்தத்தில் செய்து ரோஸ் வர்ணம் பூசிய அழகுப் பொம்மை. அவளது அகன்ற கண்களை, இதழில் தேன் துளிகளைப் போல ஒட்டி நின்ற புன்னகையை அணைத்துக் கட்ட வேண்டும்போல், ஈர்க்கும் 'அவர்கிளாஸ்' உடல் அமைப்பை தேவுக்குப் பார்த்தவுடனேயே பிடித்து விட்டது.

தன்னிடமிருந்து தானே தப்பித்துக் கொள்ளவும் திருமணத்திற்கு இசைந்தான் தேவ். ஸ்டெல்லாவின் சகவாசம் மீளமுடியாத எல்லையைத் தாண்டிப் போவதாக பயம் வந்து விட்டது.

தேவகி டாக்டரின் மகள். அண்ணன் தம்பி மூவர், இரண்டு தங்கைகளுடன் பிறந்தவள்.

நிச்சயதார்த்தம் ஆன தினத்திலிருந்து மாலை வேளையில் தவறாது தேவ் வந்துவிடுவான். அவனது ஜாவா பில்லியனில் அமர்ந்து திண்மையான அவனது இடுப்பை ஒரு கையினால் வளைத்து அவனது பறந்த முதுகில் கன்னத்தைப் பதித்துக் கண்ணை மூடிக்கொண்டு விடுவாள். அவன் எங்கே போக வேண்டும் என்கிறானோ அங்கே



போவாள். ஆனால் அவள் வந்தபின் ஸ்டெல்லாவை மறந்தான். 'பாட்' மறந்தான். டிஸ்கோவும் அலுத்து விட்டது.

திருவான்மியூர் தாண்டி கோல்டன் பீச் கோவளம் என்று கடற்கரைகளில் போய் உட்கார்ந்து விட்டு வருவார்கள். சோயிலுக்கு போவார்கள். சில மாலைகளில் இலக்கியக் கூட்டம் அல்லது கர்நாடக சங்கீதம், நாட்டியம் என்று அமையும்.

தேவகிக்கு இதெல்லாம் பிடிக்கும்.

தன்னிடம் ஏற்பட்டுவிட்ட மாற்றத்தைக் கண்டு அவனே வியப்படைந்தான். இந்த மாற்றம் அவனுக்குப் பிடித்திருந்தது. சகதியில் அலைந்துவிட்டு சுத்தமான நீரோடையில் குளித்தாற் போல மனதில் ஒரு உணர்வு, தெளிவு, நிம்மதி.

இன்று மாலையும் ஐந்தரை மணி முதல் தேவகி காத்திருப்பாள். நான்கு நாட்களில் திருமணம். இன்று இருவரும் சேர்ந்து டெயிலர் கடைக்குப் போய் அவனது 'மாப்பிள்ளை' சூட்டை சரிபார்த்துக் கொடுப்பதாகத் திட்டம்.

''இன்னொரு நாள் வருகிறேன் பெர்னி. ஐ ஹாவ் டு மீட் ஸம்படி அட் ஃபைவ் தர்ட்டி. இப்போதே லேட்டாகிவிட்டது!'' என்று கெஞ்சினான் தேவ்.

''அந்த 'ஸம்படி' யார்னு எங்களுக்குத் தெரியாதா? டென் மினிட்ஸ். ஹாவ் டீ வித் அஸ்!'' என்று ஸ்டெல்லா கண்டிப்புடன் சொல்லிவிட்டு உள்ளே போனாள்.

''நீ நேற்றே வருகிறேன் என்று சொன்னாயா? உனக்காக ஸ்பெஷலாக கேக் செய்து வைத்திருந்தாள். நீ சாப்பிடாவிட்டால் விடமாட்டாள்'' என்றான் பெர்னி.

சாக்கலேட் கப் கேக் தேவுக்குப் பிடிக்கும். ஹஷீஷ் போட்டுச்சாப்பிட்டால் நல்ல எபெக்ட் கிடைக்கும்.

ஸ்டெல்லா கேக் செய்வதில் எக்ஸ்பெர்ட்.

கப் கேக்குகள் மூன்றுடன் தட்டு ஒரு கையிலும், இன்னொரு கையில் டீ கெட்டிலையும் எடுத்து வந்தாள் ஸ்டெல்லா.

பாப் செய்யப்பட்ட அவளது சுருள் மயிர்கள் கண்களை மூடும் வரை தழைந்திருந்தன. சின்ன மூக்கு மட்டும் எடுப்பாக தெரிந்தது. கொஞ்சம் தடித்த உதடு அவளுக்கு. ஆனால் அவை விரிந்து அவளது பல் வரிசைகள் பளீரிடும்

---

புராணகாலத்தில் தேர்தல்




## குபேரன்

உலகிலேயே பெரிய பணக்காரன் நான் தான். என் சின்னம் 'இரும்புப் பெட்டி'. இதை மறக்க முடியாது. என்னிடம் உள்ள பணத்தை எல்லாம் ஆறுவது ஐந்தாண்டு திட்டத்தில் போட்டு வளமான வாழ்வை மக்களுக்கு அளிப்பேன். நான் தேர்ந்தெடுக்கப்பட்டால் இந்தியா உலக பாங்கில் வாங்கியுள்ள கடன் பூராவையும் பைசல் செய்து விடுவேன். வளமான வாழ்வுக்கு 'இரும்புப்பெட்டி' சின்னத்துக்கே ஓட்டுப் போடுங்கள்.

திருப்பதி வெங்கடாஜலபதி அவர்கள் திருமணத்துக்குக் கடன் கொடுத்து அதற்கான வட்டியை மட்டும் வசூலித்து வருவதாகக் கூறப்படும் புரளியை நம்பவேண்டாம். அவர் கடன் பூராவையும் பைசல் செய்து பத்திரத்தையும் கிழித்துவிட்டேன்.

போது ஸ்டெல்லா அழகாகவே தோன்றுவாள்.

இப்போது அவனுக்கு அப்படித் தோன்றவில்லை.

நெஞ்சில், கண்ணில், மூச்சில் எல்லாம் தேவகிதான் நிறைந்திருந்தாள். இங்கே இவர்களின் அன்புத் தொல்லையிலிருந்து சீக்கிரமே விடுபட வேண்டுமென்ற துடிப்பு. ஸ்டெல்லா தட்டை மேஜைமீது வைக்கு முன்பே எட்டி ஒரு கேக்கை எடுக்க முயன்றான்.

ஸ்டெல்லா தட்டை பின் வாங்கிக்கொண்டாள்.

''அவசரம் வேண்டாம் டார்லிங்!'' என்று செல்லமாகக் கடிந்தாள்.

கெட்டிலையும் தட்டையும் மேஜையில் வைத்து தேவின் அருகில் நாற்காலியில் நெருக்கமாக உட்கார்ந்தாள். அவளிடமிருந்து லாவெண்டர் மணம் நாசியை வருடிற்று.

''இந்த பெரிய கேக் உனக்கு. உனக்காகவே ஸ்பெஷலாகத் தயாரித்தது. சின்னது ரெண்டும் எனக்கும் என் அண்ணாவுக்கும்'' என்றபடி ஒரு கேக்கை எடுத்து நேராக அவன் வாயில் திணித்தாள்.

தேவ் அவசரமாக அவள் கையைப் பற்றி விலக்கி கேக் சிதறி விடாமல் பிடித்துக்கொண்டான். பாதி கேக் வாய்க்குள் நிறைந்துவிட்டது.

''ஆஷ் போய்த்தியுக்காயா?'' என்று கேட்டான்.

''ஹாஷ் ஒன்றும் போடவில்லை. அதைவிட ஸ்பெஷலாக ஒன்றைச் சேர்த்திருக்கிறேன். உன்னை ஒண்ணும் பண்ணாது. பயப்படாதே'' என்று ஸ்டெல்லா சிரித்தாள்.

பெர்னார்ட் தங்கையைப் பார்த்து முறைத்தான்.

''அவனுக்குக் கல்யாணம் நாலு நாளில். எதையாவது கொடுத்து அவனை படுக்கப்போட்டு விடாதே'' என்றான்.

''ஹோ...பெரீய்ய கல்யாணம்'' என்று நக்கல் செய்தபடி ஸ்டெல்லா மேஜைமேல் கிடந்த திருமண அழைப்பிதழை எடுத்தாள்.

''திருவளர்ச் செல்வன் தெய்வசிகாமணிக்கும்...ஹோ! ஹௌ இஸ் திஸ்..லாங் நேம்.....யூ! தெய்வ

## புதிய மிருகம்

கல்கத்தா அலிப்பூர் மிருக காட்சி சாலையில் சிங்கத்தையும் புலியையும் ஒன்று சேர விட்டு 'டைகன்' என்ற புதிய மிருகத்தை உருவாக்கினர். பின் இந்த டைகனையும் (இதன் பெயர் ருத்ராணி. பெண்) இந்திய சிங்கத்தையும் இணைய விட்டு லிட்டிகான் என்ற வேறு ஒரு புதிய மிருகத்தை உருவாக்கி சாதனை புரிந்தனர். பின் இதே தாய் 1981-ல் மீண்டும் மிருககாட்சி சாலைக்கு லிட்டிகான் குட்டியை பெற்று தந்தது. அதன் பிறகு இந்த வருடம் மார்ச் மாதம் இதே தாய் மீண்டும் இரண்டு லிட்டிகான்களை பெற்றது.

இந்த அதிசய 'லிட்டிகான்' குட்டிகளை பார்ப்பதற்காக மக்களுக்கு மிருகக் காட்சி சாலையினர் போன வாரம்தான் அனுமதியளித்தனர்.

இரண்டு குட்டிகளையும் சேர்த்து கல்கத்தா மிருக காட்சி சாலையில் மொத்தம் நான்கு லிட்டிகான் என்ற புதிய மிருகம் தற்சமயம் இருக்கிறது. பார்ப்பதற்கு அழகாகவும், சுறுசுறுப்பாகவும் இருக்கிறது. இன்னும் இதற்கு பெயர் வைக்கப்படவில்லை.

தகவல், புகைப்படம்: கல்கத்தா 'மிக்கி'

சிகாமணின்னு பேரா உனக்கு? அதான் இத்தனை படு கர்நாடகமாக பெண் பார்த்து நிச்சயதார்த்தம் செய்து கொண்டாயாக்கும். ஹூம்.... பெண்ணின் பேரும் ஈக்வலி கர்நாடகம்...தேவகியாம்.. தேவகி!'' எரிச்சலுடன் அழைப்பிதழைச் சுண்டி எறிந்தாள் ஸ்டெல்லா.

தேவ் ஒன்றும் சொல்லவில்லை. கேக்கை அவசரமாக விழுங்கினான். பீங்கான் கப்புகளைப் பிரித்து வைத்து அவனே கெட்டிலை எடுத்து தேத்தண்ணீரை ஊற்றினான். அதே அவசரத்தில் கப்பை வாயில் வைத்து உறிஞ்ச முற்பட உதட்டிலும் நாக்கிலும் சுரீரென்னு சுட்டது. நெஞ்சில் புரையேறி 'ஹக் ஹக்' என்று இருமினான்.

''ஹேய் ஓய் ஸோ ஃபாஸ்ட..'' ஸ்டெல்லா அவன் மண்டையில் இரண்டு தடவை தட்டினாள்.

தேவுக்கு மூச்சு வாங்கியது. மேஜை விளிம்பை கெட்டியாகப் பற்றிக் கொண்டு நாற்காலி முதுகில் பொருந்தி சாய்ந்து கொண்டான். இடது கையை மார்பில் வைத்து அழுத்திக் கொண்டான். கேக்கில் கலந்திருந்த மருந்து வயிற்றுச் சுவர்களின் ரத்த நாளங்களால் உறிஞ்சப்பட்டு இருதயத் துடிப்பின் வேகம் கூடியது.

(தொடரும்)



**பிறந்த குழந்தைகள் என்னதான் அழுதாலும் கண்ணீர் மட்டும் வராது. காரணம் கண்ணீர் சுரப்பிகள் வளர்ந்து செயல்பட 15 நாட்களாகும். -சம்பத்**

# உங்கள் வருங்காலம்

பீட்டர் விடால்

உங்கள் ஆங்கிலப் பிறந்த மாதம் தேதியைக் கொண்டு பலன் பார்த்துக் கொள்ளவும

வாரபலன் ஆகஸ்டு 15 முதல் ஆகஸ்டு 21 முடிய

## மார்ச் 22-ஏப்ரல் 20

வாழ்க்கையை அனுபவிக்கப் பொழுதுபோக்குஅம்சங்களில் மனதைச் செலுத்த ஸ்நேகிதத்தை அதிகப்பட்சம் உபயோகப்படுத்திக் கொள்வதற்கு ஏற்ற வாரம். வியாழக்கிழமையன்று கிடைக்கக் கூடிய சந்திப்போ அல்லது உல்லாசக் கேளிக்கையோ மறக்க முடியாததாக அமையும்.

## ஏப்ரல் 21 - மே 21

முன்னதாகவே திட்டமிட்டுச் செயலாற்ற வேண்டும். வரப் போகும் இரண்டு வருஷங்களில் உங்கள் வாழ்க்கையில் ஒரு முக்கியமானக் கட்டத்தில் இருக்கப்போகிறீர்கள். குடும்பம், தொழில் ஆகியவற்றில் முக்கிய மாற்றங்களை விளைவிக்கக் கூடிய சூழ்நிலையில் இருக்கப் போகிறீர்கள். கையில் காசு சேமித்து வைத்துக் கொள்வது நல்ல கொள்கையாக இருக்கும்.

## மே 22-ஜூன் 21

உங்கள் தலைமுறையைச் சேர்ந்த உறவினர் ஒருவருடன் சேர்ந்து செயலாற்றுவதில் லாபம் உண்டு. அத்துடன் அண்டை வீட்டுக்காரர் ஒருவருடன் வெளியே பயணம் செல்வதும் லாபம் தரும். வியாழனன்று ஒரு அழைப்பிதழ் தேடி வர இருக்கிறது.

## ஜூன் 22-ஜூலை 23

ஓய்வு எடுத்துக் கொள்ளக் கிடைக்கும் வாய்ப்புகளை பூரணமாகப் பயன்படுத்திக் கொள்வது நன்மை தரும். அன்றாட அலுவல்களைப் பிறரிடம் ஒப்படையுங்கள். ஒரு குழுவாய்ச் செயல்படுவது தான் இப்பொழுது நல்லது. உங்கள் கூட்டாளி அடைகின்ற வெற்றியினால் அவருடன் ஒரு பார்ட்னர்ஷிப் வைத்துக் கொள்வது உங்களுக்கு சந்தோஷம்தரும். உங்களுக்கு நெருக்கமானவர்கள் சம்பந்தப்பட்ட விவகாரங்கள் சாதகமாகவே அமையும்.

## ஜூலை 24-ஆகஸ்டு 23

காதலுக்கும் சிருங்காரத்திற்குமான சாதகமான சூழ்நிலைகள் நிலவுகின்றன. புதிய வெற்றிகளும் சாத்தியமே. நீங்கள் கனிவாக நடந்து கொண்டால் உங்கள் காதலர் மிக நெருக்கமாக நெருங்கி வருவார். ஒரு தீவிரமான காதலில் ஈடுபடும் காலத்தில் இருக்கிறீர்கள். எதிர் செக்ஸைச் சேர்ந்தவர்களின் மீது உங்கள் ஆதிக்கம் எப்போதையும் விட இப்பொழுது அதிகமாய் இருக்கும்

## ஆகஸ்டு 24-செப்டம்பர் 23

அறிமுகங்களைத் தொடர்ந்து செயல்பட புதிய திட்டங்களின் சாத்தியக் கூறுகளைப் பற்றி ஆராய இது மிகச் சிறந்த நேரம். வரும் இரண்டு வாரங்களில் நீங்கள் செய்யும் பூர்வாங்க வேலைகள் செப்டம்பர் மாதத்தில் பெருத்த லாபத்தை தர இருக்கிறது. உங்கள் தொடர்பு

இயற்கையின் ரகசியம் கண்டு கொண்டோம் !




# கண்காணும் சிகப்பழகை உமதாக்கும்

**இயற்கைக்கே உரிய இதம் கனிந்த முறையிலே.**

:.பேர் அண்ட் லவ்லி—அற்புத விஞ்ஞானக் கண்டுபிடிப்பாகிய இது, கருமேனியை சிகப்பாக்கும் க்ரீம்—இரு வழிகளில் செயல்படுகிறது.

**சருமத்தின் உட்புறம் :** உள்ளடங்கிய பொருள் ஒன்றின் மூலம் :.பேர் அண்ட லவ்லி உள்ளூர மேனி கறுப்பதன் வேகத்தைஅடக்கி, சிகப்பழகை உமக்களிக்குது.

**சருமத்தின் வெளிப்புறம் :** :.பேர் அண்ட் லவ்லி க்ரீமில் இருக்கும் சூரிய ஒளித் தடைப் பொருள்கள், அல்ட்ரா-வயலெட் கதிர்களை உடம்பில் படாதபடி விலக்குகிறது.

ஆதலால், மேனி கறுக்காமலேயே பகலொளி நலங்களை நீங்கள் உடலாரப் பருகிடலாம்.

ஆறே வாரங்கள் அன்றாடம் உபயோகித்துப் பாருங்கள் :.பேர் அண்ட் லவ்லி—உங்கள் மனம்போல் சிகப்பழகை மலர வைக்கும்.






**சிகப்பான மேனியழகுக்கு மென்மையான வழி—ஃபேர் அண்ட் லவ்லி**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு. LINTAS-FALOV/13/1810 TM




கி. கஸ்தூரி ரங்கன்

## 2. ஒரு பிரயாணம்

"ஸ்டெல்லா, யூ பிட்ச்! யூ பாய்ஸன்ட் மீ" உரத்துக் கூச்சலிட்டான் தேவ். குரலெழும்பவில்லை, எழுந்து நிற்க முயன்றான்.

முழங்காலுக்குக் கீழே கால்கள் தொய்ந்து போய் விட்டது போல் உணர்ந்தான்.

விண்விண் என்று தலைக்குள் இடித்தது. மூளைக்குள் சரசரவென்று புகையும் பொறியுமாய் ஒரு திரி பற்றிக் கொண்டு எரிகிறது. ஒரு குண்டு வெடிக்கப் போகிறது. அதற்குள் இந்த இடத்தைவிட்டு ஓடிப் போய்விட வேண்டும்

நகர முடியவில்லை.

கடவுளே, என்னைக் காப்பாற்று!

கடவுள் வந்தார். அவனைக்கைத் தாங்கலாகப் பிடித்து நிறுத்தினார். மெல்ல நடத்திச் சென்று பூமலர் மெத்தையில் படுக்க வைத்தார்.

"யூ-வி-ல்-பி-ஆ-ல்-ரை-ட் தே-வ்-ஐம்-ஸா-ரி-ஸா-ரி- ஸாரி" பெர்னியின் குரலில் எழுத்து எழுத்தாகப் பேசினார்.

கடவுள் 'ஸாரி' என்கிறார் ஹஹ் ஹஹ் ஹா!

நான் சரியாகத்தான் இருக்கிறேன். நான் தூங்குகிறேன். தூங்கி எழுந்ததும்.., தூங்கி எழுந்ததும் தூங்கி எழுந்ததும்...

அதோ உட்கார்ந்திருக்கிறாளே நீளமாக கொள்ளிக்கட்டையை வாயில் செருகிக் கொண்டு; யாரவள்? எத்தனை பெரிய மார்பு!

அவள் அவனைப் பார்த்துச் சிரித்தாள். எவ்வளவு பெரிய வாய்! எவ்வளவு பெரிய பற்கள்!

"இட்ஸ்-நத்திங்- தேவ்-ஒ-ன்-லி-எ-வீ-பிட் -ஆஃப் - ஏ - ஞ் - ச ல் - டஸ்ட்."

கடவுள் மறுபடியும் பேசினார் பெண்குரலாக, ஸ்டெல்லாவின் குரலாகப் பேசினார்.

ஏஞ்சல் டஸ்ட்.

தேவதூதர்கள் வந்தார்கள், கறுப்பு உடையில் வந்தார்கள். எத்தனை பேர்? ஒன்று, இரண்டு, மூன்று,.. ஆயிரம், பதினாயிரம்..

இல்லை, இவர்கள் எல்லாம் எமகிங்கரர்கள். நான் செத்துப்போய் விட்டேன்.

"யூ பாஸ்டர்ட்ஸ்! யூ கில்ட் மீ..மீ..மீ.."

அவனுக்குக் குரல்போய்விட்டது கைகளால் துழாவிப் பார்த்தான். கைகள் இல்லை



காதில் மட்டும் ஒலி கேட்கிறது. பாட்டு..இசை..தேவகானம்..

ஆப் ஜைஸா கோயி மேரே ஜிந்தகி மே ஆயே தோ..பாத் பன் ஜாயே..யே..யே,

இது சினிமா பாட்டல்லவா? என்ன சினிமா?பகீஸா..நோ, வேறு ஏதோ ஒன்று!! ''ஹஹ்ஹாங் பாத் பன்ஜாயே..யே..யே''

அநத மூலையிலிருந்து அந்த ஸ்டீரியோ மேலே ஸீலிங்வரை உயரமாக நிற்கிறது, கண்ணைச் சிமிட்டியபடி பாடுகிறது. சொற்கள் மேலே எழும்பி மிதந்துஇறங்கி அவன் காதில் இனிமையாகப் பெய்கின்றன.

காதுகளைத் தேடினுன்

காதைக் காணும்!

முஞ்சியைக் காணோம்!!

எங்கே நான்!

அ-தோ- என்றார் கடவுள். பார்த்தான். அவன் உடல் அருகே விரிப்பின் மேல் சுருண்டு கிடந்தது. என்உடல்தானா அது! அதைவிட்டு வெளியே வந்து விட்டேனா?

கடவுளைப் பார்த்தான்.

பிள்ளையார் மாதிரி ஒரு சின்னப் புகை உருவம் வெளேரென்று இருந்தது.

இந்தப் பிள்ளையாரை எங்கே பார்த்திருக்கிறேன். வீட்டில் ஹாலில் மான்டில் பீஸ் மேடையின் மேல் உட்கார்ந்திருக்கும் அழகுப் பிள்ளையார்.. இந்தப் பிள்ளையாருக்கு தும்பிக்கை இல்லை

நோ இருக்கிறது. முகமே தும்பிக்கையாகி ஆட்டி ஆட்டி குரல் இல்லாமல் ஏதோ சொல்லுகிறது.

''நான் எங்கே இருக்கிறேன்?'' அவன் கேட்டான்.

குள்ளப் பிள்ளையார் வெள்ளைப் பந்தானார். தூரத்தில் போய் புள்ளியாக நின்றார்.

அவனை இருள் சூழ்ந்தது. இருட்டுக் குகையில் அடைபட்டதுபோல் மூச்சுத்திணறல். அவனைச்சுற்றிலும் பசபசவென்று ஒரு திரவம். அதில் அவன் மிதந்தான். இதமாக சூடாக வாசனையாக இருந்தது.

திடீரென்று குகை குலுங்கி சுருங்கியது. அவன் விசையுடன் உந்தித் தள்ளப்பட்டான்.

''பிள்ளையாரே நானும் வருகிறேன்...,''

தூரத்திலிருந்த ஒளிப் புள்ளி விரிந்து பெரிதாகி அவனை நோக்கி வேகமாக வந்தது. சூரியகோடிப் பிரகாசமாய் ஒளிர்ந்தது.

காந்த சக்தியாய் அவனை ஈர்த்தது. அவன் ராக்கெட் வேகத்தில் பறந்தான். ஆயிரம் பதினாயிரம் கோடி நட்சத்திரங்கள் பின்னோக்கிப் பறந்தன.

என்ன வேகம், என்ன வேகம்! ஒளிவட்டம் அவனைத் தழுவிக் கொண்டது....

வர்ணங்கள்.... எத்தனை விதம்? ஊதா.... நீலம்.... பச்சை... வானவில்லின் எழு வண்ணங்களும் ஒன்றோடொன்று இணைந்து இன்னொரு வண்ணமாகி.....

அவன் ஓவியன். அழகு அழகாக ஓவியங்களைத் தீட்டி காட்சிக்கு வைக்கிறான்.... சாரி சாரியாக தேவர்கள், முனிவர்கள், ஆழ்வார்கள்.... அவன் தீட்டிய ஓவியங்களைப் பார்த்து வியந்து வியந்து மகிழ்கின்றனர். அவன் ஒப்பற்ற கவிஞன்...கடவுளைத் தவிர வேறு யாரையும் பாட மாட்டான்.

''உயர்வற உயர்நல முடையவன்
எவனவன்
மயர்வற மதிநல மருளினன்



''ஊருக்குப் போன என் சம்சாரம் பத்துப் பக்கத்துக்கு ஒருபெரிய லெட்டர் எழுதி யிருக்கா''

''அப்படி யென்ன சமாசாரம்?''

''எல்லாம் நேரே வந்து விவரமாச் சொல்றேன்னு எழுதி யிருக்கா!''




குணம் அதேதான்! ஆனால் இப்போது தோற்றம் புதிது!

# காட்பரிஸ் போர்ன்விடா இப்போது அழகிய புதிய பேக்கிலே!

உங்கள் குடும்பத்தினர் அனைவரும் விரும்பிடும் இனிய சுவை. கோகோ, மால்ட், பால், மற்றும் சர்க்கரையின் நற்பண்புகள் நிறைந்தது போர்ன்விடா— இப்போது கவர்ச்சியான புதிய பேக்கிலே. முந்துங்கள்—வாங்குங்கள் புதிய டின் அல்லது புதிய ரீஃபில் பேக் போர்ன்விடா— தயாரித்து அருந்தி மகிழ்வீர்.




OBM/7833-TAM.

எவனவன்
அயர்வுறும் அமரர்களதிபதி
எவனவன்
.....எவனவன்.....
.......எவனவன்.....

இது யாரோ பாடிய பாட்டல்லவா? எப்போதோ கேட்ட திருவாய்மொழி....

நம்மாழ்வார் : திருவடிகளே சரணம்!

''ஆர்-யூ-ரெடி-டு-டை? - சாகத் தயாரா?''

நம்மாழ்வார் கேட்கிறுர்.

அவன் முன்னே காட்சிகள் விரிகின்றன.

எட்டு வயது. வீட்டின் மேல் மாடியில் ஒரு மச்சு. செங்குத்தான மரப்படிகள்; திட்டிக்கதவு; அதைத் தூக்கிச் சாய்த்துவிட்டு மேலே ஏற வேண்டும்.

மச்சில் அவனும் தோழன் தாமுவும் சினிமா பார்த்துக்கொண்டிருக்கிறுர்கள். ஜன்னல் கதவை மூடிஞல் ஓட்டை வழியாக எதிர் சுவரில் சதுரமாய் வெளிச்சம் விழும். அங்கே வெள்ளைத் துணியைக் கட்டிவிட்டால் அதன்மீது நிழலாக உருவங்கள் தெரியும். தெருவில் மனிதர், வண்டிகள் மாடுகள், தெரு நாய் கறுப்பன்....

# அறிவியல்

## பெண் என்ருல் பேர்ச்சு .

மனிதனை 'விலங்கு' என்ற வகைப்பாட்டின் கீழ் வைத்து எண்ணிப் பார்க்க முடியவில்லை தான். ஆனுலும், உயிரியல் ரீதியாக நோக்கும்போது மனிதனும் ஒரு விலங்கு தானே? பாலூட்டிகளிலேயே ஆண் வர்க்க ஆதிக்கம் மனித இனத்தில் தான் உச்சநிலையில் காணப்படுகிறது.

இந்தியாவில் இன்னும் கேவலம். ஆண் குழந்தைகள் குலவை ஒலி முழங்க வரவேற்கப்படுகின்றன. ஆனுல், பெண் குழந்தைகள் வெறுக்கப்படுகின்றன.

70 கோடி மக்கள் தொகையில் பெண்கள் ஆண்களை விட 2.4 கோடி பேர் குறைவாக உள்ளனர்.! சராசரி ஆயுள், நோய்ப்பாதிப்பு என்று அந்த அம்சத்திலும் பெண்களுக்கு இரண்டாம் இடம் தான். எழுத்தறிவு விகிதத்தில் இன்னும் மோசம். பெண்களின் எழுத்தறிவு விகிதம் ஆண்களில் பாதிதான்.

இந்தநிலையில் இன்னெரு சோதனை! கருத்தரித்து 16-வது வாரத்திலிருந்து 20-வது வாரத்திற்குள் கருவில் வளரும் குழந்தை ஆணு, பெண்ணு என்பதை அறிவதற்கான சோதனை இப்போது உருவாக்கப்பட்டுள்ளது. இந்திய சட்டப்படி இந்தக்கால கட்டத்திற்குள் கருச்சிதைவு செய்து கொள்வது குற்றமல்ல. பெண் குழந்தைகளுக்கு மேலும் ஒரு வேதனை!

கருவில் வளரும் குழந்தை ஆணு, பெண்ணு என்று அறிவதற்கான சோதனை அரசு மருத்துவமனைகளில் தடை செய்யப்பட்டுள்ளது. இதுபோல் தனியார் மருத்துவ மனைகளிலும் அதைத் தடை செய்ய வேண்டாமோ?

எல்லாம் தலைகீழாய்ப் போய்க் கொண்டிருந்தார்கள். சிரித்துச் சிரித்து மாளவில்லை.

திடீரென்று திரையின் ஒருமுனை அறுந்தது. அவன் அதைச் சரிப் படுத்த ஓடினான். திட்டிக்கதவு திறந்திருந்தது. இருட்டில்தெரிய வில்லை. பள்ளத்தில் கால்வைத்து படிகளில் இடித்து இடித்து கீழே விழுந்தான். இரண்டு மணிநேரத் துக்குப் பின்புதான் நினைவு திரும் பியது. அதுவரை அவன் சாவின் மடியில்.....

இன்னொரு காட்சி.

20 வயது. மோட்டார் சைக்கிள் வாங்கின புதுசு. பீச் ரோடில் எண்பது மைல் வேகத்தில் பறக் கிறான். வேகம்...வேகம்...வேகம்.

குறுக்கே ஒரு கிழவர். இடது பக்கம் ஒடித்தான். நடைபாதை விளிம்பில் இடித்து மேலே பறந் தான். பதினைந்து அடி தள்ளிப் போய் விழுந்தான். தலை சிமெண்டு பெஞ்சில் மோதி ரத்தம் கொட்டி யது.

ஆக்ஸிஜன் கொடுத்து ஒன்பது பாட்டில் ரத்தம் கொடுத்து அவனை உயிர்ப்பித்தார்கள்.

''என்னை வாழ வைக்கும் தெய் வமே. இந்த முறையும் என்னைக் காப்பாற்றி விடு!....'' (தொடரும்)

---

## ஜப்பானைப் பார்த்துக் கற்றுக்கொள

மூக்கில் விரல் வைத்து வியக்கும் வேகத்தில் ஜப்பான் முன் னேறிக் கொண்டிருக்கிறது. ஐரோப்பிய நாடுகளிலெல்லாம் போட்டி போட்டுக் கொண்டு ஜப்பானுடன் வர்த்தக உடன்படி க்கை செய்து கொள்கின்றன. தொழில் உறவு ஏற்படுத்திக்கொள்ள அஞ்சுகின்றன.

காரணம் என்ன? அவர்களுடைய தொழில்துறை ஒழுக்கம், சுதேசிப் பொருட்களையே பயன்படுத்துவது என்ற வெறி, அறி வியல் தொழில்நுட்பம் உட்பட எல்லாநிலைகளிலும் தாய் மொழி யையே பயன்படுத்துவது என்ற வணங்காணம!

இவைமட்டுமல்ல. ஜப்பான் நாட்டில் மக்கள் தொகையில் 1000-க்கு 118 பேர் அறிவியல் மற்றும் தொழில்நுட்ப வல்லுனர் கள். (இந்தியாவைப் பொறுத்த வரையில் இந்தக் கணக்கு 1000 பேருக்கு 3.2 பேர் என்பதுதான்!) ஜப்பானைப் பார்த்து நாம் கற்றுக் கொள்வோமோ?

## விண்வெளியில் இந்தியர் ..

விரைவில் ஒரு இந்தியர் விண்வெளியில் வலம் வரப்போகிறார். ஒரு இந்திய சோவியத் விண்வெளி ஒப்பந்தம் இதற்கு வகை செய்துள்ளது.

விண்வெளி ஆராய்ச்சியில் இந்திய அறிவியல் அறிஞர்களும் சோவியத் அறிவியல் அறிஞர்களும் இணைந்து செயலாற்றுவது இது முதல் முறையல்ல. ஆனால், சல்யூட் விண்வெளிக் கலத்தில் சோவியத் விண்வெளி வீரர்களுடன் ஒரு இந்திய விண்வெளி வீரர் இணைந்து பறக்கப் போவது இதுதான் முதல்முறை!

சோவியத் வீரர்களுடன் விண்வெளியில் பறப்பதற்காக தேர்ந் தெடுக்கப்பட்டிருக்கும் இந்திய வீரர்கள் 'ஸ்டார் சிடி'யில் இப் போது பயிற்சி பெற்றுக் கொண்டிருக்கின்றனர். குறைந்தது இரண்டு ஆண்டுகள் இவர்கள் பயிற்சி பெறுவர். இவர்களில் ஒருவர் தான் விண்வெளியில் பறப்பார்.

**வே. தமையந்திரன்**

# புத்துணர்ச்சிதரும் தூய சுவாசம்...
# உறுதிமிக்க, ஆரோக்கியமான பற்கள்



## அளித்திடுதே கோல்கேட் டென்டல் க்ரீம்

ஒவ்வொரு சாப்பாட்டிற்குப் பிறகும் கோல்கேட் கொண்டு உங்கள் பற்களைப் பிரஷ் செய்யுங்கள். உலகெங்கும் பல் டாக்டர்கள் சிபாரிசு செய்வதைப் போலவே அது பற்களைப் பாதுகாக்கிறது.

உங்கள் பற்களுக்கிடையே தங்கியுள்ள உணவுத் துணுக்குகளில் பாக்டீரியாக்கள் வளர்கின்றன. இவை வாய் துர்நாற்றத்தையும், பிறகு வலிமிக்க பற்சிதைவையும் உண்டாக்கும்.

எனவே சாப்பிட்டு முடித்தவுடனேயே கோல்கேட் முறையில் பற்களைப் பிரஷ் செய்யுங்கள். அது புத்துணர்ச்சியுடன் இனிய சுவாசத்தைத் தருவதற்கும், பற்களுக்கு வெண்மையளிப்பதற்கும், பற்சிதைவை எதிர்ப்பதற்கும் மிகவும் சக்தி வாய்ந்தது என்று நிரூபணமாகியுள்ளது.

நம்பகமான, கோல்கேட்டின் செயல் புரியும் முறை:



உணவுத் துணுக்குகள் பற்களுக்கிடையே சிக்கிக் கொள்வதால் துர்நாற்றத்தையும், பற்சிதைவையும் உண்டாக்கும் பாக்டீரியாக்கள் வளருகின்றன.



கோல்கேட்டின் ஒப்பற்ற, செயல்புரியும் நுரை ஆழ ஊடுருவிச் சென்று உபாதை தரும் உணவுத் துணுக்குகளையும் பாக்டீரியாக்களையும் அகற்றி விடுகிறது.



பயன்: கவர்ச்சிமிக்க வெண்மையான பற்கள், தன்னம்பிக்கை தரும் இனிய சுவாசம், பற்சிதைவுக்கெதிராகப் பாதுகாப்பு.

கோல்கேட்டின் புத்துணர்ச்சி தரும், பெப்பர்மின்ட் சுவை பல்துலக்குவதை ஒரு இன்ப அனுபவ மாக்குகிறது.

**கோல்கேட் டென்டல் க்ரீம்**
**உபயோகித்து**
**வாய்துர்நாற்றத்தைத்**
**தடுத்தி டுங்கள்**
**பற்சிதைவை**
**எதிர்த்திடுங்கள்**






DC.G.74 TM

# தாலாட்டும் பாசமெனத் தவழும் மென்மை!



உலகிலே இணையேதும் இல்லாதது உங்கள் பாப்பா... அதற்குத் தேவை: இணையேதும் இல்லாத பவுடர்— அதுதான் ஜான்ஸன்ஸ் பேபி பவுடர்.
இன்பக் களஞ்சியமாம் உங்கள் பாப்பா, இடர்ப்படவும் கூடும் : ஈரத்தில் ஊறும் போது... இளம் பிஞ்சு மேனிக்கு எரிச்சல், உரசல், இடைஞ்சல்.
பிஞ்சுமேனியைப் பேணுவதில் ஜான்ஸன்ஸ் பேபி பவுடருக்கு நிகரேதுமில்லை. தூய்மை கொஞ்சும் மென்னயமுடன் சிறப்புறத் தயாரிக்கப்பட்டது ஜான்ஸன்ஸ் பேபி பவுடர்— அதிகமாக ஈரம் போக்கிடும்— பாப்பாவுக்கு இதுவே பாசமுணர்த்திடும் பவுடர்.
ஆம்! உங்கள் அரவணைப்பே பாப்பாவின் உலகம். துணி மாற்றும்போது ஈரமறியா மழமழப்போடும், குளிப்பாட்டியதும் சொகுசான புத்துணர்வோடும் பேண, தூவுவீர் ஜான்ஸன்ஸ் பேபி பவுடர். அதுவே அன்பின் அரவணைப்பு—நீங்கள் நேரிலில்லாத போதும் அதுவே உங்கள் நினைவு முகம்.




குழந்தை பராமரிப்புக் கைப் புத்தகம் வேண்டுவோர் எழுதுக இம் முகவரிக்கு: ஜான்ஸன் & ஜான்ஸன் லிட், (C.I.C.22) 130, Forjett Street, Bombay-400 036.

## உலர் நயமுடன் குளுகுளு சுகம்- ஜான்ஸன்ஸ்* பேபி பவுடர்

Trade Mark © J & J 82

LINTAS-J & J-19-2721 TM

# ஏஞ்சல் டஸ்ட்



கி. கஸ்தூரிரங்கன்

## 3. ஸ்டெல்லா

தி வான்மீது தேவ் மரக்கட்டையாகக் கிடந்தான். பெர்னி அருகே அமர்ந்து ''தேவ், தேவ்'' என்று அவனைத் தொட்டு அசைத்தான். மூக்கின் அருகே கை வைத்துப் பார்த்தான்.

பெர்னியை பீதி கவ்வியது. குனிந்து தேவ்வின் மார்பில் காதை வைத்துக் கேட்டான். இருதயத் துடிப்பு லேசாக...மிக லேசாக... ஊஹூம். துடிப்பே இல்லை.

''ஸ்டெல்லா!'' என்று அலறினான் பெர்னி.

ஸ்டெல்லா டேப்-டெக்கின் அருகே ஒரு குஷன் நாற்காலியில் அரை போதையில் சாய்ந்திருந்தாள். அவள் கையில் சிகரெட் புகைந்து கொண்டிருந்தது. சரஸ் திணித்த எட்டாவது சிகரெட்

''ஸ்டெல்லா!'' மீண்டும் கத்தினான் பெர்னி.

''எஸ், மை பிரதர்!'' ஸ்டெல்லா தடுமாறியபடி எழுந்து வந்தாள்.

''தேவ் இஸ் டெட்! செத்து விட்டான்!''

''ஓ மை!'' என்றாள் ஸ்டெல்லா மார்பில் விரல்களால் சிலுவை வரைந்தாள். ''மே ஹிஸ் ஸோல் ரெஸ்ட் இன் பீஸ். அன்னாரது ஆன்மா சாந்தி அடைவதாக!'' என்றாள்.

பெர்னி அவளது தலைமயிரைப் பிடித்து உலுக்கினான்.

''பிசாசே.. அவனைக் கொன்றுவிட்டாய். இப்போ என்ன செய்கிறது?''

''டோன்ட் பி எக்ஸைட்டட் மை பிரதர். தட் டிரக் இன் தி கேக் கான்ட் கில் ஹிம். ஹி இஸ் ஆன் எ ட்ரிப். ஹி வில் ரிடர்ன் இன் ஒன் ஹவர்(பதட்டப்படாதே. கேக்கில் இருந்த மருந்து அவனைக் கொல்லாது. அவன் கனவுப் பிரயாணத்தில் இருக்கிறான். ஒரு மணியில் எழுந்து விடுவான்!)'' என்றாள் ஸ்டெல்லா.

''நான் அதுவரை காத்திருக்கப் போவதில்லை. இங்கே அவன் செத்துப் போனால் நானும் நீயும் தூக்கில் தொங்க வேண்டும். டு யூ நோ தட்?''

ஸ்டெல்லா தோள்களைக் குலுக்கி உதட்டைப் பிதுக்கினாள். மீண்டும் குஷன் நாற்காலியைச் சரணடைந்து இன்னொரு சிகரெட்டைப் பற்ற வைத்தாள்.

பெர்னி அவளை முறைத்தான். அவனது ஒரே தங்கை. நான்கு வயது சின்னவள். நினைவு தெரிந்து 20 வருடங்களாக அவனுடன் பழகினவள். அவளை இன்னும் அவனுக்குப் புரியவில்லை.

அவளுடைய துணிச்சலை, அலட்சியப் போக்கை அவன் வியந்தான். அவளிடம் ஒளிந்திருந்த போக்கிரித்தனம், குற்றம் செய்யவும் தயங்காத துணிச்சல்! அவனுக்கு அவ்வப்போது கவலையளித்தது.

இந்த குணத்தை அவள் அப்பாவிடமிருந்து தான் பெற்றிருக்க வேண்டும். அப்பா குடித்துக் குடித்தே கல்லீரல் கெட்டுப் போய் செத்தார். அவர் இறந்த போது அவனுக்கு 10 வயது. அம்மா தான் அவர்களை வளர்த்து ஆளாக்கினாள். அப்பா விட்டுச் சென்ற ஒரே சொத்து பிராட்வே சந்து ஒன்றில் இருந்த 'ம்யூஸி ம்யூஸிக்கல்ஸ்'' கடை. இசைத்தட்டு விற்கும் கடை. அதை நிர்வகித்து வந்த மானேஜர் பிரும்மானந்தத்திற்கு அப்போதே 70 வயசாகி விட்டது.

இசைத்தட்டுக்கள் என்றால் பாகவதர், முசிறி என்று கர்நாடக சங்கீதமும், பீத்தோவன் மோஸார்ட் என்று மேற்கத்திய இசையும் தான் என்பது அவர் நினைப்பு.



பீட் இசையும் சினிமா டப்பாப் பாட்டுக்களும் அதிகம் விற்பனை யாகும் சூழ்நிலையில் 'ம்யூஸி ம்யூஸிக்கல்ஸ்' வியாபாரம் செழிக்க வில்லை.

கடையை யாருக்காவது விற்று விடலாம் என்று அம்மா முயற்சி செய்து பார்த்தாள். அதற்குள் அவளுக்குள் புரையோடிக் கொண்டிருந்த கான்சர், அவளது வாழ்க்கையில் கண்ட ஏமாற்றத்தின் மொத்த உருவம், அவளைக் கொன்று விட்டது.

பெர்னி அப்போது சுமாராகப் படித்து கல்லூரியில் கடைசி வருடத்தில் இருந்தான். ஸ்டெல்லா மெட்ரிகுலேஷனை எட்டிஇருந்தாள். அவள் ஒழுங்காகப் பள்ளிக்குப் போய் வந்ததே அதிசயம். அம்மா தான் அவளை மிரட்டி வெருட்டி வகுப்பில் போய்ச் சேர்ப்பாள்.

அம்மா செத்துப் போனதும் ஸ்டெல்லாவுக்கு விடுதலை கிடைத்த மாதிரி இருந்தது! அவளுக்கும் சேர்த்து பெர்னிதான் அழுதான்.

இருபது வயதில் ஒரு விவரம் தெரியாத தங்கையுடன் நிராதரவாக விடப்பட்டான் பெர்னி. ம்யூஸிகல்ஸைவிற்றால் கூடசேர்ந்து போயிருந்த கடனுக்கே சரியாகப் போயிருக்கும். வீட்டு வாடகையே ஆறுமாதம் பாக்கி நின்றது.

பம்பாயில் ஒரு மாமா அம்மாவின் தம்பி செயலாக இருந்தார். அவரிடம் போய்விடலாம் என்று பெர்னி யோசித்தான்.

''அம்மா செத்ததற்கு கூட அந்த பாஸ்டார்ட் வந்து பார்க்கவில்லை. அவனிடம் போவதாவது' என்ற ஸ்டெல்லா ஆட்சேபித்தாள். உண்மைதான். மாமா. என்ன, அப்பாவின் போக்கினால் எந்த உறவும் ஒட்டவில்லை. பின் பிழைப்புக்கு என்ன செய்வது?''

''லெட் அஸ் டேக் ஓவர் தி ஷாப் மானேஜர் கிழத்தை வீட்டுக்கு அனுப்பு'' என்றாள் ஸ்டெல்லா.

---

## ஒரு 'ஜீப்'பான விஷயம்....



1937 ஆம் ஆண்டு அமரிக்க கார்ட்டூன் சித்திரக்காரர் ஈ.ஸி. ஸாகர் என்பவர் தன்னுடைய புகழ்பெற்ற போபேயி கார்ட்டூன் சித்திரங்களில் 'யூஜீன் தி ஜீப்' என்ற ஜந்துவை அறிமுகப்படுத்தினார். இது பாதி நாய். மீதிப் பகுதி எல்லாம் பல்வேறு மிருகங்களின் தொகுப்பு! ஆர்கிட்ஸ்என்ற செடிகளைத் தின்று வளரும் இது நினைத்தால் பிறர் கண்களில் படாமல் அந்தர்த் தியானம் ஆகும் வல்லமை பெற்றதாம்! மிகக் கடுமையான உழைப்புக்கும் பெயர் பெற்றது இது. நாளடைவில் இந்தச் சித்திரமும் இதன் பெயரும் பெரும் புகழ் அடைந்து விட்டது. இதற்கு சில ஆண்டுகளுக்குப் பின்னர் ஓகியோவைச் சேர்ந்த ஒருமிலிட்டெரிகாண்ட்ராக்ட்காரர் 4 ஆசனங்களோடு 11 அடி நீளத்துடன் திறந்த டாப்புடன் கூடிய ஒரு மோட்டார் வண்டியைத் தயாரித்தார். அது காடு, மேடு பள்ளம், என்று பாராமல் எங்கும் சுற்றும் தகுதி பெற்றிருந்தது. அமெரிக்க ராணுவத்தினருக்கு அந்த வண்டிப் பிடித்துப் போய் விடவே அது போல வண்டிகளுக்கு எக்கச்சக்க ஆர்டர்கள் கொடுத்து விட்டது! மிகக் கடுமையான உழைப்புக்குப் பெயர் பெற்ற '' ஜீப்பின் '' பெயரை இந்த வண்டிக்குச் சூட்டி விட்டார்கள். இப்படிப் பெயர் சூட்டியவர்கள் அமெரிக்க ராணுவ சிப்பாய்கள்தான்!

நளினி சிவராமன்



# இப்பொழுது மதர்ஸ் ஸ்பெஷல்... உங்கள் குழந்தைக்கு, அவன் விரும்பிய அளவு ஊட்டம் தரும் தாய்ப்பாலை நீங்கள் அளித்திட உதவி செய்கிறது.

உங்களது தாய்ப்பால் உங்கள் குழந்தைக்கு முதல் 6 மாதங்களுக்குத தேவையான எல்லா ஊட்டச்சக்தியையும் அளிக்கவல்லது.

உங்கள் குழந்தைக்கு எல்லாவற்றிலும் சிறந்த பரிசுத்தமான உணவு தாய்ப்பால்தான். மேலும், தாய்ப்பால் மிகவும் எளிதில் ஜீரணிக்கக்கூடியது. உங்கள் குழந்தைக்கு முதல் 6 மாதங்களுக்குத் தேவையான முழுமையான ஊட்டச் சக்தியைத் தாய்ப்பால் அளிக்கிறது. தவிர, தாய்ப்பால் உங்கள் குழந்தையின் நோய் எதிர்ப்புச்சக்தியை வளர்க்கிறது.

அதனுல்தான், நீங்கள் உங்கள் குழந்தைக்கு முதல் 6 மாதங்களுக்காவது தாய்ப்பால் அளிக்க வேண்டிய அவசியத்தை டாக்டர்கள் அறிவுரை செய்கிருர்கள்.

**எதனுல் மதர்ஸ் ஸ்பெஷல் ?**

நீங்கள் தாய்ப்பால் அளிக்கும் போது உங்கள் உடலிலுள்ள ஊட்டச்சக்தியை உங்கள் குழந்தைக்கு அளிக்கிறீர்கள்.
இதனுல் உங்களுக்கு அதிக அளவு ஊட்டச் சக்தி தேவைப்படுகிறது. இந்த அதிக அளவு ஊட்டச் சக்தியைப் பெற்று உங்கள் குழந்தைக்கு அவன் விரும்பிய அளவு ஊட்டம் தரும் தாய்ப்பாலை அளித்திட உதவி செய்வதற்காக மதர்ஸ் ஸ்பெஷல் பிரத்யேகமாகத் தயாரிக்கப்பட்டுள்ளது.

மதர்ஸ் ஸ்பெஷல், தாய்ப்பால் அளிக்கும் தாய்மார்களுக்கு தேவையான அதிக அளவு ஊட்டச் சக்தியைப்பற்றி உலக ஆரோக்கிய அமைப்பின் (WHO) பரிந்துரைப்பை ஆதாரமாகக் கொண்டு பிரத்யேகமாகத் தயாரிக்கப்பட்டுள்ளது.

ஒவ்வொரு 100 கிராம் மதர்ஸ் ஸ்பெஷலும் அளிப்பது :

| | | | |
|---|---|---|---|
| சக்தி | 450 kcals | வைட்டமின் B12 | 1.25mcg |
| புரதச் சத்து | 9.0g | வைட்டமின் C | 50.00mg |
| வைட்டமின் A | 3750 I.U | நைக்கோட்டனிக் ஆஸிட் | 9.25mg |
| வைட்டமின் D | 750 I.U | ∴போலிக் ஆஸிட் | 250.00mcg |
| வைட்டமின் B1 | 0.50mg | கால்ஷியம் | 1.50g |
| வைட்டமின் B2 | 1.00mg | | |

பாலில் கலந்த மதர்ஸ் ஸ்பெஷலை ஒவ்வொரு நாளும் இரண்டு முறை, தொடர்ச்சியாக குறைந்தது முதல் 6 மாதங்களுக்காவது அல்லது அதற்குப் பின்னர் நீங்கள் தாய்ப்பால கொடுக்கும் வரையிலும் அருந்த வேண்டும்.

தாய்ப்பால் அளிக்கும் தாய்மார்களுக்கு டாக்டர்களால் சிபாரிசு செய்யப்படுவது.




**மதர்ஸ் ஸ்பெஷல்**

**ஹார்லிக்ஸ் தயாரிப்பாளர்கள் அளிப்பது**

HTD-HMM-7512

# அனுபவித்தால் தான் தெரியும்

## உயிர் தப்பினேன்

"பகைவர்களின் படையெடுப்பால் ஆலயம் சிதைந்து போய்க் கிடக்கும் காட்சியமைப்பு. இருளும் புகையும் மண்டிக் கிடக்க, ஆலய மணி மட்டும் காற்றில் அலைக்கழிக்கப்பட்டு 'டாண் டாண்...' என்று ஓசையை எழுப்பிக்கொண்டிருக்கிறது. சாய்ந்து, சரிந்த ஒரு தூணுக்கடியில், ஐந்து வயதுக் குழந்தை, கையில் கோயில் பிரசாதத்துடன் இறந்து கிடக்கிறது. பகைவரின் தாக்குதலில் உடலெல்லாம் ரத்தக்காயங்களோடு, திருமலை மன்னன் குழந்தையைக் காப்பாற்ற கோயிலினுள் புகும் கட்டம்.... இறந்த குழந்தையைக் கண்டு அம்மனிடம் கதறி நெஞ்சு வலி மிகுதியால், தானும் அந்தக் குழந்தையைக் கட்டி அணைத்தபடி இறக்கும்-நாடகத்தின் இறுதிக்காட்சி!

திருமலை மன்னனாக நடித்த நான் அந்த உயிரை விடும் காட்சி

---

பரமானந்தம் சந்தோஷமாகவே போனார். பல மாதங்களாய் சம்பளமே வராத வேலையிலிருந்து விடுதலை கிடைத்தது அவருக்குத் திருப்திதான்.

கடையில் விற்பதற்கும் அதிகம் இல்லை. ஸ்டெல்லா எச்.எம்.வி. போலிடார் நிறுவனங்களிடம் நேரடியாகப் போய்ப் பேசினாள். பாபுலர் டேப்புகளை கடனுக்கு வாங்கி வந்தாள். எல்விஸ் ப்ரீஸ்ட்லி முதல் எட்டி ராபிட்ஸ்வரை ஆல்பங்களை வாங்கி வைத்தாள். ஹிந்தி தமிழ் சினிமா ரிகார்டுகள் காஸெட்டுகள் இவற்றையும் சேர்த்துக் கொண்டாள். டிஸ்கோ கிளப்புகள், ஹோட்டல்களுக்கு நேரே சென்று விற்றாள்.

ஒரே ஆண்டில் கடை சுறுசுறுப்பாக இயங்க ஆரம்பித்து விட்டது. ஆனால் லாபம் என்று அதிகமாக வரவில்லை. ஸ்டெல்லாவுக்குப் பொறுமையில்லை.

மலிவாக டேப்புகளை வாங்கி உரிமைப் பதிவு பற்றி கவலைப் படாமல் காப்பி யெடுத்தாள். அசல் காஸெட் 60 ரூபாய் என்றால் காப்பிகள் ரூ. 35 ரூபாய்க்கு விற்க முடிந்தது. அதிகம் விற்பனையாகி அதிக லாபம் கிடைத்தது.

பெர்னி அவள் பேச்சுக்கு மறுப்பு சொல்வதை விட்டுவிட்டான். அவள் எது செய்தாலும் சரியாகத் தான் இருக்கும் என்ற மரியாதை அவளிடம் ஏற்பட்டு விட்டது.

இதுவே ஸ்டெல்லாவின் விபரீதப் போக்குக்கு லைசென்சாயிற்று. அவளுக்கு டிஸ்கோ மோகம் ஏற்பட்டது முதல் இராவெல்

யில் உயிரைக் கொடுத்து நடித்துக் கொண்டிருந்தேன்! அப்பொழுது தான் அந்த எதிர்பாராத சம்பவம் நடந்தது. மேலே காட்சியமைப்பிற்காக கட்டப்பட்டிருந்த ஒரு 'பெரிய மர ரோலர்' கம்பியிலிருந்து நழுவி வேகமாகக்கீழே விழ- மின்னல் வேகத்தில் நான் நகர அது என் தலையில் விழாமல் இடுப்பைத் தாக்கிவிட்டு கீழே விழுந்து உருண்டது! எதேச்சையாக நான் கவனித்திராவிட்டால் என் பின் மண்டையை அந்த 'ரோலர்' தாக்கி- அந்த சரித்திர நாடகத்தின் இறுதிக் காட்சியோடு என் சரித்திரமும் முடிந்திருக்கும்!

பெருத்த ஓசையுடன் தூண்கள் சாய்வதும், இடி மின்னல் போன்ற 'எபெக்டு'களுடனும் மேற்படிகாட்சியை நான் அமைத்திருந்ததால் அந்த 'ரோலர்' விழுந்ததை பார்வையாளர்கள் வித்தியாசமாக எடுத்துக்கொள்ளவில்லை. நல்லவேளை, குழந்தையாக நடித்த அந்தசிறுவயதுப்பெண்ணும் கண்ணை மூடியபடி (இறந்துபோய்!) படுத்திருந்ததால் இதைக் கவனிக்கவில்லை. வேதனையுடன் நடிக்க வேண்டிய எனக்கு உண்மையில் வேதனை தாள முடியவில்லை. இடுப்பு வலி 'விண்விண்'ணென்று தெறிக்க, பேசவேண்டிய வசனத்தை உருக்கமாகப் பேசி முடித்து விழுந்து இறந்தேன்(!)

கரவொலி கொட்டகையதிர, நாடகம் முடிந்ததற்கு அறிகுறியாக முன்திரை மெல்ல மெல்ல இறங்கியது. உள்ளே- நாடக மேடையில் கீழே விழுந்த என்னால் எழுந்து நிற்கமுடியவில்லை. ஒப்பனையையும், உடைகளையும் என்னால் சரியாக கழற்றக்கூட முடியவில்லை.... பிறகு ஆஸ்பத்திரியில் எக்ஸ்ரே. இடுப்பு எலும்பில் ஒரு விரிசல்-இரண்டு மாத கட்டாய ஓய்வு.... இதுபோன்ற எத்தனையோ ஆபத்துகளைச் சந்தித்தாலும்... உயிரோடு மேடையில் நடித்து, பார்வையாளர்கள் மத்தியில் 'கரவொலி' வாங்கி 'சபாஷ்' பெறும்போது ஏற்படும் சுகம்..... ஓ....அதை அனுபவித்தால்தான் புரியும்!

கோவை-2, கலைக்கண்ணன்.

---

லாம். கூத்தாடி விட்டு வந்தாள். ''லேட்டஸ்ட் ஹிட்'' எதுவென்று அங்கே போனால் தான் தெரியும்!'' என்று நியாயம் கற்பித்தாள்.

அவளுக்கு 'பாய் பிரண்ட்ஸ்' ஏற்பட்டு கடைக்கு அடிக்கடி வர ஆரம்பித்தனர். ஒரு வெள்ளைக்கார ஹிப்பிஅரைச் செங்கல்அளவு ஹஷிஷ் கொண்டு வந்தான். ஸ்டெல்லாவிடம் பத்திரமாக வைத்திருக்கச் சொல்லிப் போனவன் வரவேயில்லை.

ஸ்டெல்லா அதைத் துண்டு போட்டு விற்றாள். அந்தச் செங்கல் மட்டும் ரூ. 2500 சம்பாதித்துத் தந்தது. அது முதலாக மரியூவானா எல்.எஸ்.டி., என்ற போதைப் பொருள்கள் கடத்துபவர்கள் விற்பவர்கள் உபயோகிப்பவர்கள் ம்யூஸி ம்யூஸிகல்ஸை வட்டமிடலாயினர்.

தினம் 200 முதல் 300 ரூபாய் வரை வருமானம் உயர்ந்தது.

பெர்னி இதுபற்றி அச்சப்பட்டான். ஆனால் ஸ்டெல்லாவை மீறி ஒன்றும் செய்ய முடியவில்லை. பிறகு அவன் வீட்டிலேயே 'பாட் ஸெஷன்'கள் ஏற்பட்டன. மிகவும் அந்தரங்க நண்பர்கள், ஆணும் பெண்ணும், சனிக்கிழமை இரவுகளை அங்கே கழித்தார்கள்

''சில்லம்'' புகைத்தார்கள். எல் எஸ்.டி. விழுங்கினார்கள். 'பீட்' இசைக்குக் குதித்தார்கள். ஸ்டெல்லாவும் அவர்களுடன் சேர்ந்து ஆடினாள், போதையில் இறங்கினாள். அவளைத் திருத்துவதற்கு திருமணம் ஒன்றுதான் வழி என்று பெர்னி நினைத்தான். ஆனால் அந்தப் பேச்

செந்தமிழ் நாடெனும் போதினிலே...



இன்ப நரசூஸ் மணம் வீசுது
நாசியிலே!

ஜீவனுள்ள ஒரே காபி!

**நரசூஸ்**

"தெர்மலோ" காபி!

**நரசூஸ்**
**காபி கம்பெனி**
சேலம் 636007.
கிளைகள்: தமிழகமெங்கும்.

ADWAVE/NCC/1977

சை எடுத்ததுமே அவள் வெட்டி விடுவாள்.

''மிஸ்டர் ரைட்மேன் வரட்டும்! அதுவரை அந்தப் பேச்சே வேண்டாம்'' என்றாள்.

இதோ இங்கே மரவட்டையாகச் சுருண்டு கிடக்கும் தேவ் ஆறுமாத காலமாக வந்து போய்க் கொண்டிருக்கிறான். பெர்னியின் கல்லூரித் தோழன். நகரில் மோட்டார் உறுப்புக்கள் மொத்த விற்பனை செய்யும் கம்பெனியின் அதிபர் அவனுடைய அப்பா. ஒரே பிள்ளை. லட்சம் லட்சமாக சொத்து இருக்கிறது.

இவனைத்தான் ஸ்டெல்லா தனது 'ரைட்மேன்' என்று வரித்துக்கொண்டாள். அவளுடைய சகவாசம் தேவ்வுக்கு ஒரு போதையூட்டும் அனுபவமாக இருந்தது. அவனோடு அவள் மிகவும் நெருங்கிப் பழகினாள். அவனுக்கே அவள் என்னும் அளவுக்கு விசுவாசமாக இருந்தாள்.

ஆனால் பெர்னி அப்படி நினைக்கவில்லை. சாதிக் கட்டுப்பாடுகள் மிகுந்த ஒரு ஹிந்துவாகப் பிறந்தவன், பெரிய சொத்துக்கு ஒரே வாரிசாக இருப்பவன் ஸ்டெல்லா போன்ற பெண்ணை மணந்துகொள்ளக்கூடிய புரட்சிக்காரனாக இருப்பான் என்று அவன் நம்பவில்லை. ஸ்டெல்லாவையும் எச்சரித்தான்.

இப்போது ஏமாற்றம் தாளாமல் எதையோ கொடுத்து—

பெர்னி யோசித்தான்.

தரையில் தேவ்வின் திருமண அழைப்பிதழ் கிடந்தது. அதை எடுத்துப் பார்த்தான். ''டாக்டர் எம். வி. மகரபூஷணம் எம்.பி. பி.எஸ்.எம்.டி.யின் மூத்த புதல்வி திருவளர்ச் செல்வி தேவகி...'' எந்த டாக்டர் மகரபூஷணம்?....

டெலிபோன் டைரக்டரியை புரட்டினான். ஒரே ஒரு மகரபூஷணம். அவர் டாக்டர். அபிராமபுரத்தில் வீடு. லஸ்ஸில் கிளினிக்.

பெர்னி ஒரு முடிவுக்கு வந்தான்.

வாசல் கதவைத் திறந்து எட்டிப் பார்த்தான். பிசுபிசுவென்று மழை பெய்து கொண்டிருந்தது. முன்னிரவுக் கருப்பு. தெரு விளக்குகள் அழுது வடிந்து கொண்டிருந்தன. தேவ்வின் ஜாவா மோட்டார் சைக்கிள் விசுவாசமுள்ள நாயைப் போல மௌனமாக உறுத்துப் பார்த்துக்கொண்டு நின்றது.

பெர்னி ரெயின் கோட்டை எடுத்துவந்தான். மோட்டார் சைக்கிளை படியோரமாக நிறுத்தினான். உள்ளே வந்தான். தேவ்வை அலக்காகத் தூக்கிக் கொண்டான். பைக்கில் பின் சீட்டில் குதிரை சவாரியில் அமர்த்தினான். தேவ் சரிந்தான்.

''ஸ்டெல்லா!'' என்று கூப்பிட்டான் பெர்னி.

ஸ்டெல்லா வந்தாள்.

பெர்னி மோட்டார் சைக்கிளின் முன் சீட்டில் அமர்ந்து தேவ்வைத் தன் முதுகில் சாய்த்துக்கொண்டான்.

''ரெயின் கோட்டை அவன் மேல் போர்த்திவிடு'' என்றான் பெர்னி. ஸ்டெல்லா போர்த்தினாள். நீளமான பெல்டை தன் உடலில் சேர்த்துக் கட்டினான் பெர்னி.

''இவனை எங்கே எடுத்துப் போகிறாய்?'' என்று ஸ்டெல்லா பொறுமையிழந்து கேட்டாள்.

''அவனுடைய வுட்-பி, தேவகி வீட்டுக்கு. அப்பா டாக்டர். இவனுக்கு உயிர் இருந்தால் பிழைக்க வைத்துவிடுவார்.'' மோட்டார் பைக்கை பாய்ச்சலாகச் செலுத்தி இருளில் மறைந்தான் பெர்னி.

அவன் போன திசையை பார்த்தபடி சற்று நேரம் நின்றாள் ஸ்டெல்லா.

பிறகு தள்ளாடியவாறே வீட்டுக்குள் சென்று கதவைத் தாளிட்டாள். திவான் மீது குப்புற விழுந்தாள். குமுறி அழுதாள்.

(தொடரும்)

ஒவ்வொரு மாதமும் இரண்டாவது ஞாயிற்றுக்கிழமை நட்சத்திரங்களுக்கு விடுமுறை. அன்று படப்பிடிப்புகள் இடையாது. முன்னறிவிப்பின்றி திடீரென்று சிலரின் வீடுகளுக்குச் செல்ல நினைத்தோம். முதலில்....

## மாதவி

நேரம் : காலை 7-45

சோம்பலாய், சோர்வாய் தூங்கிக் கொண்டிருந்தார் மாதவி. படுக்கையறைக்குள் நுழைந்ததும் முதலில் கண்ணில் பட்டவர் மாதவியின் தங்கை கீர்த்தி. "ஐய்யோ, பிரஸ் பீப்பிள் வந்திருக்காங்க" என்று கீர்த்தி அவசரமாய் மாதவியை உலுக்க, பக்கத்தில் விசுவாச நாய் மாதவியின் இடுப்பைப் பிராண்டிக் கொண்டிருந்தது. 'பிளாஷ்' வெளிச்சம் பார்த்ததும் சட்டென்று நாய் குரைத்துத் திரும்ப, கண் விழித்தார் மாதவி. அன்று அவருக்கு எப்படியோ!

## வைரமுத்து

நேரம் : காலை 8-30

ரேடியோவில் ஒலிபரப்பான தன் பாடலை பிரேமையோடு கேட்டுக் கொண்டிருந்தார் வைரமுத்து. மனைவி பொன்மணியும், குழந்தைகளும் உறவினர் வீட்டுக்குச் சென்று விட வைரமுத்து ஃப்ரீ!

"என்ன பாட்டு அது? மனசுக்குப் புடிச்ச பாட்டா?"



# ஏஞ்சல் டஸ்ட்

கி. கஸ்தூரிரங்கன்



## 4. பெர்னி

தூறல் ஊசிகள் முகத்தில் பாய்ந்தன. சட்டைக் காலருக்குள் புகுந்து உடம்பில் வழிந்து கால்களில் சிலிர்த்து இறங்கின. 30 அடிக்கு ஒரு தெரு விளக்கு விழித்துப் பார்த்து 'எச்சரிக்கை' சொல்லி நழுவியது.

சாலையின் நடுமையத்தில் மஞ்சள் கோட்டை ஒட்டி ஜாவாவை சீராக 40 கிலோ மீட்டரில் செலுத்திப் பறந்தான் பெர்னி.

ஹைரோடைப்பிடித்து எழும்பூர் மேம்பாலம் வந்தாயிற்று. மூன்று பக்கங்களிலும் ஒற்றை இரட்டை ஒளிக்கற்றைகள் பெர்னியை மறுத்து மீறிச் சென்றன. ஒரு ஃபியட்டின் சிவப்பு விளக்கைப் பற்றிக் கொண்டான். ஸ்டர்லிங் ரோடு வரை கொண்டுபோய் விட்டது. இடதுபுறம் ஒடித்து ஒரு த்ரீ-டன்னர் பின்னே ஊர்ந்து ஜெமினி மேம்பாலம் வரை வந்துவிட்டான். மழை வலுத்து விட்டது. இடையே புகுந்து விளையாடிய சுழற காற்று முகத்தில் நீரை வாரியடித்தது.

பெர்னி மோட்டார் சைக்கிளுடன் மேம்பாலத்தின் அடியில் ஒதுங்கினான். இறங்க முடியாது. பெல்டை அவிழ்த்து தேவின் உடலை இறக்கி ஏற்ற வேண்டியிருக்கும்.

அந்த உடலில் உயிர் இல்லை என்று பெர்னி தீர்மானித்துக் கொண்டிருந்தாலும், ஸ்டெல்லாவின் பேச்சில் நம்பிக்கை வை என்று உள்ளுணர்வு சொல்லிற்று.

மருந்தின் போதை பற்றி அவளுக்கு அதிகம் தெரியும். அவள் சொன்னபடியே தேவ் சிறிது நேரத்திற்குள் உணர்வுகள் மீண்டு எழுந்து விடுவான்.

"எழுந்து விட வேண்டும் ஓயேசுவே. இனிமேல் இப்படி நேரவிடமாட்டேன்" என்றுபெர்னி மனமுருகி வேண்டிக் கொண்டான்.

மனதில் மண்டியிருந்த பீதி தணிந்து விட்டது போல் தோன்றியது. செத்துப் போகுமுன் அம்மா ஸ்டெல்லாவை அவன் கண்டிப்புடன் பாதுகாத்து வளர்க்கவேண்டும் என்று சொன்னாள்.

"மைஸன். ஸ்டெல்லாவுக்கு குணம் நேராயில்லை. அவள் இஷ்டப்படி விட்டுவிட.தே." கடைசி

இருமல்களுக்கிடையே அவள் சொன்ன வார்த்தைகளை அவன் காப்பாற்றவில்லை.

அவன் தான் தங்கையின் இஷ்டப்படி கேட்டு நடக்க வேண்டிய சூழ்நிலையை அனுமதித்து விட்டான்.

இனி இப்படி விட்டுவிடப் போவதில்லை. அவளை அடக்கித் திருத்தி நேர்வழிக்குத் திருப்ப வேண்டும். முதல் வேலையாக இந்தப் பாழாய் போன பாட்டுக் கடையை விற்றுவிட்டு இருவருமே கோவாவுக்குப் போய் விட வேண்டும்.

வேண்டாம். அதுவும் போதை மனிதர்களின் முகாமாகிவிட்டது. வேறு எங்காவது நல்ல சூழ்நிலை உள்ள ஊருக்கு, முடிந்தால் அயல் நாட்டுக்குப் போய்விடலாம்.

அவனதைப்போன்ற ஆங்கிலோ-இந்தியக் குடும்பங்கள் பல இங்கிலாந்துக்கு குடியேறிவிட்டன. அப்பா இருந்தபோது லண்டன் போகக்கூடிய வாய்ப்பு இருந்தது. அப்பாவுக்குநன்றாக வயலின் வாசிக்கத் தெரியும்.

லண்டனில் ஒரு ஆர்க்கெஸ்ட்ரா குழுவில் அவர் சேருவதற்கு நண்பர் ஒருவர் அழைப்பு அனுப்பியிருந்தார். அப்பாவுக்கு ம்யூஸிகல்ஸை மூடிவிட்டுப் போக மனசில்லை.

''இங்கே எனக்கு நானே எஜமானன். அங்கே போய்100பேருக்கு நடுவில் ஒருவன் கையாட்டலுக்குப் பிடில் வாசிக்க வேண்டும். ஐ டோன்ட் லைக் இட்!'' என்று மறுத்துவிட்டாராம். அம்மா சொல்லியிருக்கிறாள்.

நினைவு தெரிந்தது முதல் அவன் அறிந்த அப்பா ஒரு குடிகாரன். தினமும் குடித்தார். தினமும் அம்மாவுடன் சண்டை. அவன் கிடைத்தால் அவனையும் அடிப்பார். அவர் கண்முன்னே வருவதைத் தவிர்த்தான். அவரை வெறுத்தான்.

ஸ்டெல்லா பிறந்த பிறகு அப்பாவுக்கு கொஞ்சம் பாச உணர்ச்சி வந்தது. பொறுப்பும் வந்தது.

ஆனால் அதற்குள் 'ம்யூஸிகல்ஸ்' நேர் செய்ய முடியாத நிலைக்கு மந்தமாகிவிட்டது. அப்பாவின் ஸிர்ரோஸிஸ் அவரைத் தின்னத் தொடங்கிவிட்டது. இரண்டு வருடம் அவஸ்தைப்பட்டு செத்துப் போனார்.

அப்பாவைப் பார்த்து அவர் வழக்கங்களை வெறுத்தான். அம்மா



வுடன் சர்ச்சுக்குப் போனான். படுக்கப்போகுமுன்பு மண்டியிட்டுப் பிரார்த்தனை செய்தான்.

சமூகத்தின் தீய சக்திகளிடம் ஒதுங்கி ஒதுங்கி பயந்தவனாகவே வளர்ந்துவிட்டான். நேர்மாறான குணங்களை வளர்த்துக்கொண்டுவிட்ட ஸ்டெல்லாவைக் கண்டிக்கும் துணிச்சல் இன்றுவரை வரவில்லை. இனி—

மழை நின்று தூறல் பிசுபிசுத்துக்கொண்டிருந்தது.

பெர்னி மோட்டார் சைக்கிளை உதைத்தான். கிளம்பவில்லை.

இறங்கித்தான் சரி பார்க்க வேண்டும். தேவ்வை இறக்கி எங்கே வைப்பது?

பார்ப்பவர்களின் கேள்விகளுக்கு என்ன பதில் சொல்வது?



சற்று முன்பு தணிந்து போயிருந்த பீதி மீண்டும் அவன்நெஞ்சை நிரப்பி அழுத்தியது.

பெர்னி தேவ்வைப் பிணைத்திருந்த பெல்ட்டை அவிழ்த்தான். ஒரு கையால் அவனைப் பிடித்துக்கொண்டே ஸ்டார்ட்டரை உதைத்தான். டப்டப் என்றது. நின்றது. மீண்டும், மீண்டும்...... கிளம்பவில்லை.

பெர்னி சுற்றுமுற்றும் பார்த்தான். வாகனங்கள் பறந்தன. பாதசாரிகள் எதிர் பிளாட்பாரத்தில் போய்க்கொண்டிருந்தார்கள்.

ஒரு மோட்டார் சைக்கிள் அவனருகே படபடவென்று வந்தது. தயங்கியது. ஒரு நாற்பது வயசுகாரர்காக்கி மழைக் கோட்டு அணிந்திருந்தார். அருகே வந்து தோரணையாக நின்றார்.

"ப்ளீஸ், கான் யூ ஹெல்ப் மீ; ஐ'ம் ஸ்டக்."

"வாட்ஸ் தி பிராப்ளம்?" என்று கேட்டபடி இறங்கினார். தலையில் தொப்பி, காலில் கம்பூஸ். பெர்னிக்கு சொரேர் என்றது.

"நீங்கள் போலீஸ்காரரா?"

"ஆமாம். எஸ். ஐ. க்ரைம் பிராஞ்ச்."

பெர்னியின் நெஞ்சு தடக்தடக்கென்று அடித்துக்கொண்டது. எச்சிலைக் கூட்டி விழுங்கினான்.

"வாட்ஸ் ராங் வித் யுவர் ஃபிரண்ட்."

"ஒண்ணுமில்லை. ஹீ இஸ் ஒகே. ஜஸ்ட், ஜஸ்ட்."

"குடித்திருக்கிறார் இல்லையா?"

"ஆமாம், ஆமாம் ஹிஹாஸ் பாஸ்ட் அவுட். ஹிவில்பி ஆல்ரைட்."

'பர்மிட் வைத்திருக்கிறீர்களா?'

"என்ன பர்மிட்? மோட்டார் சைக்கிளுக்கு லைசென்ஸ் இருக்கிறது!"

"அதைக் கேட்கவில்லை. குடிப்பதற்குப் பர்மிட் இருந்தால் காண்பியுங்கள்."

"இன்ஸ்பெக்டர் நான் குடிக்கவில்லை. இவன் தான் அளவுக்கு மீறிக் குடித்து இப்படி இருக்கிறான். அவனை வீட்டில் சேர்க்கவேண்டும். அங்கே அவனுடைய பர்மிட் இருக்கும்."

"வீடு எங்கே?"

பெர்னி புளுகினான்.

"கிரீன்வேஸ் ரோடு நம்பர்—— வீடு."

"மினிஸ்டருடைய வீடா. இவர் அவருடைய பையனா?"

"ஆமாம் ஸார். சின்னதுரை. துரை என்று கூப்பிடுவோம்."

"ஐ ஸி" என்று இன்ஸ்பெக்டர் யோசித்தார். கையிலெடுத்த நோட் புக்கையும் பேனாவையும் திரும்பப் பாக்கெட்டிற்குள் போட்டுக்கொண்டார்.

சின்னதுரையை வாழ்த்தினான் பெர்னி. துரையும் அடிக்கடி

---

## 'கண்ணான பறவை!



புரு வளர்க்கும் ஜெட் ஜான்ஸன் 65 வயதுக்காரர். விபத்தொன்றில் தன் இரு கண்களையும் இழந்தும், பந்தயங்களில் தன் வளர்ப்புகளை ஈடுபடுத்துகிறார். இந்த வகையில் 40 பறவைகளை வளர்க்கிறார். லண்டன் முழுவதும் நடக்கும் பந்தயங்களில் கலந்துகொள்ளச் செய்யும் பறவைகளை தன் தொடு உணர்ச்சி மூலம் இன்னின்னது என்று தெரிந்துகொள்கிறார்.

—'டிட்பிட்ஸி'லிருந்து: ஆர். சச்சிதானந்தம்.



# தில்லி முல்லு

## ஆர்வியின் கோப்பு

ஜனாதிபதி பதவிக்கு தன்னுடைய பெயர் பரிசீலிக்கப்பட்டும் கிடைக்காமற் போனது குறித்து ஆர். வி.க்கு ஏமாற்றம். காரணம் அவரைப்பற்றிய கான்ஃபிடன்ஷியல் ரிபோர்ட்தானாம். மே மாதமே அவரைப்பற்றி குறிப்புக்கள் வேண்டுமென்று பிரதமர் பணித்தார்.

இன்டலிஜன்ஸ் பீரோவின் தென் மாநில துணை டைரக்டர் இதற்காக டில்லிக்கு வரவழைக்கப்பட்டார். ஒரே வாரத்தில் 'ஆர். வி.' டைலை அவர் தயாரித்துத் தந்து விட்டாராம்.

சென்னையில் காமராஜ் முதல்வராக இருந்தபோது தொழில் வளர்ச்சித் துறை அமைச்சராக இருந்தது முதல், ஸ்வராஜ்யாவின் ஆசிரியராகி, பின் பார்லிமெண்ட் உறுப்பினராக இந்திரா கட்சியில் சேர்ந்ததுவரை அவருடைய வாழ்க்கைக் குறிப்புக்கள்அடங்கிய இந்தக் கோப்பு நேராகப் பிரதமரின் பார்வைக்கே போயிற்றாம்.

ஆர்விக்கு நிறைய பிளஸ் பாயிண்டுகள் உண்டு. இந்திரா பதவி இழந்தபோது எதிர்தரப்பில்

---

வீட்டிற்கு வந்து போகிறவன்தான். ஊரிலிருக்கிற கெட்ட பழக்கம் எல்லாம் அவனுக்கு உண்டு.

வீட்டில் ஸ்டெல்லா சேர்க்கும் கும்பலை பெர்னி வெறுத்தான். சட்ட விரோதமான காரியங்களைப் பார்த்துப் பயந்தான். ஆனால் இதுவரை அவளை மீறி எதுவும் சொல்லவில்லை.

"மினிஸ்டர் வீட்டுப் பிள்ளையே நம் கையில்? ஏன் வீணாக உலட்டிக் கொள்கிறாய்?" என்று அவன் வாயை அடக்கி விட்டாள் ஸ்டெல்லா.

இப்போது அந்தச் சின்னதுரை அவனைக் காப்பாற்றி விட்டான்.

"இவனைக் கொஞ்சம் பிடித்துக் கொள்ளுங்கள். பிளக்கில் தண்ணீர் போய்விட்டது போலிருக்கிறது."

இன்ஸ்பெக்டர் தேவ்வைப் பிடித்துக் கொண்டார். பெர்னி ப்ளக்கைக் கழட்டி சுத்தம் செய்து திரும்பவும் மாட்டினான்.

ஒரே உதையில் பைக் கிளம்பி விட்டது.

"தாங்க்யூ இன்ஸ்பெக்டர் பைபை" பைக்கில் ஏறி தேவ்வை பழையபடி முதுகில் சாய்த்துக் கொண்டு கிளம்பிவிட்டான்.

இன்ஸ்பெக்டர் யோசனையுடன் நின்றார். மோட்டார் சைக்கிளில் நம்பரை மனதில் பதிய வைத்துக் கொண்டு தன் வழியே சென்றார்.

மணி 8.30. லஸ்ஸா அபிராமபுரமா என்று பெர்னி யோசித்தான். டாக்டர் அநேகமாக வீட்டுக்கு திரும்பிவிடும் நேரம்தான். அபிராமபுரமே போய்விடலாம்.

தேவ்வை அந்த வீட்டில் சேர்க்கும் போது அங்கே உள்ளவர் கேள்விக்கு என்ன பதில் சொல்வது என்று அவன் இன்னும் யோசிக்கவில்லை.

"குடித்துவிட்டு வழியில் கிடந்தான். உங்கள் பெயரை இவன் லகையில் மாரேஜ் இன்விடேஷனில் பார்த்தேன். இங்கே கொண்டு வந்தேன்.

பேஷ் என்று தன்னையே மெச்சிக் கொண்டான். எரியல் குட் ஸமா

அரசின் எதிர் காலம் மங்கிப் போன நிலையில் அவருக்கு பக்கபலமாக வந்து சேர்ந்தவர். ஆர்.வி. வேலையில் கெட்டிக்காரர்.

லஞ்சம் ஊழல் கறைபடாதவர். இப்படிப் பல.

ஆனால் பெரிய மைனஸ் பாயிண்டாக அமைந்தது அவரது 'சுய ராஜ்யா' தலையங்கக் கட்டுரைகளே. எமெர்ஜென்சிக்கு முன்பாக சில வாரங்கள் கொள்கை ரீதியில் இந்திராவைக் கண்டித்து எழுதியிருந்தார். இந்த ஒரு பாயிண்டில் ஜனாதிபதி பதவி இவருக்கு இல்லை என்று முடிவாகிவிட்டதாம்.

இந்தக் கோப்பை தயாரித்த டிபுடி டைரக்டர், ராஜாஜி காலத்தில் போலீஸ் கமிஷனராக இருந்தவரின் மகன். பிரதமரிடமதான் இன்னும் இந்தக் கோப்பு இருக்கிறதாம்.

புது தில்லிக்கு 20 கிலோ மீட்டர் தூரத்திலிருக்கும் ''மெஹ்ரோலி'' எனும் கிராமத்தில் பிரதமர் இந்திராகாந்தியின் ஐந்து ஏக்கர் பண்ணை இருக்கிறது. சோனியா காந்தி மாதா மாதம் ஓரிரு நாள் இக்கிராமத்திற்கு விஜயம் செய்து தனது கணவர் ''ராஜீவ்ஜி''யுடன்

அமெரிக்காவிலிருந்து 'வெல் வெல்ட்' கலரில் ரோஜாப்பூ மாதிரி பூக்கும் ஐந்தாறு செடிகளைக் கொண்டுவந்துள்ளார். பூசா இ ''சிடியூட்டிலிருந்தொரு''ஃபுளோரிஸ்ட் சைன்டிஸ்ட்'' தருவிக்கப் பட்டு அவருடைய கண்காணிப்பிலேயே இந்தச் செடிகள் நடப்பட்டதாம்.

இந்தப் பண்ணையை நிர்வகிக்கும் பொறுப்பு பிரதமரின் செயலாளராக இருந்த யஷ்பால் கபூரிடம் தரப்பட்டிருக்கிறது.

---

ரிட்டன்! அவனுடைய கருணையை மெச்சி அவனை வாழ்த்தவும் செய்வார்கள்!

சி. பி. ராமஸ்வாமி ரோடு மூன்றாவது கிராஸ் தெருவில் இந்த வீடு இருந்தது. பெர்னி இரு புறமும் நோட்டம் விட்டுக் கொண்டே பைக்கை நிறுத்தாமல் தெருக்கோடி வரை சென்றான்.

மத்தியில் ஒரு வீடு வெள்ளைப் பலகையில் கறுப்பு வர்ணத்தில். டாக்டர் எம். பி. மகரபூஷணம் எம்.பி.பி.எஸ்.எம்.டி. என்ற அறிவிப்புடன் நின்றது. பலகைக்கு வெளிச்சம் காட்டி ஒரு சின்ன பல்ப் எரிந்து கொண்டிருந்தது.

பெர்னி மோட்டார் பைக்கை திருப்பினான். எஞ்சினை ஆஃப் செய்தான். பைக் இறக்கத்தில் தானாக ஓடியது. பலகை பதித்த கேட் வாசலில் நின்றான்.

வீடு 20 அடி உள்ளே தள்ளியிருந்தது. ஒரு போர்ட்டிகோ. பித்தளைப் பிடிகள் பொருத்தப் பட்ட அகலமான தேக்கு மரக் கதவு. உள்ளே கார் எதும் நிற்கவில்லை. டாக்டர் இன்னும் திரும்பவில்லை.

மாடியில் பால்கனி. அதை ஒட்டி அறைகள், ஓர் அறையில் மட்டும் வெளிச்சம் தெரிந்தது.

மேலே கீழே அக்கம் பக்கம் யாருமில்லை.

பெர்னி இறங்கினான். கேட் சத்தமில்லாமல் திறந்தது. தேவ்வை ஒரு கையால் பிடித்தபடி பைக்கை உருட்டிச் சென்றான். போர்டிகோவின் தூணை ஒட்டி நிறுத்தினான். இன்னமும் மூச்சு பேச்சில்லாமல் இருந்த தேவ்வை இப்போது தூண் தாங்கிக் கொண்டது.

பெர்னி மழைக் கோட்டை எடுத்து தன் மேல் இழுத்துப் போர்த்திக் கொண்டான். கேட்டைத் திறந்தபடியே வைத்து விட்டுதெருவில் இறங்கி நடந்தான். கோடி வரை போனவன் நின்று திரும்பிப் பார்த்தபோது டாக்டர் வீட்டுக்குள் ஒரு ஸ்கூட்டர் நுழைந்து கொண்டிருந்தது. —தொடரும்.



# ஏஞ்சல் டஸ்ட்

கி. கஸ்தூரி ரங்கன்

## 5. தேவகி

தேவ் வராத மாலைகள் எல்லாம் வெறுமையாகி வேதனைப்படுத்துவது வழக்கமாகி விட்டது. அதுவும் வருகிறேன் என்று நேரம் குறிப்பிட்டுச் சொல்லிவிட்டு வராமற் போனது தேவகிக்குப் பெரும் ஏமாற்றமாக இருந்தது.

மாலை ஐந்தரை மணி முதலே பால்கனியில் வந்து நிற்பதும் உள்ளே போவதுமாக இருந்தவளை தங்கைகள் கேலி செய்தனர். வீடு நிறைய உறவினர்கள். 'நான்கு நாள் முன்னதாக வந்திருந்து' என்பதை யதார்த்தமாகவே எடுத்துக் கொண்ட சித்தி அவளது பெண்கள் இருவர் பெங்களூரிலிருந்து வந்திருந்தார்கள். ஒரு மாமாவின் குடும்பம் மசூலிப்பட்டினத்திலிருந்து முகாம் போட்டிருந்தது. அத்தை உள்ளூரிலேயே இருப்பவள். ஆனால் அவளது இரண்டு பெண்களுக்கும் இங்கே தான் ஜோலி.

நாளெல்லாம் சள சளவென்ற பேச்சும், கேலியும் கும்மாளமுமாக பொழுதுகள் சுவாரசியமாகப் போயின. மாலையிடப் போகிறவன் அநேகமாக ஒவ்வொரு மாலையும் தவறாது வீட்டுக்கு விஜயம் செய்து அவளைக் கூட்டிக்கொண்டு ஊர் சுற்றி வருவது பழைய தலைமுறையினருக்கு ஆச்சரியமாக இருந்தது.

''இந்தக் காலத்துப் பசங்களுக்கு கல்யாணத்துக்கு முன்னாலேயே எல்லாம் ஆயிடுது. ஆனாலும் இத்தனை அவசரம் கூடாதடி அம்மா!'' என்று நொடித்தாள் பாட்டி. மாமாவுடன் தங்கியிருப்பவள், மதராசுக்கு வந்து போவது அபூர்வம்.

''எல்லாம் என்றால் என்னவெல்லாம் பாட்டி?'' என்று சீண்டினாள் சித்தியின் பெண் சுநந்தா.

''தேவகியைக் கேட்டுப்பாரேன். தினம் தினம் என்னவெல்லாம் அனுபவிக்கிறாள் என்று?'' என்று பாட்டி ஏவிவிட்டாள்.

அதிலிருந்து இளசுகள் எல்லாம் அவளைச் சூழ்ந்துகொண்டு, ''எங்கே போனீங்க; அவர் எப்படிப் பார்த்தார். தொட்டாரா? எங்கெல்லாம் தொட்டார். அப்ப உனக்கு எப்படி இருந்தது..... முத்தம் கொடுப்பாரா..'' அத்தை பெண் 16 வயதின் கேள்விகள் இவை. ''சீ போடி இவளே. ஆனாலும் உனக்கு ரொம்ப

கியூரியாசிடி'' என்று தேவகியின் ஆதரவாக தங்கை சுபா வருவாள்.

''சொன்னா என்னவாம்? நாம்பளும் சந்தோஷப்படலாமோ இல்லியோ? இவ சொல்லாமப் போனா அத்தானையே கேட்டுட்டுப் போறேன்.''

''அடி அடீ, அப்படியெல்லாம் கேட்டுவிடாதேடி'' என்று தேவகி கெஞ்சுவாள்.

''அப்படி வா வழிக்கு நேத்திக்கு எங்கே போனே அவரோடே!''

''சினிமா போனோம்?''

''என்ன சினிமா? காதல் ஜோடிகள்! கரெக்ட்?''

''இல்லை ஜங்கிள்புக்! உன்னை மாதிரி நிறைய குரங்கு வந்து குதித்துப் பாட்டுப் பாடுது.''

''உக்கும். ரீல் விடாதே. நீ சொல்லாட்டி நானே சொல்லட்டுமா என்ன நடந்தது என்று!'' இது சுநந்தா. எப்போதுமே வாய் துடுக்கு அவள்.

''சொல்லுடி சொல்லுடி'' என்று பெண்கள் எல்லாம் சுற்றிக் கொள்வார்கள்.

சுநந்தா நீட்டி முழக்கிக் கொண்டு ஆரம்பிப்பாள்.

''அத்தானோடே இவ மேற்காலே போனா இல்லையா? எங்கே போயிருப்பா?''

''பீச்சுக்கு!''

''சீ, அது கிழக்காலே இல்ல இருக்குது. மேற்காலே போனா தியேட்டருக்குப் போனாங்கன்னு அர்த்தம். எந்தத் தியேட்டர்?''

''கோடம்பாக்கம் ராம் தியேட்டர்.'' அத்தை பெண் ஜலஜா.

''அட எப்படீடி உனக்குத் தெரியும்?'' என்று தேவகி வாயைப் பிளப்பாள்.

''அங்கே தானே டப்பா படம் ஓடுது? பால்கனி கிளாஸ்லே கூட்டமே இருக்காது. அத்தானும் அக்காவும் இருட்டுலே.....'' சுநந்தா அபிநயத்துடன் வர்ணிப்பாள்.

'ஹய்யோ ஹய்யோ' என்று எல்லாம் கும்மாளமிட்டு சிரிக்கும். இது தினமும் தேவ் வந்து போன பிறகு இரவு பனிரண்டு மணிவரை நடக்கும் கூத்து.

அம்மா வந்து ''படுக்கப் போங்கடி என்னடி ஆட்டம் பாதி ராத்திரியிலே!'' என்று அதட்டி விரட்டும் வரை கும்மாளம் தான்.

தேவகிக்கு இதெல்லாம் இனித்தது. வெளியே நிறைய வெட்கப்பட்டாள். உள்ளுக்குள் சிரித்தாள்.

அந்தக் கும்மாளம், பூரிப்பு இன்று இல்லை. தேவ் வரவில்லை.

வீட்டில் அத்தனை பேரும் திசைக்கொரு கும்பலாய் வெளியே போய்விட்டனர். இளசுகள் எல்லாம் ஈராஸ் சினிமாவில் ஏதோ படம் பார்க்கப் போயிருக்கிறது.

அம்மா மாமாவையும், பாட்டியையும் அழைத்துக் கொண்டு கபாலி கோயிலுக்குப் போயிருந்தாள். அப்பா கிளினிக்கைவிட்டு திரும்ப 9-30 ஆகும்.

வீட்டில் சமையல்காரி கோமதியம்மாவும் அவளும்தான். கோமதி கீழே அடுப்படியில் வேலையாக இருந்தாள். இப்போதெல்லாம் அவளுக்கு மூச்சுவிட முடியாமல் சமையல் அறை வேலைகள். 18 வயதிலேயே வீட்டுக்கு சமையல்காரியாக வந்தாள். கல்யாணமாகி கணவனை இழந்து அனாதையாக இங்கே தஞ்சம் புகுந்தவள். 40 வருடமாக இங்கேயே குடும்பத்தோடு குடும்பமாய் நிலைத்து விட்டாள்.

பிள்ளைகளை எல்லாம் தாய்க்கும் மேலாக பரிவு காட்டி வளர்த்தாள். அம்மாவுக்கு சமர்த்துப் போதாதென்று கோமதியின் தீர்ப்பு. சமையல் பொறுப்பில் இருந்து கடை கண்ணி போவது குழந்தைகளைப் பள்ளிக்கூடம் அனுப்புவது வரை எல்லாப் பொறுப்பையும் கோமதியே பார்த்துக்கொண்டாள்.

அபிராமபுரம் மாதர் சங்கத் தலைவியாக அம்மாவுக்குப்



பொறுப்பு ஏற்பட்டு விட்டது. என் வீட்டு விவகாரம் அத்தனையும் கோமதியிடம் விட்டு விட்டாள்.

தேவகிக்கு காலா காலத்தில் கல்யாணம் ஆக வேண்டுமே என்று கோமதியம்மா தான் அதிகம் கவலைப் பட்டாள்.

''தங்கக் கிளியாட்டம் பொண்ணு. பருந்து மாதிரி ராட்சசன்கள் பார்த்திண்டே இருக்கிற காலம். டாக்டருக்கும் நேரமில்லே. அவர் ஆம்படையாளுக்கும் சமர்த்துப் போருது. இந்தப் பொண்ணுக்கு எங்க விதிச்சிருக்கோ!'' என்று தினம் புலம்புவாள். தேவகியை குளிப்பாட்டும்போதும் தலை வாரிவிடும் போது அவளிடம் இருந்து இம்மாதிரி பொருமல்களைக் கேட்டுத்தான் ஆக வேண்டும்.

தனக்குக் கல்யாணம் ஆகாதோ என்ற பயம் கூட தேவகிக்கு ஏற்படுவதுண்டு. அம்மாவின் காதிலும் கோமதியின் புலம்பல்கள் விழுவதுண்டு.

''இந்தப் பாப்பாத்திக்கு வேற வேலையேயில்லே. எம் பொண்ணுக்கு மாப்பிள்ளை தேடிப் போகணுமா என்ன? தானு வந்து நிப்பான் பாரு!'' என்பாள் அவள்.

கோமதி பிராமண விதவை. சைவப் பிள்ளை குடும்பத்தில் இத்தனை தூரம் ஒன்றிப் போய் விட்டது ஆச்சரியம்தான்.

''எனக்கு மாமியார்க்காரி இவதான்'' என்று அம்மா நொந்து கொண்டாலும் கோமதி இல்லாவிட்டால், அவளுக்குக் கை ஒடிந்தது மாதிரி ஆகி விடும்.

''கோமதி அம்மா இது நல்லா இருக்குதான்னு பாரேன்'' என்று அவளைக் கேட்டுவிட்டுத் தான் புடவை நகை எதையும் வாங்குவாள்.

தேவகியைக் கேட்டு தேவ்வின் அம்மா வந்து நின்ற போது கோமதி தான் துருவித் துருவி அவர்களது குடும்ப நிலவரத்தைப் பற்றி விசாரித்தாள்.

''ஒரே பையனும். படிச்சவன். 10 லட்சம் சொத்து இருக்கு. சொந்த வியாபாரம். வேறென்ன வேணும்?'' என்ருர் அப்பா

''அதெல்லாம் சரி தான். இத்தனை பணமும் சீரும் உள்ள குடும்பத்துப் பசங்களுக்குக் கெட்ட பழக்கம் எல்லாம் சேர்ந்திருக்கும். நன்ளு விசாரிச்சுட்டுத்தான் சம்பந்தம் வச்சுக்கணும்.'' என்று எச்சரித்தாள் கோமதியம்மா.

தேவ் பெண் பார்க்க வந்த போது அது பற்றிய சிந்தனையே மறந்து போயிற்று. நல்ல உயரம், கவர்ச்சியான தோற்றம்..துருதுருவென்று பார்த்தான். அழகாய் சிரித்தான்.

வீட்டில் எல்லோருக்குமே அவனைப் பிடித்தது அண்ணு பாஸ்கரனைத் தவிர.

அவனுடைய நண்பன் ஒருவன் தொங்கு மீசை வைத்துக் கொண்டு ரஜினி ஸ்டைல் தலையுடன் அடிக்கடி வருவான். அவனைத் தான் தேவகி கட்டிக் கொள்ள வேண்டும் என்பது அவனுடைய விருப்பம். தொங்கு மீசை நன்ருக கிரிக்கெட் ஆடுவான். ராஞ்சி வரை போயிருக்கிறன் 'டெஸ்ட் 'காப்'புக்காக காத்திருக்கிருன்.

கவாஸ்கர் கூட அவனைத் தட்டிக் கொடுத்து அடுத்த சான்ஸ் உனக்குத்தான் என்று சொல்லியிருக்கிருராம்.

அண்ணு ஒரு கிரிக்கெட் பைத்தியம். சுமாராக ஆடுவான். அட்லீஸ்ட் ஒரு கிரிக்கெட் ஹீரோவின் மைத்துனஞக வேண்டும் என்று அவனுக்கு ஒரு லட்சியம் இருக்கும் போலிருக்கிறது.

மற்றபடி தொங்கு மீசைக்கு படிப்போ, நல்ல உத்தியோகமோ, எதுவுமில்லை.

தேவகிக்கு அவன் மூஞ்சியே பிடிக்கவில்லை. தன்னை கபிலதேவ் என்று நினைத்துக் கொண்டிருந்தான். ஆனல் அவனது நீளமான தாவாங்கட்டையும், மூக்கும் தொங்கு மீசையும் இந்தி வில்லன் நடிகன் ஒருவனை நினைவூட்டின. தேவகியை தேடித் தேடி வந்து பேசுவான். அவனைக் கொஞ்சம் கூட அவளுக்குப் பிடிக்கவில்லை.

''அண்ணு, உனக்கு கோடிப் புண்ணியமுண்டு. அந்த தொங்கு மீசையை வீட்டுக்கு கூட்டியா ராதே!'' என்று சொல்லிவிட்டாள்.

''அவனுக்கு என்ன குறைச்சல்? சினிமா ஹீரோ மாதிரி அவன் இல்லங்கிறியா! ஹீஸ் கோயிங் டு பி எ இண்டர் நேஷனல் ஹீரோ.''

''எனக்கு ஒரு ஹீரோவும் வேண்டாம். நிம்மதியா விடு''. என்று அவனை விரட்டி விட்டாள். பாஸ்கருக்கு இதனல் கோபம்.

தேவ்வை கணவனுக அவள் வரித்து விட்டதில் அவனுக்கு ஏமாற்றம் தான்.

''ஹீ மே பி ரிச். பட் ஹீ இஸ் நோ படி'' என்று விமர்சித்தான்.

''பட் ஹீ ஈஸ் மை ஓன் ஹீரோ'' என்னுடைய இதய சாம்ராஜ்ஜியத்தின் சக்கரவர்த்தி என்று தேவகி நினைத்துக் கொண்டாள்.

தேவ் தினமும் வந்து அவளை வெளியே கூட்டிச் செல்வதை கோமதியும், பாஸ்கரனும் ஆட்சேபித்தனர். ஆனல் அம்மாவே அவர்களுக்குப் பதில் சொல்லி விட்டாள்.

''நிச்சயம் ஆகிப் போச்சு.. மாரேஜ் ஒரு பார்மாலிட்டிதானே? தேவகி அப்படி ஒண்ணும் தப்புப் பண்ற பொண்ணு இல்ல'' என்று அனுமதி வழங்கிளுள்.

தேவ்விடம் அவள் ஜாக்கிரதையாக இருக்க வேண்டிய அவசியம் ஏற்பட வில்லை. மிகவும் கனிவுடன் மரியாதையுடன் பழகினுன்.

மோட்டார் சைக்கிளில் போகும் போது பாதுகாப்பு சாக்கில் அவளே தான் அவனை அணைத்துக் கொண்டாள். தனிமையில் இருக்கும்



"பிஞ்சிலே பழுத்த பழம்னு படம் எடுத்து நஷ்டப்பட்டாரே இப்ப அவரு எப்படி இருக்கார்...."

"வெம்பிப் போயிருக்கார்"

போது அவள் தன் கைகளைத் தரும் வரை அவன் பற்றுவதற்கு முயற்சி செய்ததில்லை.

சினிமா, சங்கீதம், நாட்டியம், இரண்டையும் சேர்ந்துப் பார்த்து ரசிப்பதில் அவர்கள் இன்பம் கண்டனர். ஒருவரை யொருவர் கட்டிப் பிடித்துக் கசக்கி மோந்து இன்பம் காண வேண்டும் என்று இருவருக்கும் தோன்றியதில்லை.

''படுக்கையறை சமாச்சாரங்களை வெளியே வைத்துக் கொள்வது அநாகரிகம்'' என்று பேச்சுவாக்கில் அவன் ஒருமுறை சொன்னபோது அவளுக்கு அவனை ரொம்பவும் பிடித்தது.

பேசும்போது கூட பொதுவான உலக விஷயங்களை, இலக்கியம், கலை இவற்றைப் பற்றிப் பேசினார்கள்.

இரண்டு பேருக்கும் பிடித்த பொதுவான அம்சங்கள் நிறைய இருந்தன. பிடிக்காதவையும் அநேகமாக ஒத்துப் போயின.

எல்லாவற்றையும் விட முக்கியமாக கால் நகம் முதல் மூக்கு நுனி வரை ஒருவரை யொருவர் நூற்றுக்கு நூறு பிடித்திருந்தது.

''ஒரு நாள் கூட உன்னைப்பார்க்கமல் இருக்க முடியவில்லை தேவகி!'' என்றான் அவன்.

''எனக்கும் தான் தேவ்!''

தேவ்-தேவகி பெயர் கூட எத்தனைப் பொருத்தம்!

இன்று அவளைப் பார்க்க அவன் வரவில்லை.

வெகு நேரம் பால்கனிக்கருகே உட்கார்ந்து யோசித்துக் கொண்டிருந்தாள். தெருத் திருப்பத்திலேயே தேவ் வருவதை அவனுடைய மோட்டார் சைக்கிள் சத்தம் அறிவித்து விடும். அந்த இனிமையான நெஞ்சை உயர்த்தும் படபட சத்தம் கேட்கவில்லை.

உள்ளே சென்று டெலிவிஷனைப் போட்டாள்.

டி.வி.யில் தேசிய நிகழ்ச்சிகள் நடந்து கொண்டிருந்தன. யாரோ ஒரு பேகம் எகிறி எகிறி கவ்வாலி பாடிக் கொண்டிருந்தாள். காமரசம் கொட்டும் காதல் வரிகளை அவள் அடிவயிற்றிலிருந்து குரலெழுப்பி வீறிட்டுப் பாடினாள்.

தேவகி டிவியை டப்பென்று நிறுத்தி தெருவை ஒட்டிய ஜன்னல் அருகே உட்கார்ந்து கொண்டாள்.

சற்று முன்னர் வரை தேவ் தாமதித்தாலும் வந்து விடுவான் என்று நம்பிக்கை இருந்தது. வந்தால் எப்படியெல்லாம் சண்டை போட வேண்டும் என்று கூட யோசித்து வைத்திருந்தாள். அது அவ்வளவு சுலபமாக இருக்கவில்லை. பழக ஆரம்பித்து மூன்று மாதங்களாகியும் ஒருமுறைகூட அவனோடு சண்டை போடும் சந்தர்ப்பம் ஏற்படவில்லை. ஒவ்வொரு நாளும் சரியான நேரத்துக்கு வந்து, அவள் விருப்பம் கேட்டு நடந்து, அவளுக்கு எது பிடிக்கும் என்பதைக் குறிப்பால் உணர்ந்து நிறைவேற்றி எத்தனை கரிசனத்துடன் பழகினான் அவன்?

இன்றைக்கு என்ன ஆயிற்று!

இதயத்தின் ஒரு மூலையில் முணுக்கென்று வலித்தது. வழியில் ஆக்சிடெண்ட் ஆகி விட்டதோ!

ஐயோ, அப்படியெல்லாம் நினைக்கக் கூடாது.

இன்விடேஷன்களைக் கொடுக்கப் போன இடங்களில் உட்கார வைத்திருக்கலாம். ''நீயும் வாயேன், ரெண்டு பேரும் சேர்ந்து அழைத்து விட்டு வரலாம்!'' என்று நேற்று அவன் அழைத்ததை நினைத்துச் சிரித்துக் கொண்டாள். நண்பர்கள் வீட்டுக்குத் திருமணத்திற்கு முன்பே 'தம்பதி சமேதராய்' போய் அழைத்து வர வேண்டும் என்று புதுசாக ஒரு வழக்கம் வந்து விட்டால் எப்படி இருக்கும்!

வேதனையிலுங்கூட அவனைப் பற்றிய நினைவு எல்லாம் இனித்தது!

இன்னும் அரை மணி நேரம் பார்க்கலாம். பிறகு தேவ்வின் வீட்டுக்கு டெலிபோன் பண்ணி விசாரித்துப் பார்க்க வேண்டும். இல்லை. இல்லை. அவரே போன் பண்ணட்டும். வராமல் ஏமாற்றியதற்கு மன்னிப்புக் கேட்கும் வரை அவரோடு பேசுவேனா என்ன? கட்டாயம் போன் செய்வார். அப்போ என்ன சொல்லுவது? எப்படிக் கோபித்துக் கொள்வது?...

தெருமுனையில் மோட்டார் சைக்கிள் சத்தம் கேட்டது. தேவகி சட்டென்று எழுந்தாள். விளக்கை அணைத்து விட்டு ஜன்னல் வழியாகப் பார்த்துக் கொண்டு நின்றாள். அவள் அவனுக்காகக் காத்துக்காத்து நின்று கொண்டிருந்தாள் என்று தெரியப்படுத்துவானேன்? வரட்டும், வரட்டும்!

தெருவில் இருட்டு. நிதானமான வேகத்தில் ஒரு மோட்டார் பைக் கடந்து சென்றது. ஏன் நிற்கவில்லை? பைக்கின் மேல் இருவர் மழைக் கோட்டுக்குள்....சரியாகத் தெரியவில்லை. ஓட்டுபவர் தேவ் இல்லை. அவரது சாயல் இல்லை.

இது தேவ்வின் மோட்டார் சைக்கிள் இல்லை. தேவ் வரவில்லை.

தேவகி ஏமாற்றத்தினால் மனம் கூம்பினாள். படுக்கையறைக்குப் போனாள். தலையணையில் முகம் பதித்து மௌனமாக அழுதாள்.

கீழே பஸ்ஸர் 'வீர்ர்' என்று அலறியது. விடாமல் அலறியது.

''தேவகி...தேவகி...'' என்று பாஸ்கர் உச்சக் குரலில் கத்துவது கேட்டது.

''இதோ வந்துண்டே இருக்கேன்'' என்று கோமதியம்மாவின் குரல் தொடர்ந்து கேட்டது.

ஏதோ விபரீதம் நிகழ்ந்து இருக்கிறது என்று உணர்வு சொல்லிற்று.

பதறி எழுந்தாள். தலையைக் கோதிக் கொண்டபடியே விரைந்து மாடிப்படிகளை அடைந்து இறங்கி ஓடினாள் தேவகி. —தொடரும்.

---



பதினான்கு பதினைந்தாம் நூற்றாண்டுகளில் ஜப்பானில் பலத்த மழையும் சூறாவளிக் காற்றும் அடித்த போது காமகுரா என்ற பகுதியே அழிந்தது.

இருப்பினும் அங்கிருந்த ஒரு பெரிய புத்தர் சிலைக்கு மட்டும் எவ்விதச் சேதமும் ஏற்படாமலிருந்தது அந்த நூற்றாண்டிலேயே பெரிய அதிசயமாகக் கருதப்பட்டது!

'சண்டே மிட்டே' -ரமேஷ்.

"காம்ப்ளான்® ஒண்ணுதான் சரி
என் குடும்பத்துக்கு
...திட்டமிட்ட பரிபூரண உணவு."

# காம்ப்ளான்®

## ஒன்றுதான்
## எவருக்கும் தேவைப்படும்
## 23 மூலாதார ஊட்டச் சத்துக்களால்
## முழுமை பெற்றது.

காம்ப்ளான் ஒன்றுதான் திட்டமிட்ட விஞ்ஞானக் கலவையாக உடலுக்கு அன்றாடம் தேவைப்படும் 23 மூலாதார ஊட்டச் சத்துக்களை அளிக்கிறது: புரதங்கள், கார்பொஹைட்ரேட், கொழுப்புச் சத்து, வைட்டமின்கள், உலோக தாதுக்கள். எனவேதான், டாக்டர்கள் பெரும்பாலும் சிபாரிசு செய்யும் ஆரோக்கிய பானமாக விளங்குகிறது காம்ப்ளான்.

கிடைப்பவை நால்வகை:
இன்சுவை ரகங்களாக—
சாக்கலேட் காம்ப்ளான்,
ஏலக்காய்-குங்குமப்பூ
காம்ப்ளான்,
ஸ்ட்ராபெர்ரி
காம்ப்ளான், தவிர
சாதா
காம்ப்ளான்.






GLC 10-1810 TM

## திட்டமிட்ட பரிபூரண உணவு

# காம்ப்ளான்®

# ஏஞ்சல் டஸ்ட்

## 6. பாஸ்கர்

தேவ்வை இரண்டு கைகளாலும் அலாக்காகத் தூக்கி வந்து நடு ஹாலில் சோபாவின் மீது கிடத்தினான் பாஸ்கர். தங்கை தேவகி நான்கு நாட்சளில் மாலையிடவிருக்கும் மணவாளன்கிடக்கும்கோலத்தைப் பார்த்துதிக் பிரமித்து நின்றாள். கோமதியம்மா புலம்பியபடி ஹாலுக்கும் சமையல் அறைக்கும் போய்வந்து சொண்டிருந்தாள்.



"இந்தப் பிள்ளை இப்படி ஒரு காரியம் செஞ்சுட்டு வந்திருக்கே!" என்று அரற்றினாள்.

"நல்லா குடித்திருப்பான் போலிருக்கு. பேச்சுமூச்சே இல்லை!" என்றான் பாஸ்கர்.

அவனுக்கு தேவ் மீது இருந்த கொஞ்சநஞ்ச மரியாதையும்அந்தப் பத்து நிமிஷங்களில் போய் விட்டது. இரவுக் காட்சி ஒன்றுக்கு நண்பர் குழாத்துடன் போவதாகப் புக் பண்ணிவிட்டு வீட்டுக்கு வந்தவனுக்கு எதிர்பாராத இந்த நிகழ்ச்சி எரிச்சலையே தந்தது. கேட் திறந்திருக்கிறதே என்ற யோசனையுடன் ஸ்கூட்டரை உள்ளே ஓட்டி வந்த பாஸ்கர், மோட்டார் சைக்கிள் மீது லேசாக மோதி அதிர்ச்சியடைந்தான்.

"இப்படியா பைக்கை நிறுத்துவான் மடையன்" என்று திட்டிக்கொண்டே இறங்கினான். போர்டிகோ தூண்மறைவில் சாய்ந்தபடி மோட்டார் பைக்கின் மேலேயே உட்கார்ந்திருந்த தேவ்வைப் பார்த்து திடுக்கிட்டான்.

கி. கஸ்தூரி ரங்கன்

பைக்கில் வந்தவன் இறங்கி உள்ளே போகாமல் ஏன் இப்படி உட்கார்ந்தபடியே தூங்குகிறுன்?

''ஆள் நன்ருகக் குடித்திருக்க வேண்டும். அதுதான் இப்படி'' என்று தாளுகவே தீர்மானித்துக் கொண்டான். அவனுக்கு இப்படி ஒரு அனுபவம் உண்டு. ''புல் லோடு'' போட்டு விட்டு ஸ்கூட்டரை வீடுவரை செலுத்தி வர முடிந்தது. ஆனல் இறங்கத் தள்ளாட்டம். வாசல் கதவு மேலேயே சாய்ந்து கொண்டு பஸ்ஸரை அழுத்தக் கூடத் தோன்ருமல் இருக்கும் நிலை. உள்ளே அனுமதிக்கப்பட்டபின் கால்சராய்பூட்சுகளைக் கூடக் கழட்டாமல் சோபாவிலேயே படுத்துவிடத் தோன்றும். அடுத்த நாள் காலை வரை போதையிலேயே நீண்ட உணர்வுகள் மரத்த உறக்கம் ...

தேவ் அந்த நிலையில் தான் இருக்கிருன் என்று பாஸ்கர் முடிவு செய்து கொண்டு அதையே பிரகடனப் படுத்திஞன்.

''கோமதியம்மா, இவனைப் பார்த்துக் கொள்ள தேவகி, அவன் வருங்கால மனைவி இருக்கிருள். நான் உடனே போயாகணும். சாப்பாடு போடுங்க'' என்ருன்.

அவனுக்குள் ஒரு குரூர சந்தோஷம். தன் நண்பனை வேண்டாம் என்று மூஞ்சியிலடித்த தேவகிக்கு வாய்த்தவன் எத்தனை மோசமானவன் என்று எல்லாருக்கும் நன்ருக உறைக்கட்டும் என்று திருப்திப் பட்டுக் கொண்டான்.

''பாஸ்கர், இவருக்குக் குடிப் பழக்கம் கிடையாது. எனக்குத் தெரியும். ஸம் திங் ஹாஸ் ஹாப்பன் டு ஹிம்!'' என்ருள் தேவகி.

''இதுவரை இல்லே. இன்னிக்கு ஆரம்பிச்சுட்டுது. கல்யாணமாகப் போகிற குஷி. போன இடத்தில்



நண்பர்கள் வற்புறுத்தியிருப்பார்கள். முதல் தடவை ஓவராகக் குடிச்சா இப்படித்தான் கீழே தள்ளிடும்'' என்றான் பாஸ்கர்.

''அவரே மோட்டார் சைக்கிளை ஓட்டி வந்திருக்க முடியுமா?''

''வீடு வர்றவரைக்கும் ஆல்ஸென்ஸஸ் வில்பி அலெர்ட். அப்புறம்தான் ஃப்ளாலாகிப் போகும்!''

''குடித்து விட்டு நம்ம வீட்டுக்கு வருவாரா? நேரே அவர் வீட்டுக்கல்லவா போயிருப்பார்!'' என்று மடக்கினாள் தேவகி.

''போதையிலே வீடு தடுமார்றது உண்டுதான். அடுத்த வீட்டுக்குப் போய்க் கதவைத் தட்டின ஆட்களைப் பார்த்திருக்கேன்.''

''ஏண்டா பாஸ்கர், எதுக்கும் டாக்டருக்குப் ஃபோன் பண்ணிடேன். அவர் வந்து பார்த்துச் சொல்லட்டும்!'' என்றாள் கோமதியம்மா.

''அப்பா வர்ற நேரம்தான்கோமதியம்மா. வேணுமானால் இவனோட வீட்டுக்குப் ஃபோன் பண்ணி வந்து தூக்கிட்டுப் போகச் சொல்றேன்!'' என்று பாஸ்கர் ஃபோனை அணுகினான்.

''வேண்டாம் பாஸ்கர். அவர் தெளிஞ்சப்புறம் வீட்டுக்குப் போகட்டும். இந்த நிலையில் இவரைப் பார்த்தால் அவரோட அம்மா நொந்து போயிடுவாங்க!'' என்றாள் தேவகி.

''ஸுட் யூர் ஸெல்ஃப்'' என்று தோளைக் குலுக்கியபடி அகன்று போனான். டைனிங் டேபிளில் உட்கார்ந்து அவசரமாக அள்ளிப்போட்டுக்கொண்டு அவசரமாகவே வெளியேறினான்.

தேவகி கன்னத்தில் கைதாங்கி தேவ்வைப் பார்த்தபடி அவன் அருகிலேயே சோஃபாவில் உட்கார்ந்திருந்தாள்.

அம்மா வந்து பார்த்தால் என்ன சொல்வாள்! தங்கைகள் திரும்பி வருமே. என்ன நினைப்பார்கள்? ஏன் இப்படி ஒரு அசிங்கமான நிலைக்கு தன்னைத் தாழ்த்திக் கொண்டு விட்டார்?

எதிலும் நிதானம் காண்பிக்கும் இவர் இது விஷயத்தில் ஏன் இப்படி தவறிப் போனார்..? இந்த நிலையில் எப்படி மோட்டார் சைக்கிளை தானே ஓட்டி வர முடிந்தது?...

சிந்தனை ஓட்டத்தின் ஆதாரமே தவறு என்று திடீரென்று அவளுக்கு தோன்றியது. இவர் திரும்பி வரும்போது தனியாக வரவில்லை. யாரோ இவருடைய மோட்டார் சைக்கிளில் ஏற்றி வந்து இங்கே போட்டு விட்டுப் போயிருக்கிறார்கள். சொல்லாமல் கொள்ளாமல் ஏன் போக வேண்டும்?

மாடியிலிருந்து பார்த்தபோது இருவர் அமர்ந்த மோட்டார் சைக்கிள் வீட்டைத் தாண்டிப் போயிற்றே! தாண்டிப் போனவன் சத்தமில்லாமல் வீட்டுக்குள் நுழைந்து தேவ்வைக் கிடத்தி விட்டு....

வாட் டஸ் தட் மீன்!

---

டைரக்டர்: முதலிரவு சீனிலே நடிகை கிட்ட கூச்சப்படாமல் நடி' என்று சொன்னது தப்பாப் போச்சுங்க

தயாரிப்பாளர்: ஏன்?

டைரக்டர்: படமே எடுக்க முடியாம கூச்சப்பட்டுக்கிட்டு எல்லோரும் வெளியே வந்துவிட்டோமுங்க!

எஸ். மாரியப்பன்



# சுத்தமோங்கும் ஆரோக்கிய சுகத்திற்கு...

# லைப்பாய் பர்ஸனல்



புதிய லைப்பாய் பர்ஸனல்—அழுக்கிலுள்ள கிருமிகளைக் கழுவிக் களையும் ஈடிணையற்ற லைப்பாய் திறமைக்கு...மேலும் சிறப்பு: சுத்த மயமான ஆரோக்கிய சுகமளிக்கும் நுரை வளப்பம், சுறுசுறுப்புத் தரும் சுகந்தம். பொலிவு மிகுந்த மேலுறைப் பேக்கிங்கிலே புதுமையழகு வடிவ சோப். குளித்திடுவீர்...குளித்திடப் புதுமை லைப்பாய் பர்ஸனல்...நவீன மனிதருக்கான நவீன சோப்.






## லைப்பாய் பர்ஸனல்

### சுறுசுறுப்பூட்டும் இதன் சுகமே அலாதி!

## சீருவில் சினிமா

சீனுவில் சினிமாத் தியேட்டர்களில் மிகவும் குறைந்த கட்டணமே வசூல் செய்கிறார்கள். பத்து பைசாவுக்குக் கூட அங்கே சினிமா பார்க்கலாம். அதிகபட்சக் கட்டணம் ஒரு ரூபாய்தான். திரைப் படக் கருவிகளையும், திரையையும், 16 எம். எம். 8-75 எம்.எம். பிலிம்களையும் எடுத்துக் கொண்டு கிராமம் கிராமமாகச் சென்று மக்களுக்கு இலவசமாகவும், குறைந்த கட்டணத்திற்கும் திரையிட்டுக் காட்டுகிறார்கள்.

வைதேகி.

தேவகி தேவ்வின் முகத்தருகே குனிந்து மோப்பம் பிடித்தாள்.

சாராய நெடி எதுவும் இல்லையே மூச்சுக் காற்றுக்கூட இல்லை போலிருக்கே...

திடீரென்று தாக்கிய பீதி உணர்வுடன் தேவ்வை உலுக்கினாள்.

''தேவ்... தேவ்.. எழுந்திருங்க. கண்ணை முழிச்சுப் பாருங்க. நான் தான் தேவகி...தேவ்...!''

அவன் மார்பிலேயே முகத்தைப் புதைத்து அழத் தொடங்கினாள்.

''என்ன ஆச்சு தேவகி?'' என்று சோமதியம்மா ஓடி வந்தாள்.

''பெரியம்மா. இவருக்கு ஏதோ ஆகிவிட்டது. நிச்சயம் இவர் குடிக்கலை. இவருக்கு உயிரு இருக்குதான்னு பாருங்களேன். ப்ளீஸ்..!''

கோமதியம்மாவின் கையில் ஒரு செம்புத் தண்ணீர் இருந்தது. அதை கையில் வார்த்து தேவ்வின் முகத்தில் அடித்தாள். சலனமில்லை.

''அப்பாவுக்குப் ஃபோன் பண்ணும்மா! என்ன பொல்லாப்போ தெரியலியே... பகவானே...''

தேவகி அப்பாவின்கிளினிக்குக்குப் போன்செய்து கொண்டிருந்தபோது வாசல் கதவு திறந்தது. அம்மாவும் பாட்டியும் மாமாவும் கோயிலிலிருந்து திரும்பி வந்துவிட்டனர்.

''என்ன ஆச்சு கோமதியம்மா, மாப்பிள்ளை ஏன் இப்படிக் கிடக்கிறார்?'' என்று கேட்டபடி வந்தாள் அம்மா.

''இந்தப் பிள்ளைக்கு உடம்பு சரியில்லை போலிருக்கு. டாக்டரைக் கூப்பிட்டுண்டிருக்காள் தேவகி!''

பொதுவாகவே சோமதியம்மாள் விஷயங்களைப் பெரிதுபடுத்தாமல் விட்டுவிடுவாள். இந்தச் சந்தர்ப்பத்தில் அனாவசிய பீதியைத் தவிர்க்கவே அவள் விரும்புகிறாள் என்பதை தேவகி கவனித்துக் கொண்டாள்.

''நத்திங் சீரியஸ் ஐ ஹோப்!'' என்று சொல்லியபடி அம்மா உள்ளே போனாள்.

''சிறிசுங்க. ஊரார் கண் பட்டிருக்கும். திருஷ்டி சுத்திப்போடணும்'' என்றாள் பாட்டி.

டெலிபோனில் பேசிவிட்டுத் திரும்பிய தேவகி, ''அப்பா வீட்டுக்குக் கிளம்பிட்டாராம். அஞ்சு நிமிஷத்திலேயே வந்துவிடுவார்'' என்றாள்.

சினிமாவுக்குப் போனவர்களும் திரும்பிவிட்டனர்.

''பன்டாஸ்டிக் பிக்சர் தேவகி!'' என்று குதிநடை போட்டுக் கொண்டுஉள்ளே வந்தாள் சுநந்தா. பின்னோடு சளசளவென்று பேசியபடி மற்றப் பெண்களும் இரண்டு தம்பிகளும் நுழைந்தனர்.

''டீ பொண்டுகளா. சத்தம் போடாமப் போய் சாப்பிட உட்காருங்கோ. அத்தானுக்கு உடம்பு சரியில்லை. தூங்கட்டும்'' என்று உத்தரவிட்டாள் கோமதியம்மா.

தங்கை தம்பிகள் எல்லாம் சோபாவின் பின்னல் லைகை நின்று முகத்தில் கேள்விக்குறியுடன் தேவ்வையும், தேவகியையும் மாறி மாறிப் பார்த்தனர்.

"சாப்பிட்டுட்டு வாங்க சொல்றேன்" என்று தேவகி அவர்களை அனுப்பினுள்.

அப்பா வரும்வரை என்ன செய்வது என்று யோசித்தாள். மயக்கமடைந்திருப்பவர்களை மீட்பதற்கு செய்ய வேண்டிய முதலுதவி சிகிச்சைகள் என்று அவள் ஹோம் ஸயன்ஸ் கோர்ஸில் படித்த பாடம் நினைவுக்கு வந்தது.

"கிஸ்...ஆப்....லைஃப்-

மவுத்-டு-மவுத் ப்ரீதிங்....

வாயுடன் வாய்வைத்து மூச்சை ஊதி சுவாசப் பைகளை இயங்கச் செய்ய வேண்டும்...." என்ற வரிகள் பளிச்சென்று நினைவுக்கு வந்தன.

அப்படிச் செய்து பார்த்தால் என்ன என்று வெட்கத்துடன் நினைத்தாள். அப்போது வாசலில் அப்பாவின் கார் வந்துவிட்ட ஓசை கேட்டது. தேவகி ஓடிப்போய் கதவைத் திறந்தாள். அவர் வீட்டுக்குள் நுழையுமுன்பேயே அவரிடம் தேவ் வீடு திரும்பிய நிலையை சுருக்கமாகச் சொன்னுள்.

டாக்டர் மகரபூஷணம் பதட்டப்படாமல் தேவ்வின் அருகில் வந்து நின்றுர். நாடித்துடிப்பைக் கவனித்தார். கண் இமைகளை இழுத்துப் பார்த்தார்.

"ஹி இஸ் இன் எ கோமா! ஹௌ டிட் இட் ஹாப்பன்?" என்று சற்று அதிர்ச்சியுடன் சொன்னுர்.

" 'கோமா'ன்னு?" கோமதியம்மாவின் கேள்வி.

"இறந்து போய்விட்டமாதிரி ஆழ்ந்த தூக்கம். வெளி உணர்வு இருக்காது" என்றுர் டாக்டர்.

"முழிப்பு வந்துடுமோல்வியோ? கல்யாணத்துக்கு நாலுநாள்கூட இல்லை."

"வரலாம். வராமலே போகலாம். வருஷக்கணக்கிலேயே இப்படியே கோமாவில் கிடப்பவரும் உண்டு" என்றுர் டாக்டர் கவலையுடன்.

"முதலில் இதன் காரணத்தைக் கண்டு பிடிக்கவேணும்" என்று டெலிபோனை நாடினுர்.

(தொடரும்)



**உயரத்தில் மாறும் மனித சிந்தனை**

இமயமலையின் சிகரம் நங்கா பர்வதம் 8,125 மீட்டர் உயரமுள்ளது. அதில் ஏறி வெற்றி பெற 12 பேர்கள் அடங்கிய மலையேறுபவர் குழு முனைந்திருக்கிறது. இக் குழுவில் ஏழு ஜெர்மானியர், இரு போல்ஸ்கியர், இரு பாகிஸ்தானியர் இரு சுவிட்ச்சர்லாந்துக்காரர்கள் இருக்கிறுர்கள். இவர்கள் சிகரத்திலிருந்து திரும்பி தாழ்வரைக்கு வந்ததும், இவர்களிடம் திருமணம், உடலுறவு, குடும்பம், வேலை, தொழில் இசை ஆகியவை பற்றி 566 கேள்விகளைக் கேட்க மேற்கு ஜெர்மனி மலையேறி நிபுணர் பட்டியல் தயார் செய்து வைத்திருக்கிறுர். உயரத்தை எட்டிய மனிதரின் மனப்போக்கிற்கு, சிந்தனைத் தடம் எப்படியெல்லாம் மாறுகின்றன எப்படியெல்லாம் மாறுகின்றன என்பதை ஆராயத்தான் இந்தச் சோதனை

தகவல்: ஆரெல்ஸார்.

# டில்லி மல்லு

டில்லிராஜா

தமிழக கவர்னராக எஸ். எல். குரானா நியமிக்கப்பட்ட செய்தி வெளியானவுடனேயே புதுடில்லியில் உள்ள ''தமிழ்நாடு ஹவுஸ்'' அதிகாரிகள்-ஊழியர்கள்; தமிழக சிறப்பு பிரதிநிதி தலைமையில் அவரைச் சந்தித்தனர்.

தமிழகத்தைப் பற்றி நிறையத் தெரிந்து கொள்ள ஆவலுடன் இருக்கிறேன். தமிழகத்தின் வரை படம், பூகோள, சரித்திர விவரம், அதிகாரிகளது பெயர்கள் மந்திரிகளின் பயோ டேடா ஆகியவைகளைத் தயாரித்து தரும்படி கேட்டுக் கொண்டார் குரானா. மறுநாள் குடும்ப சமேதராய் சாணக்யபுரியிலிருக்கும் தமிழ்நாடு ஹவுஸிற்கு திடுதிப்பென்று விஜயம் செய்தார்.

கலாசாரத்திற்கேற்ப இரண்டு சிலைகள் வாயிற்படியில் வரவேற்பது போன்று இருப்பதைக் கண்டார்.'' அடுத்து வரவேற்பு அறையில் இருக்கும் அண்ணாதுரையின் சிலைக்கு அஞ்சலி செலுத்தசென்ற குரானா- பெரிய கண்ணாடி கதவின் மீது இடித்துக் கொள்ளப் போகிறாரே என்ற அச்சத்தால் ஊழியர் ஒருவர் கதவின் நடுவே நின்று கொண்டு விட்டார். காரணம் இரண்டு கதவுகளிலும் கண்ணாடி உடைந்து ஆறு மாத காலமாகியும் ரிப்பேர் செய்யவில்லை. சீனியர் ஐஏஎஸ் அதிகாரியாக இருந்த குரானாவுக்கு எப்போதுமே கோபம் வராது. ஆனால் இப்படிப்பட்ட கண்ணாடியில்லாத கதவு பற்றி வேதனைப்பட்டார். கண்ணாடியை உடனே பொருத்தும்படி உத்தர விட்டார். டான்ஸி சேர்மனுக்கு ''லைட்னிங் கால்'' பறந்தது தில்லியிலிருந்து.

திருமதி குரானாவுக்கு மசால் தோசை என்றால் பிடிக்குமாம். ஆகையால் குரானாவுக்கும் சேர்த்து ''நெய் மசாலா'' இரண்டு தயார் செய்து கொண்டுவரப்பட்டது. நொட்டை விட்டு ருசித்து மசால் தோசையை கவர்னர் தம்பதிகள் சாப்பிட்டனர்.

ஃ ஃ ஃ

வெகு 'சிம்பிளாக' தனது 38வது வயது பிறந்த தினத்தை கொண்டாடினார் ராஜீவ் காந்தி. விடியற் காலையில் தனது தாயின் ஆசிபெறச் சென்றார். இந்திராவின் காலைத் தொட்டு கண்ணில் ஒத்திக் கொண்டார். அதைத் தொடர்ந்து இத்தாலி மாட்டுப் பெண் சோனியாவும் மாமியாரின் காலைத் தொட்டார். ராஜீவின் தோளில் தட்டி, தலையில் கை வைத்து ஆசி கூறினார். கடவுள் மீது நம்பிக்கையிருந்தாலும் உருவ வழிபாட்டை வெறுக்கும் ராஜீவ் ஓட்டல் மௌரியா ஷெரடான் சென்று அமைதியாக ஒரு ரூமில் அமர்ந்து பிரார்த்தனை செய்தாராம். பிறகு மதிய உணவு சாப்பிட்டு குழந்தைகளுடன்-செஸ் விளையாடினாராம்.

பெரிய பூச்செண்டில் ''Many Happy Returns'' என சிறிய வெள்ளை பேப்பரில் எழுதியதை வைத்துக் கொண்டு மவுரியா ஓட்டலில்தாத்திருந்தமேனகாவிடம் பூச்செண்டை பெற்று நன்றி கூறிய ராஜீவ்-வருண் எப்படியிருக்கிறான் என கேட்டு சாக்லேட்டை வாங்கித் தந்தது உருக்கமாக இருந்தது. இதை ராஜீவ் காந்தியே செய்தியாளர்களிடம் தெரிவித்தார்.

பெனிக்காரர்கள் சொன்னார்கள். வேறு கதியே இல்லாததால் கனக வல்லி நடிக்கச் சம்மதித்தார். அந்த கம்பெனி தயாரித்த 'கௌசல்யா' படத்தில் நடித்தார். (1935)

பின்னாளில் கதாநாயக நடிகை யாகவும், சிரிப்பு நடிகையாகவும் விளங்கிய கே. ஆர். செல்லம். சொன்ன கதை இது. கனக வல்லிதான் கே. ஆர். செல்லம்.

இதென்ன?

ஏழு வயதில் கல்யாணம்? எட்டு வயதில் கல்யாணம்? பதினோரா வது வயதில் கல்யாணம்? வசுந் தராதேவிக்குக் கூட ஒன்பதா வது வயதில்தான் கல்யாணம்

---

ஒரு குதிரைப் பந்தய புக்கி யை துப்பாக்கி முனையில் மிரட்டி பணத்தைக் கொள்ளையடித்த தாக பம்பாயில் ஒருவர் கைது செய்யப்பட்டார். இவர் அந்தப் பணத்தை வைத்து ஒரு படம் தயாரிக்கத் திட்டமிட்டிருந்தா ராம். படத்தின் கரு: பெரிய கொள்ளை!

-ஹிந்துஸ்தான்டைம்ஸ்

-ராமுசாமி

---

அப்போதெல்லாம் இப்படித் தான். இந்த பால்ய விவாகக் கொடுமையை எதிர்த்து சிந் தனையாளர்களும், தேசத் தலை வர்களும் போராடினார்கள்.

அப்போதெல்லாம் சமூகத்தில் நடக்கிற போராட்டங்களைப் பற்றி பொறுப்புணர்ச்சி யோடு கலைஞர்களும் சிந்தித்தார்கள்.

'ஆயிரம் முகம்' ராம்குமார் என்கிற கலைஞர் 1940-ல்' பால்ய விவாகம்' என்ற பெயரில் ஒரு படத்தை உருவாக்கித் திரையிட் டார்.

ஏழாவது வயதில் ஒரு சிறுமி விதவையாகிறாள். அவள் பிராய மடைகிற போது அவளுக்குமறு மணம் செய்து வைக்க விரும்பு கிறார் தந்தை. ஊரும் உறவும் எதிர்க்கிறது. 'பால்ய விவாகம்' படத்தின் கதை இது. படப்பிடி ப்பைத் துவக்கி வைத்தவர் காங் கிரஸ் தலைவர் சத்தியமூர்த்தி. வறுமையில் வாடிய தங்கள் பால்யகால வாழ்க்கையை எம். ஜி. ஆர் மறைத்ததில்லை. சிவாஜியும் மறுத்ததில்லை.

ரொட்டிக்காக நடிக்க வந்தவர் கள் முத்துக்களாகப் பெற்றார்களே அவர்களில் எத்தனை பேர் பத்திரப் படுத்தினார்கள்?

தியாகராஜ பாகவதர், டி.ஆர். மகாலிங்கம், என்.எஸ். கிருஷ்ணன் ஈட்டிய பொருளை யெல்லாம் தங் கள் வாழ்நாளிலேயே இழந்தவர் கள்.

இவர்களது உதாரணத்தைப் படித்துக் கொண்டு பின்னாளில்வந்த நடிகர்கள் காற்றுள்ள போதே தூற்றி எடுத்துப் புடைத்துப் பத் திரப் படுத்திக் கொண்டார்கள். நடிப்பை மாத்திரமே நம்பாமல் தொழிற் சாலைகளிலும் வர்த்தக நிறுவனங்களிலும் அரசியலிலும் முதலீடு செய்து கொண்டார்கள்.

நடிகைகளில் அன்றும் இன்றும் முத்துக்களைப் பறி கொடுத்தவர் களே மொத்தத்தில் அதிகம்.

காரணம் என்ன? பெரிய மர்மம் ஒன்றுமில்லை. ஆண் மேலாதிக்கம் உள்ள சமூகம் இது. சம்பாதிக் கின்ற பெண்ணை சுரண்டிக் கொழுக் கும் கணவனாகவும், தந்தையாக வும். மாமாவாகவும், ஆலோசகனா கவும் பலர் இருப்பார்கள்.

இத்தகைய கொள்ளைக் கும்பலி டமிருந்து சாமர்த்தியமாகத் தப் பித்து தங்கள் சொந்த வாழ்வை பானுமதியும் பத்மினியும் சரோஜா தேவியும், கே. ஆர். விஜயாவும் சுஜாதாவும் பத்திரப் படுத்திக் கொண்டாற் போல நமக்குத்தெரி கிறது...

**அடுத்த வாரம்**
**வண்ணச் சூதாட்டம்!**

# ஏஞ்சல் டெஸ்ட்

கி.கஸ்தூரி ரங்கன்





## 7. டாக்டர்

அப்பா சொன்னதின் பொருள் சற்று நேரத்திற்குப் பின்னர்தான் தேவகிக்கு உறைத்தது.

கோமாவிலிருந்து நினைவு திரும்பலாம். திரும்பாமல் போகலாம். வருஷக் கணக்கிலேயே இப்படியே கோமாவில் கிடப்பவரும் உண்டு.

'அப்படியானால் ஞாயிறன்று நடக்கவிருக்கும் திருமணம்?'

அவள் மனதின் கேள்வியை கோமதியம்மா குரலெடுத்துக் கேட்டாள்.

''என்ன டாக்டர், இப்பிடி குண்டைத் தூக்கிப் போடறேள்! கல்யாணம் என்ன ஆறது?''

டாக்டர் மகரபூஷணம் டெலிபோனில் யாருடனோ பேசிக்கொண்டிருந்தார்.

கோமதியம்மாவின் உரத்த குரலைக் கேட்டுவிட்டு அம்மா ஓடி வந்தாள். மாமாவும், பாட்டியும் பின்னோடு ஓடிவந்தனர். சிறிசுகள் பாதிச் சாப்பாட்டில் நின்று கலவரத்துடன் பார்த்தன.

''என்ன ஆச்சு கோமதியம்மா!'' என்று அம்மா கேட்டாள்.

''கல்யாணத்துக்கு நாலுநாள் இருக்கு. மாப்பிள்ளைக்கு கோமாவாம். முழிப்பு வருமோ வராதோங்கிறார்!''

''ஈஸிட்?.. மக்கீ. அப்படியா சொன்னேள்?'' என்று கிறீச்சிட்டாள் அம்மா. உணர்ச்சிவசப்படும் சந்தர்ப்பத்தில் கணவரை 'மக்கீ' என்று செல்லப் பெயரால் கூப்பிடுவாள்.

அப்பா டெலிபோன் பேச்சை முடித்துக் கொண்டு விட்டார்.

''எஸ். மங்கா. ஸம்திங் ஸீரியஸ் ஹாப்பன் டு இம். ஆம்புலன்ஸுக்கு சொல்லியிருக்கிறேன். ஹாஸ்பிடலைஸ் பண்ணனும்.''

''என்ன இப்படி கூலா சொல்றீங்க? வாட் அபௌட் இஸ் பேர

ன்ட்ஸ்? அவங்களுக்கு சொல்ல வேணுமா?''

''நீயே போன் பண்ணிச் சொல்லு. பட் வி கான்ட் டிலே திஸ் இஸ் எ மாட்டர் ஆஃப் லைப் அண்ட் டெத்.''

''பகவானே, என்ன சோதனையோ!'' கோமதியம்மா பெருமூச்சு விட்டாள்.

தேவகி கற்சிலையாக உட்கார்ந்திருந்தாள். அவளது கண்களில் விளிம்பு கட்டி நின்ற நீர் தளும்பி



பளிங்குக் கன்னத்தில் இறங்கிற்று. நிற்காமல் குபு குபு வென்று சுனை யூற்றுப் போல பெருகி வழிந்து ஓடியது.

"ஐயோ அம்மா" என்று அலறி அழலானாள்.

கோமதியம்மா விரைந்து அவளை இறுக அணைத்துக் கொண்டாள். தலையைத் தோளில் சாய்த்து கூந்தலை வருடினாள்.

"அழாதேம்மா. தைரியமாயிரு. மயக்கம் தெளிஞ்சுடுவார். எல்லாம் சரியாயிடும். பகவானை வேண்டிக்கோ!"

"அழாதே பேபி. இ வில் பி ஆல் ரைட்..... சரியாயிடும்னு சொல்லுங்களேன்!" என்று கணவரைப் பார்த்துச் சொன்னாள் அம்மா.

"லெட் அஸ் ஹோப் ஸோ! அவங்களுக்குப் போன் பண்ணிடு, உடனே வரச் சொல்லு இங்கே. இல்லாட்டா விஜயா ஹாஸ்பிடலுக்கு வரச் சொல்!"

அம்மா டெலிபோனை அணுகி எண்களைச் சுழற்றினாள்.

டாக்டர் தேவ்வின் தலையைத் தூக்கி அடிமண்டையில் விரல்களால் தடவிப் பார்த்தார்.

"அடி ஒண்ணுமில்லே.. இவரை வீட்டுக்கு கொண்டு வந்தது யார்னு சொன்னே?" என்று தேவகியைக் கேட்டார்.

"தெரியலே. மோட்டார் சைக்கிளோடே வீட்லே விட்டுட்டுப்போயிட்டான் ஒருத்தன். பாஸ்கர் தான் பார்த்திட்டு வீட்டுக்குள்ளார தூக்கி வந்தான்!" என்றாள் தேவகி.

"பாஸ்கர் எங்கே!"

"சினிமாவுக்குப் போயிருக்கான் டாடி" என்று தங்கை சுபா சொன்னாள்.

"இடியட்! இவரை இப்படியே விட்டுட்டுப் போயிட்டானா?கொஞ்சம் கூட பொறுப்பில்லையே?"

"இவர் குடிச்சிருக்கார்னு சொன்னான். நாங்களும் அதான்னு இருந்துட்டோம்" என்றாள் கோமதியம்மா.

"நான்சென்ஸ்! ஆக்ஸிடெண்ட் ஆகி உள்காயம் பட்டிருக்கோ தெரியலே. ஆர் ஹீஸ் பாய்ஸண்ட் பை ஸம்படி!"

"விஷங் கொடுத்துட்டாங்களா! யாரு?" என்று தேவகி பதறினாள்.

அம்மா போன் அருகில் இருந்து குரல் கொடுத்தாள். "சம்பந்தி வீட்லே வேலைக்காரன் தான் பேசறான். ஐயா பம்பாய் போயிருக்கிறாராம். அம்மா தூக்க மாத்திரை முழுங்கிட்டு தூங்கப் போயிட்டாங்களாம். எழுப்பவான்னு கேக்கறான்!"

"கிரேட்! பண்டாஸ்டிக்!.. எழுப்பச் சொல்லு. எழுந்தவுடனே பையன் ஆஸ்பத்திரியிலே கிடக்கறான். பார்க்கணும்னா அங்கே வரச் சொல்லு!"

அம்மா சொல்லிவிட்டு வந்தாள்.

வாசலில் ஆம்புலன்ஸ் வந்து விட்டது. ஆண் நர்சுகள் இருவர் ஸ்ட்ரெச்சரைத் தூக்கி வந்தனர்.

டாக்டர் மகரபூஷணம் தொழில் அனுபவத்தில் படித்துவிட்ட நிதானத்துடன் உத்தரவுகளைப் பிறப்பித்தார்.

"வி ஷல் டேக் இம் டு தி ஹாஸ்பிடல். டாக்டர் மாத்ருபூதம் டெலிபோன் பண்ணுவார். நேரே விஜயா ஹாஸ்பிடலுக்கு வரச் சொல்லு!"

"நானும் வரேம்பா!" என்று தேவகி புறப்பட்டாள்.

"நீ எதுக்குடி? அங்கேயெல்லாம் போக வேணும்" என்று பாட்டி தடுத்தாள்.

"அவ வரட்டும். பரவாயில்லே!" என்றார் டாக்டர்.

அப்பா மாமாவை அருகில் அழைத்தார். மாமா மருவிப்பட்டினத்தில் எக்ஸைஸ் இன்ஸ்பெக்டராக இருக்கிறார். எப்போதும் வாய் நிறைய புகையிலை. பேசவே மாட்டார் கல்யாண காரியங்களில்




"இந்த நடிகை சிறிது காலம் நடிப்புக்கு முழுக்கு போட்டுட்டாங்களாமே... ஏன்?"

"அவங்க முழுகாம இருக்காங்க..."

மேற்பார்வை அவர் பொறுப்பாக இருந்தது.

"உப்பிலி. காலையில் கம்பவுண்டர் வந்தா கிளினிக்கை மூடிடச்சொல்லு. சம்பந்தி வீட்லேந்து கேட்டா பையனுக்கு உடம்பு சரியாயில்லைன்னு ஆஸ்பத்திரிலே அட்மிட் ஆயிருக்குன்னு சொல்லு. ப்ரெஸ் பண்ணுங்கன்னா மோட்டார் சைக்கிள் ஆக்ஸிடெண்ட். மயக்கமா இருக்கான்னு வேணா சொல்லு. டோன்ட் லெட் தம் பேனிச். அக்காவையும் பசங்களையும் பாத்துக்கோ."

"கொஞ்சம் இருங்க" என்று ஜாடை காட்டி விட்டு உப்பிலி சாம்பவுண்டுக்கப்பால் போய் புகையிலையைத் துப்பிட்டு வந்தார்.

"சமையல்சாரர், புரோகிதர் எல்லாம் காலைலெ வரேன்னு சொல்லியிருக்காங்க. என்ன சொல்றது!" என்று கேட்டார்.

"எத்தனை மணிக்கு வரதா சொன்னாங்க?"

"எட்டு, எட்டரை."

"நான் ஆஸ்பத்திரிலேந்து போன் பண்றேன். ஓ. கே. டேக் கேர்..."

ஆம்புலன்ஸ் குலுங்கிக் குலுங்கி வடபழனியை நோக்கி விரைந்தது.

டாக்டர் மகரபூஷணம் தலைமாட்டிலும், தேவகி கால் பக்கத்திலும் உட்கார்ந்து தேவ்வின் உடல் அதிகம் அதிராமல் பார்த்துக் கொண்டனர்.

"ஜி. எச்சுக்குப் போகலாம். ஆனால் கவர்ன்மெண்ட் ஆஸ்பத்திரி. அவ்வளவா அக்கறை காமிக்க மாட்டாங்க மேலும், போலீஸ் கேஸான்னு கேட்பாங்க" என்றார் டாக்டர்.

"கோமாவிலிருந்து விடுபடறது அவ்வளவு கஷ்டமா?"

"இட் டிபெண்ட்ஸ். அடிபட்டு மூளை பிரதேசம் சேதமாயிருந்தா கஷ்டம். அடிபட்டிருக்கிறதா தெரியலை. பாய்ஸன் இருந்தால் டூ ஹவர்ஸ் உள்ளே இருந்தா ஸ்டமக் வாஷ் கொடுத்து மீட்டுடலாம். தாமதிச்சுப் போய் டைலெஸ்ட் ஆயிட்டா தான் காம்ப்ளிகேஷன்ஸ் இருக்கும். ரிகவர் ஆனா கூட சைக்கியாட்ரி கேஸாயிடும்."

"உயிருக்கு ஆபத்தில்லையே!"

"அட் திஸ் ஸ்டேஜ் இல்லேன்னுதான் நினைக்கிறேன். வி வில் ட்ரை அவர் பெஸ்ட்."

தேவகி அதற்கு மேல் பேசவில்லை. நெஞ்சில் வேதனை பந்தாய் அடைத்துக் கொண்டு பேசினால் அழுகையாக வெடிக்கும் போல இருந்தது. அப்பா அவள் கையை எட்டிப் பற்றினார்.

"ஐ'ம் ஸாரி பேபி. தைரியமா இரு. அவரைக் காப்பாத்திடுவோம். பயப்படாதே" என்றார்.

விஜயாவில் ஆம்புலன்ஸ் வந்து நின்றது.

(தொடரும்)



# ரஞ்சன் மண்டி

கி. கஸ்தூரிரங்கன்

## 8. பாகீரதி

நெடிது உயர்ந்த மலை. மலை முகட்டில் ஒரு பூங்கா. பசேலென்று செடிகளும், வண்ண வண்ணமாய்ப் பூச்சிகளும். நான்கு புறமும் கிடு கிடு பள்ளம். பள்ளத்தாக்கில் அடர்ந்த மரங்கள். இருட்டு. இருளை வெட்டிப் பறக்கும் மின்மினிப் பூச்சிகள். அவளும் குழந்தையும் தனியாக இருக்கிறார்கள். மடியிலிருந்து குழந்தை இறங்கி மெல்லத் தவழ்ந்து செல்கிறான். அவள் கவனிக்கவில்லை. திடீரென்று குழந்தையின் வீறிட்ட குரல் கேட்கிறது. அவள் எழுந்து ஓடுகிறாள், மலைமுகட்டருகில் வந்து ஸ்தம்பித்து நிற்கிறாள். குழந்தை பந்தாகி உருண்டு ஆழத்தில் மறைகிறான். ''தேவ் தேவ்..'' என்று அலறியபடி அவளும் அவன் பின்னே பாய்கிறாள். மலைச்சாரலில் மோதி உருண்டு... உருண்டு...

பாகீரதிக்குச் சட்டென்று விழிப்பு வந்து விட்டது. உடம்பு தெப்பலாய் வியர்வையில் நனைந்து விட்டது. அறைக் கதவு தடதட வென்று அதிர்ந்தது.

''அம்மா.. அம்மா.. சீத்திருங்க. அம்மா...''

''யார்...?''

''நான்தாம்மா ராமையா— சீக்கிரம் வாங்க...''

பாகீரதி கட்டிலின் அருகே இருந்த மேஜை விளக்கைப் போட்டாள். கடிகாரம் மணி 11.15 என்று காட்டியது.

''இதோ வரேன். ராமையா!''

''அப்பா, என்ன பயங்கரமான கனவு! தேவ் வீட்டுக்கு வந்து விட்டானா! தினமும் நேரம் கழித்து தான் வருகிறான். இப்போது பரவாயில்லை. வரித்தவளோடு ஊர் சுற்றுகிறான். அதற்கு முன்பு அவன் எங்கே போனான், யாருடன் சுற்றுகிறான் என்ற தகவலே இருக்காது. சில இரவுகள் வீட்டுக்கே வந்ததில்லை.

போதும். அவனுக்காக கவலைப் பட்டதெல்லாம் போதும். அவனாலேயே அவள் உடம்பு கெட்டு விட்டது. தூக்கம் போய்விட்டது. தினமும் காம்போஸ் மாத்திரை போடாமல் தூக்கம் வரவில்லை. மாத்திரை சாப்பிட்டு விட்டுப் படுத்தால் இந்த மாதிரி கனவுகள்!

மறுபடியும் கதவு அதிர்ந்தது.

''சீக்கிரம் தொறம்மா..''

பார்வதி சுறுசுறுப்பாக நடந்தாள். உடம்பு வேறு ஊதிப்போய் விட்டது. வேகமாக நடந்தால் மூச் சிறைக்கிறது. அவள் கதவு வரை போய் தாளைத் திறப்பது கூட பிரயாசையாக இருந்தது. வெளியே ராமையா பதறிக் கொண்டு நின்றிருந்தான்.

''என்ன ராமையா? என்ன ஆச்சு உனக்கு...?''

''எனக்கொண்ணு மில்லையம்மா. தம்பிக்குத்தான் ஏதோ ஆயிடுச் சாம்...ஆஸ்பத்திரியிலே இருக்காரும்...''

''என்னடா இது! யார் சொன்னாங்க...?''

''சம்பந்தி வீட்லேருந்து டெலிபோன் வந்ததும்மா. சம்பந்தியம்மாவே பேசினாங்க. தேவ் தம்பி மயக்கமாயிட்டாராம்.... விஜயா ஆஸ்பத்திரிக்கு எடுத்திட்டுப் போயிருக்காங்களாம்.. உங்களை எழுப்பிச் சொல்லச் சொன்னாங்க...''

பாகீரதியின் காதுகள் குப்பென்று அடைத்துக்கொண்டன. கண்முன்னே பஞ்சு பறந்தது.

''என்னடா சொல்றே...ஈச்வரீ, இது என்ன சோதனை...?''

தலையை அழுத்திப் பிடித்துக் கொண்டு சரிந்து விழுந்தாள் பார்வதி.

''அம்மா...அம்மா...'' என்று ராமையா பதறினான். சமையல் அறைக்கு ஓடினான். ஜன்னல் வழியாக, ''ராணீ, ராணீ, ஓடியா ஓடியா'' என்று குரல் கொடுத்து விட்டு ஒரு குவளையில் நீரெடுத்துக்கொண்டு திரும்பி வந்தான். பாகீர்தியின் முகத்தில் பளிச் சென்று நீரை அறைந்தான்.

''அம்மாவுக்கு என்னய்யா?'' என்று அவன் மனைவி ராணி கேட்டுக் கொண்டே வந்தாள்.

''தேவ் தம்பி ஆஸ்பத்திரிலே இருக்கார்னு சொன்னேன். அம்மா மயக்கம் போட்டு விழுந்துட்டாங்க'' என்றான்.

''ஏய்யா, இப்படியா ஓடச்சி சொல்லுவே. பக்குவமா சொல்ல வேணும். நவுரு. நான் பாத்துக்கறேன்...தம்பிக்கு ஆக்ஸிடென்டாயிடுச்சா!''

''தெரியலே. சம்பந்தியம்மா போன் பண்ணாங்க. அம்மாவை ஆஸ்பத்திரிக்கு வரச் சொன்னாங்க.''

''அப்போ ஏன் நிக்கறே? போய் முத்துவை எழுப்பு. காரை எடுக்கச் சொல்லு!''

ராமையா வீட்டுக்குப் பின்புறமாய் வரிசையாகக் கட்டப்பட்டிருந்த வேலைக்காரர்கள் விடுதிக்கு ஓடினான்.

அவனும் அவன் மனைவியும் வீட்டில் சகலவேலைகளையும் கவனித்துக் கொண்டார்கள். டிரைவர் முத்து, தோட்டக்காரன் முனியன், ஒரு கூர்க்கா என்று ஆள் படைகள் இருந்தார்கள். போட் கிளப்புக்கு அருகில் பெரிய காம்பவுண்டுக்குள் இருந்த அந்தப் பங்களாவுக்கு அத்தனை பேர் தேவையாக இருந்தது.

வீட்டு எஜமானர்கள் மூன்று பேர் தாம். நகரின் முக்கிய மானவர்களில் ஒருவரான சிவபாதசுந்தரம் பிள்ளை. அவர் மனைவி பாகீரதி, ஒரேமகன் தேவ் என்கிற தெய்வசிகமாணி.

சிவபாதசுந்தரம் மோட்டார் உறுப்புகளில் மொத்த வியாபாரம் செய்பவர். கணிசமான வருமானம் அயல் நாட்டு ஏற்றுமதிகளில் கிடைக்கிறது. அடிக்கடி பம்பாய், டில்லி என்றும் லண்டன், நியூயார்க் என்றும் பறந்து கொண்டே இருப்பவர்.

எஜமானி பாகீரதிக்குப் பாரியான உடம்பு. ரத்த அழுத்தம், மூச் சிறைப்பு என்று அதையொட்டிய பணக்கார வியாதிகள். ஒரே மகனை தேவ் பெரும்பாலும் வீட்டிலேயே இருப்பதில்லை.

அந்தப் பெரிய பங்களாவில் எப்போதும் ஒரு தனிமை குடியிருந்தது. சில வருஷங்களாக ஒரு சோகமும் கூடச் சேர்ந்திருந்தது.



''பையன் இப்படிக் கெட்டுச் சீரழிந்து கொண்டிருக்கிறானே!'' என்று பாகீரதி அடிக்கடி புலம்பிக் கொண்டிருந்தாள். பலவிதமான மாத்திரைகள் - ஊசிகளின் துணையுடன் படுக்கையறையே கதி என்று கிடந்தாள்.

மகனுக்குக் கல்யாணம் நிச்சயமாகி விட்டபின், கடந்த மூன்று மாத காலமாகத்தான் அவள் முகத்தில் மலர்ச்சி திரும்பி இருந்தது. புதிய தெம்புடன் வீட்டுக்குள்ளேயே வளைய வந்து கொண்டிருந்தாள்.

காரில் கடை வீதிகளுக்குச் சென்று துணிமணிகளும் பாத்திரங்களும் வாங்க ஆரம்பித்திருந்தாள். இதற்கெல்லாம் ராணி தான் துணையாகப் போய்க்கொண்டிருந்தாள்.

சிவபாதசுந்தரம் தம்பதிகளுக்கு நெருங்கிய உறவினர்கள் என்று யாருமே இல்லை போல் தோன்றியது.

அவர் சிலோனைச் சேர்ந்தவர். அங்கேயே திருமணம் செய்து கொண்டவர். மனைவியுடன் சென்னையில் குடியேறி 25 வருடங்களாகின்றன. சாதாரண ஆளாக வந்து வியாபாரத்தில் இறங்கி இப்போது பல லட்சங்களுக்கு அதிபதியாகி இருக்கிறார்.

சமூக அந்தஸ்தில் படிப்படியாக மேலேறி வந்த பணக்காரர்களின் உறவினர்களும் அங்காங்கே விடப்பட்டு தொடர்புகள் இற்று விடும் பொதுவான நிலைமைகள் தான் இந்தக் குடும்ப விஷயத்திலும் ஏற்பட்டிருந்தன.

இதனால் தானோ என்னமோ மகனுக்கு சம்பந்தம் வைத்துக் கொள்ளும் இடத்தில் அந்தஸ்தில் ஒருபடி குறைவானாலும், பெரிய குடும்பமாக இருந்தால் புதிய உறவுகள் ஏற்பட்டு விட்டதால் களை கட்டும் என்று பாகீரதி தேவகியை மருமகளாக்கிக் கொள்ள முன்வந்தாள். திருமணச் செலவில் பெரும் பகுதியை அவளே ஏற்றுக் கொண்டு ஒரே மகனின் திருமணம் விமரிசையாக நடக்கட்டும் என்று பெரிய ஏற்பாடு செய்திருந்தாள்.

வார இறுதியில் ஆபட்ஸ்பரியில் கல்யாணம். இன்று மணப்பந்தலில் பூமாரிக்குப் பதிலாக இடி இறங்கிவிட்டது. அந்த அதிர்ச்சியே பாகீரதியை கீழே தள்ளி விட்டது.

## சோவியத் ஓவியர் தீட்டிய பாரதி உருவம்

சோவியத் யூனியனில் லெனின் கிராடுக்கு அருகில் 'வைபோர்க்' நகரில் வசிக்கும் 'மிகையீல் பியோதரோவ்' என்ற ஓவியர், பாரதியின் உருவத்தைத் திரைச் சீலையில் தைல வண்ண ஓவியமாகத் தீட்டியுள்ளார். பாரதி சபையை நோக்கி வந்து கொண்டிருப்பது போன்ற கோணம். பின்புறம், ''மக்கள் கவிஞர் சுப்பிரமணிய பாரதி. சோவியத் யூனியனின் உண்மையான நண்பராக விளங்கியவர். அந்த மகா கவிக்கு இந்தப் படைப்பைச் சமர்ப்பிக்கிறேன்'' என்ற வாசகம்

முன்புறம் படத்துக்கு அடியில்,

''மாகாளி பராசக்தி உருஷிய நாட்டினில்

கடைக்கண் வைத்தாள்....'' என்ற பாரதியின் 'புதிய உருஷ்யா' பாடலின் முதல் இரண்டு அடிகள். பாரதியின் உருவை வண்ண ஓவியமாகத் தீட்டிய முதல் ஐரோப்பிய ஓவியர் மிகையீல் பியோதரோவ் தான்.

-ஜானகி மணாளன்.

---

மாமூலான 200 மில்லி சாராயம் போட்டுவிட்டுத் தூங்கப் போய்விட்ட டிரைவர் முத்துவை எழுப்பிக் காரை எடுப்பதற்கு அரை மணி நேரம் தாமதித்து விட்டது. அதற்குள் பாகிரதி சுய நினைவுக்குத் திரும்பி, 'தேவ் தேவ்' என்று அரற்றிக் கொண்டிருந்தாள்.

பின் சீட்டில் அவளுக்குத் துணையாக ராணியை உட்கார்த்தி விட்டு ராமையா முன் பக்கம் டிரைவர் அருகில் உட்கார்ந்து கொண்டான்.

''எங்கேம்மா போவட்டும்? விஜயா ஆஸ்பத்திரிக்கே வுடச் சொல்லட்டுமா?'' என்று ராமையா கேட்டான்.

''அட, இன்னய்யா கேள்வி? நேரே அங்கேயே வுடு. போற வழிலேதானே சம்பந்தி வூடு இருக்குது. முதல்லே அங்கே போ'' என்று ராணி உத்தரவு பிறப்பித்தாள்.

ஐந்து நிமிடத்தில் அபிராமபுரத்தில் டாக்டர் வீட்டு வாசலை கார் எட்டிவிட்டது. உள்ளே வெளிச்சமாக இருந்தது. வீட்டிலுள்ளவர் யாருமே தூங்கப் போகவில்லை.

கார் சத்தம் கேட்டு தேவகியின் அம்மா மங்கையர்க்கரசி ஓடிவந்தாள்.

''வந்துட்டீங்களா? எங்கேபோனீங்க கூட காணுமேயின்னு நினைச்சிட்டிருந்தேன். வாங்க. ஆஸ்பத்திரிக்குப் போகலாம். வழியிலே எல்லாம் சொல்றேன்'' என்று அவளும் ஏறிக் கொண்டாள்.

''சம்பந்தியம்மா, எம் புள்ளைக்கு என்னாயிடிச்சு?''

''கவலைப்படாதீங்க. கல்யாண இன்விடேஷன் கொடுத்துட்டு வர பிரெண்ட்ஸ்வீடுங்களுக்குப்போயிருகார். ஏதோ தின்னுட்டாப் போலே. மயக்கமாயிட்டார். யாரோ வீட்லே கொண்டு உட்டுட்டுப் போனாங்க'' என்று மங்கையர்க்கரசி தைரியம் தரும் விதத்தில் பேசினாள்.

''அப்போ ஆக்சிடண்டு ஒண்ணுமில்லியே! ஆஸ்பத்திரிக்கு எடுத்திட்டுப் போயிருக்குன்னு சொன்னீங்களாமே?'' என்றாள் பாகீரதி.

''ரொம்ப நேரமா மூச்சு பேச்சில்லாம கிடக்கவே, டாக்டர் ஆஸ்பத்திரியிலே சிகிச்சை தேவைன்னு ஆம்புலன்ஸிலே கூட்டிட்டுப் போயிருக்காரு. நாம போறதுக்

குள்ளே உங்க பிள்ளைக்கு நினைவு வந்திருக்கும்....''

''என் வயித்திலே பாலை வார்த்தீங்கம்மா. என்னமோ ஏதோன்னு பயந்துட்டேன்'' என்று பாகீரதி பெருமூச்சுடன் சொன்னாள்.

விஜயா ஆஸ்பத்திரியை அவர்கள் அடைந்தபோது இரவு 12 மணிக்கு மேலாகி விட்டது. பெயரைச் சொல்லிக் கேட்டவுடனேயே எமர்ஜென்சி வார்டுக்கு வழி காண்பித்தார்கள்.

தனியான, வெளிச்சமான ஓர் அறையில் தேவ் வெண்மையான படுக்கையில் கிடந்தான்.

கைகளில் ஊசிகள் செருகப்பட்டு அவற்றை இணைத்த குழாய்கள் வேறு வேறு திசைகளில் படர்ந்து தூக்குகளில் தலைகீழாய்த் தொங்கிய புட்டிகளோடு உறவாடிக் கொண்டிருந்தன. சிவப்பாகவும், வெள்ளையாகவும் திரவங்கள் சொட்டுச் சொட்டாக இறங்கி தேவின் உடலுக்குள் சென்று கொண்டிருந்தன. இடது பக்கம் ஆக்ஸிஜன் சிலிண்டர். வலது பக்கம் சப்தமில்லாமல் விர்ர்ரிட்டுக் கொண்டிருந்த ஒரு மெஷின். மார்பிலும் நெற்றிப் பொட்டிலும் ஒட்ட வைத்த வயர்கள் கடிகாரம் போன்ற கருவிகளுடன் இணைந்திருந்தன.

மொத்தத்தில் தேவ் சிக்கலான ஒரு சூழ்நிலையில் தன் நினைவின்றியே கிடந்தான். அவன் தலைமாட்டில் வெள்ளுடையில் துப்புரவாய்த் தோன்றிய நர்ஸ் ஒருத்தி ஆக்ஸிஜன் புனலை அவன் மூக்கில் வைத்துப் பிடித்திருந்தாள்.

'தேவ் தேவ்' என்று குரலிட்டபடியே உள்ளே நுழைந்த பாகீரதியை அவள் 'உஷ்' என்று எச்சரித்தாள்.

''இங்கே சப்தம் போடாதீங்க. அடுத்த ரூமிலே டாக்டருங்க இருக்காங்க. இவரைப் பற்றி அவங்க சொல்வாங்க'' என்று விரட்டினாள்.

மங்கையர்க்கரசி சம்பந்தியம்மாளின் கையைப் பற்றி வெளியே அழைத்துச் சென்றாள்.

தாழ்வாரத்தின் கோடியில் டாக்டர் மாத்ருபூதம் என்ற பெயர்ப் பலகையுடன் இருந்த அறையில் விளக்கெரிந்து கொண்டிருந்தது. இருவரும் கதவைத் தள்ளிக் கொண்டு உள்ளே நுழைந்தார்கள். டாக்டர் பூஷணமும் அவருடன் இளைஞராகக் காணப்பட்ட இன்னொரு டாக்டரும் இருந்தனர்.

''மக்கி, தேவ்வின் அம்மா வந்திருக்காங்க. மாப்பிள்ளை எப்படி இருக்கார்னு சொல்லுங்க!'' என்று மங்கையர்க்கரசி சொன்னாள்

''வாங்கம்மா இப்படி உட்காருங்க.'' பூஷணம் பாகீரதியை ஒரு சோபாவில் அமர்த்தினார்.

(தொடரும்).

---



**இதோ! தலைப்பு!!**

கதாசிரியருக்குத் தலைப்புக் கிடைக்கவில்லையாம். பொருமிக்கொண்டிருந்தார். ''எல்லாத் தலைப்புக்களையும் சினிமாக்காரனுக போட்டுட்டாங்க' என்று முனகிக்கொண்டிருந்தார்.

பீரோவைத் திறந்து கொண்டுவந்தாள் அவருடைய மனைவி. அவர் தலையிலடித்துக்கொண்டார்! அவள் கொண்டு வந்தது நல்ல தலைப்புள்ள பட்டுப் புடவைகளை.

—எம்.கே. நாராயணன்

# ஏஞ்சல் டஸ்ட்

## கி. கஸ்தூரிரங்கன்

## 9. ஸைக்கியாட்ரிஸ்ட்

''என் பிள்ளைக்கு என்ன ஆச்சு டாக்டர்?''

''சொல்றேன். இவர் டாக்டர் மாத்ருபூதம். ஃபேமஸ் ஸைக்கியாட்ரிஸ்ட்... அவரை நீங்க முன்பு பார்த்திருக்கீங்களா?''

பாகீரதி டாக்டர் மாத்ருபூதத்தைப் பார்த்தார். அவர் முகத்தில் அறிமுகப் புன்னகை தவழ்ந்தது.

பாகீரதி தயங்கினாள்.

''ஒருமுறை தான் வந்திருந்தீங்க. அப்புறம் வரலை. மறந்து போயிருக்கும்!'' என்று சொல்லிச் சிரித்தார் டாக்டர் மாத்ருபூதம்.

'ஆமா. ஆமா. உங்க கிளினிக்குக்கு வந்திருந்தேன். பையனுக்குக் கல்யாணமானா சரியாயிடும்னு சொன்னாங்க. அதனாலே தான் வரலை...''

''ஸோ, யுவர் ஸன் இஸ் எ டிரக் அடிக்ட்...போதை மருந்துக்கு அடிமையா எத்தனை வருஷமா இருக்கிறான்?'' என்று திடீரென்று ஒரு கேள்வியை வீசினார் டாக்டர் பூஷணம்.

பாகீரதி பதில் சொல்லாமல் தலையைக் குனிந்து கொண்டாள். அவள் கன்னத்தில் கண்ணீர் வழிந்து விளக்கு வெளிச்சத்தில் பளபளத்தது.

''அவங்க பிள்ளைக்கு எப்படி இருக்குன்னு முதல்லே சொல்லுங்க. அதைச் சொல்லாம வேறு எதையோ கேட்டிட்டிருக்கீங்களே?'' என்றாள் மங்கையர்க்கரசி.

''கிரிட்டிகலா தான் இருக்கு. ஏதோ போதை மருந்தை நிறைய சாப்பிட்டிருக்கார். கிட்னி அஃபெக்டாயிருக்கு. டயாலிஸிஸ் மெஷின்லே வச்சிருக்கோம்...'' என்றார் டாக்டர் பூஷணம்.

''அப்படீன்னா? கோமாவிலிருந்து எழுந்திருக்கலையா?''

''அதுக்குள்ளே எப்படி முடியும்? டாக்டர் மாத்ருபூதம் வந்து தான் டிரக் பாய்ஸனிங்குனு தெரிஞ்சுது. என்ன மருந்துன்னு கண்டுபிடிச்சு அதுக்கு ஆன்டிடோட் தரணும்.... இட் வில் டேக் ஸம் டைம்...''

பாகீரதியிடமிருந்து ஒரு விம்மல் வெடித்தது.

''ரொம்பக் கவலைப்பட ஒண்ணுமில்லை'' என்று குறுக்கிட்டார், டாக்டர் மாத்ருபூதம். ''டயாபெடிக் கோமா மாதிரி சீரியஸ்

இல்லை. இந்த மாதிரி பாய்ஸனிங் கேஸிலே ஆட்டமேடிக்கா நினைவு திரும்பிடும். கிட்னி அஃபெக்டானது தான் ஒருகாப்ளிகேஷன்''.

''வாட் அபௌட் ஹிஸ் டிரக் ப்ராப்ளம்?'' என்று கேட்டார் டாக்டர் பூஷணம்

''அதையும் க்யூர் பண்ணிடலாம். கொஞ்ச நாளைக்கு ஸைக்கியாட்ரி ட்ரீட்மெண்ட்டிலே இருக்க வேணும்.''

''எத்தனை நாளா?''

''ஆறு மாசம். ஒரு வருஷம், நிச்சயமா சொல்ல முடியாது!'' என்றார் டாக்டர் மாத்ருபூதம்..

''ஐயோ கஷ்டமே! நாலு நாள்லே கல்யாணம் நடக்க இருக்குது. இப்போ இப்படிச் சொல்றீங்களே!'' என்றாள் மங்கையர்க்கரசி அதிர்ச்சியுடன்..

''கல்யாணமாவது கத்தரிக்காயாவது? கான்ஸல் பண்ண வேண்டியதுதான்'' என்றார் அவருடைய கணவர்.

''அப்படிச் சொல்லாதீங்க.... சொல்லாதீங்க....'' என்று கெஞ்சி அழுதாள் தேவ்வின் அம்மா.

''தேவகி எங்கே?'' என்றாள் மங்கையர்க்கரசி.

''அதோ தூங்கிட்டிருக்கா? ஸெடட்டிவ் கொடுத்து தூங்க வைச்சிருக்கோம்!'' என்றார் டாக்டர் பூஷணம்.

அந்த விஸ்தாரமான அறையின் ஒரு பகுதி திரையிட்டு மறைத்திருந்தது. அதன்பின்னல் ஒரு கட்டிலில் தேவகி படுத்திருந்தாள். மங்கையர்க்கரசி அவளைப் பார்க்கச் சென்றாள்.

''இந்த மட்டும் உங்க மகன் பிழைச்சு எழுந்துடுவார்னு நீங்க சந்தோஷப்படணும். உங்க ஒத்துழைப்பு இருந்தா அவருடைய டிரக் பிராப்ளத்தையும் சரிப் பண்ணிடலாம்'' என்று டாக்டர் மாத்ருபூதம் பாகீரதியைத் தேற்றும் வகையில் கூறினர்.

பாகீரதி நீர் திரையிட்ட கண்களுடன் அவரைப் பார்த்தாள்.

''உங்களைக் கேட்காம கல்யாணத்துக்கு ஏற்பாடு செஞ்சிட்டோம். எங்க தப்புதான்'' என்றாள்.

''இது எல்லாரும் செய்யற தப்புதான். பொதுவா கல்யாணம் பல வித கோளாறுகளைத் தீர்த்துடும்னு நினைக்கிறாங்க. ஆனா இதுபோல கேஸிலே அது ஒரு ஸொல்யூஷன் இல்லை.''

''கல்யாணம் நிச்சயமான நாள்ளேருந்து அவன் ஒழுங்காத்தான் இருந்தான் டாக்டர்.''

''எத்தனை நாளைக்கு? நீங்க முன்னே என்னிடம் வந்தபோது அவர் சொன்னதை வச்சுப்பார்த்தா உங்கள்பிள்ளைக்குப் போதைமருந்து பழக்கம் பள்ளிக்கூட நாள்லேயிருந்து, அதாவது ஐந்தாறு வருஷமா இருக்கு. நடுநடுவே ஒரு டைவர்ஷன் ஏற்பட்டு தற்காலிகமா அதை மறந்துட்டு இருக்கலாம். ஆனா அடிக்டாகிவிட்டவங்க ஸைக்கியாடிரிக் டிரீட்மெண்ட் உதவி இல்லாம அதிலிருந்து பூர்ணமாக விடுபட முடியாது'' என்றார் டாக்டர் மாத்ருபூதம்.

''நல்லா தூங்குது'' என்றுசொல்லிக்கொண்டே மங்கையர்க்கரசி வந்தாள்.

''டாக்டர், நீங்க இந்த அம்மாவிடம் பேசிட்டு இருங்க. நான் பேஷண்டைப் பார்த்திட்டு வரேன். மங்கா நீயும் வா'' என்று டாக்டர் பூஷணம் மனைவியை அழைத்துக் கொண்டு வெளியேறினர்.

''என் மகன் கண்ணு முழிக்க எத்தனை நேரமாகும் டாக்டர்?'' என்று பாகீரதி கேட்டாள்.

''அவர் என்ன மருந்து சாப்டிருக்கார்னு கண்டு பிடிக்கணும். உங்களுக்கு அதுபற்றி ஏதாவது தெரியுமா?''

''தெரியாதுங்க. அவன் போதை மருந்து சாப்பிடுற விஷயம் ஆறு மாசத்துக்கு முன்னமே அவன் சிநேகிதன் ஒருத்தன் சொல்லித்தான் தெரியும்.''

''யார் அந்த சிநேகிதன்?''



''முழுப் பேரும் தெரியாது. துரைன்னு பேரு. மினிஸ்டரின் பிள்ளையாம். இரண்டு மூணு தடவை வீட்டுக்கு வந்திருக்கான்.''

அந்தப் பெயரையும் மினிஸ்டர் பெயரையும் டாக்டர் குறித்துக் கொண்டார்.

''இன்னிக்கு அவர் மருந்து சாப்பிட்டிருக்கார். ஆளைச் கொல்ற

அளவுக்கு நிறையத்தின்னிருக்கார். சாப்பிட்டு நேரம் ஆயிட்டதினுலே ஸ்டமக் வாஷ் செய்து; பிரயோசன மில்லே. ஒண்ணும் கிடைக்காது. இடையிலே வலிப்பு வந்து 'சோக்' காயிடற டேஞ்சரும் இருக்கு. அதனுலே அவர் எங்கே போனுர், யாரோடு இருந்தார், என்ன சாப் பிட்டார்னு கண்டுபிடிக்கிறது முக்கியம். நீங்க ஒரு டிடெயில் விடாம எல்லா விவரமும் சொல்ல ணும்'' என்று டாக்டர் மாத்ரு பூதம் கேட்டுக் கொண்டார்.

தேவ்வின் போதை மருந்து பற்றிய வரலாற்றை அவர் முன்பே கேட்டுக் குறித்துக் கொண்டிருந்தார். அதை இப்போது நினைவு படுத்திக்கொள்ள முயன்ருர்.

தேவ்வுக்கு போதை மருந்துப் பழக்கம் அவன் ஊட்டியில் கான் வென்ட் நாட்களிலேயே ஆரம் பித்துவிட்டது. இது அவனே கொடுத்த வாக்குமூலம்.

முதலில் சிகரெட். ஆண்மை மலரும் பருவத்தில்-அதன் அடையாளமாக அநேக இளைஞர்களிடம் தொற்றிக்கொள்ளும் பழக்கம் தான். அதிலும் 'போர்டிங்' பள்ளிகளில் பணக்கார வீட்டுப் பிள்ளைகள் வாழ்க்கையில் புதுப் புதுச் சுவைகளை எந்த விலையானுலும் தேடி அனுபவிக்கும் துடிப்புள்ளவர்கள். கான்வென்ட் பள்ளிகளில் கட்டுப்பாடுகளை மீறுவதை ஒரு திரில்லாகக் கருதும் வயசு.



''ஆபீஸிலே ஏதோ 'ப்ராப்ளம்' ன்னு சொன்னியே.... என்ன ஆச்சு?''

''அதுக்காகத்தான் இப்ப கணக்கு வாத்தியாரிடம் டியூஷன் படிச்சிட்டிருக்கேன்.''

ஓர் நண்பனின் அறிமுகத்தினுல் பள்ளி இறுதி வகுப்பின்போது தான் தேவ்வுக்கு ஹஷீஷ் புகைக்கும் பழக்கம் ஏற்பட்டது. கஞ்சாச் செடியின் துளிர் இலைகளையும், பூக்களையும் உலர்த்தி பொடியாக்கி சலித்து ஆளிவிதை எண்ணெயுடன் கலந்து மெழுக்குப் போன்ற துண்டுகளாகக் கிடைப்பது உயர் ரக ஹஷீஷ். 'சுப்பீரியர் கிராஸ்' என்று பெயர் உண்டு. கஞ்சாச் செடியின் எஞ்சிய பொருள்கள் மட்டரகமானவை. அவற்றைப் புகையிலையுடன் கலந்து புகைப்பது இந்தியாவில் பரவலாக இருக்கும் வழக்கம். வட இந்திய ஹுக்காவில் இந்தச் சரக்கு பயன்படுத்தப்படுகிறது.

மகாராஜாக்கள் முதல் சாதுக்கள் வரை கஞ்சா அடிக்கும் பழக்க முள்ளவராக இந்திய கலாச்சாரத்தின் ஒரு பகுதியாகவே இது ஆகிவிட்டது. அந்த அளவில் இதை ஒரு தீய பழக்கமாகவும் யாரும்கருத வில்லை.

ஆனுல் மேற்கத்திய நாகரிகத்தின் தாக்கம் ஏற்பட்ட பிறகு இளைஞர்களிடையே இந்தப் பழக்கம் தொத்திக் கொண்டு, கொடிய நஞ்சாக ஆளை அடிமைப்படுத்திக் கொல்லும் மோகினிப் பிசாசாக உருவெடுத்து விட்டது. போர்டிங் பள்ளிகள், ஹாஸ்டல்கள் மட்டுமின்றி, பொறி இயல் மருத்துவக் கல்லூரிகளிலும், பெண்கள் கல்லூரிகளிலும் கூடப் போதைப் பொருள்களுக்கு அடிமையாகிவரும் மாணவ மாணவிகள் பெருகி வருவதை டாக்டர் மாத்ருபூதம் கவனித்து வருகிருர்.

ஹஷீஷோடு நின்ருல் பரவாயில்லை. எல்.எஸ்.டி. ஹீராயின், பெதடின் என்ற ரசாயனப் பொருள்களில் இன்னும் 'கிக்' கிடைப்பதால் அவற்றையும் நாட ஆரம்பித்து விட்டார்கள். புகைப்பதைவிட மாத்திரைகளாக விழுங்கினுல் அதிக போதை, ஊசிமூலம் நேராக ரத்தக் குழாயில் செலுத்திக் கொண்டால் இன்னும் அதிக

'கிக்' என்று அடிமைத்தனம் கட்டம் கட்டமாக தீவிரமாகிக் கொண்டே போவதையும் அவர் பார்த்து வருகிறார்.

பள்ளிப்படிப்பின் கடைசி ஆண்டு 'தேவ்'வின் சரிவைப் பதிவு செய்தன. வகுப்பிலேயே முதலாவதாக இருந்து மாநிலத்திலேயே முதல் 'ராங்க்' எடுக்கக் கூடியவன் என்ற அளவுக்கு அவன் படிப்பில் ஆர்வம் காண்பித்து வந்தான்.

புகைக்கும் பழக்கம் ஏற்பட்ட பிறகு இந்த ஆர்வம் படிப்படியாக குறையவே ஆரம்பித்து விட்டது. ஹஷிஷ் புகை மூளை செல்களை விஸ்தரித்து வேறு கனவுலகத்திற்கு எடுத்துச் சென்றது. அதைத் தவிர வேறு எதிலும் தீவிர ஈடுபாடு கொள்வதைத் தடுத்தது. வகுப்புகளில் கவனம் குறைந்தது. புத்தகங்களில் படிப்பது மூளையில் பதியவில்லை. டெஸ்டுகளில் மார்க்குகள் குறைந்தன. அதைப்பற்றி கவலைப்படாத மன நிலையும் அவனுக்கு ஏற்பட்டது.

ஆனால் அவனது ஆசிரியர்கள் கவலைப்பட்டார்கள். பள்ளி முதல்வரே அவனைக் கூப்பிட்டு விசாரித்தார். 'வீட்டில் அம்மாவுக்கு உடம்பு ரொம்ப மோசமாகிக் கொண்டு வருகிறதாம். அந்தக் கவலையில் வேறெதிலும் மனம் ஓடவில்லை' என்று புளுகினான். நம்பினார்கள்.

போதைப் பொருள்களுக்கு அடிமையாகும் மாணவன் ஆரம்பக் கட்டத்தில் அதை ஆசிரியர்களிடம் இருந்தும், பெற்றோரிடமிருந்தும் மறைத்து வைத்து விடுகிறான். அவனது நடத்தையிலும் பழக்க வழக்கங்களிலும் தோற்றத்திலும் ஏற்படும் சிறுசிறு மாற்றங்கள் கவனிக்கப்படாமல் போகின்றன.

தேவ் இறுதியாண்டுப் பரீட்சையில் 40 சதவீதம் மதிப் பெண்களுடன் வெளியேறினான். 90-ம் 100-ம் வாங்கி வந்தவன் இத்தனை குறைவாக மதிப்பெண் பெற்றது பெரிய அதிர்ச்சியாக இருந்தது.



இந்துஸ்தானி இசையில் இப்போது சுமார் 200ராகங்கள் உள்ளன.

இந்தியா முழுவதிலும், 700 ஆண்டுகளுக்கு முன் பொதுவாக ஒரே வகையான இசை தான் இருந்தது.

பையனை எஞ்சினீயரிங் கல்லூரியில் சேர்க்க வேண்டும் என்று நினைத்திருந்த தந்தைக்குப் பெரிய ஏமாற்றமாக இருந்தது.

''இப்பவெல்லாம் கம்ப்யூட்டர் வந்து மார்க்கையெல்லாம் தப்பு தப்பா போட்டிருதாம். அதான் இப்படி ஆயிட்டுது'' என்று அம்மா அவனுக்காகப் பரிந்து பேசினாள்.

யார்யாரையோ பிடித்து கொடுக்க வேண்டியதைக் கொடுத்து ஒரு எஞ்சினீரிங் கல்லூரியில் இடம் பிடித்தார். அங்கேயும் கெட்ட சகவாசம் ஏற்பட்டது.

பெதடின் ஊசி, எல்.எஸ்.டி. மாத்திரை ஆகியவை அவனுக்கு அறிமுகமாகிவிட்டிருந்தன. பணம் கேட்டு அம்மாவுக்கு அடிக்கடி எழுதினான். கல்லூரியிலிருந்து அவனைப் பற்றிப் புகார் வந்தது. இரண்டாவது ஆண்டிலேயே திரும்பிவிட்டான்.

அந்தக் கட்டத்தில் கூட பெற்றோருக்கு அவனுடைய அடிமைப் பழக்கங்கள் தெரிந்திருக்க வில்லை. அவனே தான் திருந்தி அவற்றிலிருந்து விடுபட முயற்சி செய்தான். ஆறுமாதம் ஒழுங்காக இருந்தான். அப்பாவின் கம்பெனியிலேயே டைரக்டராகப் பணியாற்ற ஆரம்பித்தான்.

அப்போதும் கூட அவனுக்கு 'மாண்ட்ராக்ஸ்', 'ப்ரோடோர்ம்' ஆகிய மாத்திரைகளின் துணை தேவைப்பட்டது. இவை யெல்லாம் பிரிஸ்கிருப்ஷனில் மட்டும் கிடைக்கும் தூக்க மாத்திரை வகையைச் சேர்ந்தவை. ஆனால் திருட்டுத் தனமாக விற்பவர்களிடமிருந்து தாராளமாகவே கிடைத்து வந்தது.

ஆனால் முற்றிலும் அடிமையாகி, 'ஹிப்பி'கள் போன்று பரப்பிரும்ம நிலையை தேவ் எட்டி விடவில்லை. அந்த நிலைமைக்குப் போகக் கூடிய வாய்ப்புக்களைத் தவிர்த்துவந்தான்.

டாக்டர் மாத்ருபூதத்திடம் அவன் வந்தபோது தோற்றத்திலிருந்து போதைப் பழக்கமுள்ளவன் என்று எளிதில் சொல்ல முடியாதவனாகத்தான் இருந்தான். இடைவிடாமல் ஹஷீஷ் புகைப்பவர்கள் ஊசி போட்டுக் கொள்பவர்கள் இவர்கள் தான் உருக்குலைந்து ஹிப்பித் தோற்றத்துடன் இருப்பவர்கள்.

தேவ் ஹஷீஷ் புகைக்கும் கும்பல் ஒன்றுடன் தொடர்பு வைத்திருந்ததாகச் சொன்னான்.

''வாரா வாரம், சனிக்கிழமை இரவு மட்டும்தான் போவேன்'' என்றான்.

புகைக்கும் இடம் எது, வேறு யார் யார் உண்டு என்பதற்கு பதில் சொல்ல மறுத்து விட்டான். அவனைப் பற்றிய பின்னணியை முழுதாக அறிந்து கொண்ட பின் வேறு சில டெஸ்டுகளுக்காக மென்டல் ஆஸ்பத்திரிக்கு வரச் சொன்னார். வருகிறேன் என்று போனவன் அப்புறம் வரவே இல்லை. பைத்தியம் என்று ஆஸ்பத்திரியில் அடைத்து விடுவார்களோ என்று பயந்திருக்கலாம்.

பாகீரதியிடம் அதைச் சொல்லிச் சிரித்தார் மாத்ருபூதம்.

''நீங்கள் பயந்திருக்க வேண்டாம். அங்கே நான் வேலை பார்க்கிறேன். மனோவியல் சம்பந்தமான சில எக்விப்மென்டுகள், கருவிகள் அங்கே இருப்பதால் டெஸ்டுக்கு வரச் சொன்னேன்'' என்றார்.

''இப்ப இவனை மீட்டுடுங்க டாக்டர். அப்புறம் ஆஸ்பத்திரியிலே அடைச்சுப் போட்டாலும் சரி, நான் மறுக்க மாட்டேன்'' என்றாள் பாகீரதி.

''அதுக்கு அவசியமிருக்காது. இப்ப உடனடியா தெரிய வேண்டியது அவர் சாப்பிட்டது என்ன என்கிறதுதான். நீங்க ஒரு க்ளூ கொடுத்திருக்கீங்க. அதை வச்சு கண்டு பிடிச்சிடலாம்...''

''டாக்டர். நிச்சயம் செய்திருக்கிற கல்யாணத்தை எப்படியாவது நடத்தித் தந்துடுங்க.... இந்தப் பொண்ணு எனக்கு மருமகளா வர வேணும்.''

''நாலு நாள்லே கல்யாணம் நடக்கிறதுங்கிறது முடியாது. உங்க பிள்ளை ரிகவர் ஆக ஒருவாரம் பத்து நாளாவது ஆகும். க்யூர் ஆக ஆறு மாசம் ஒரு வருஷம் வேணும். அப்புறம் கல்யாணம் வச்சுக்கலாம். ஆனா டாக்டர் பூஷணம் சம்மதிக்கணுமே!''

''அவர் ஒப்புக்கமாட்டாரா டாக்டர்.''

''போதைமருந்துப் பழக்கத்தை மறைச்சிட்டுக் கல்யாணம் முடிச்சிருக்கீங்கன்னு அவர் கோவமா இருக்கார். குடிகாரனை விட டிரக் அடிக்ட் மோசமானவன் என்று அவர் நினைச்சிருந்தா தப்பில்லையே?''

''அப்படியானா நிச்சயமாயிருக்கிற கல்யாணத்தை கான்ஸல் பண்ணிடணுமா?''

''இப்போ இருக்கிற சூழ்நிலையிலே கல்யாணத்தை மறந்திடுங்க. உங்க பிள்ளை முழுசா குணமான பிறகு அதைப் பற்றி யோசிக்கலாம்'' என்றார் டாக்டர் மாத்ருபூதம்.

திரைமறைவில் படுத்திருந்த தேவகிக்கு திடீரென்று விழிப்பு வந்து விட்டது. கடைசி நிமிட சம்பாஷணை அவள் காதில் விழுந்தது.

(தொடரும்)



# ஏஞ்சல் டஸ்ட்

கி.கஸ்தூரி ரங்கன்

## 10. ஒரு தீர்மானம்

"அத்தை!" என்ற குரல் கேட்டு, பாகீரதி திரும்பிப் பார்த்தாள். தேவகி திரையைத் தள்ளிக் கொண்டு வெளிப்பட்டாள்.

"தேவகி! வாம்மா. இப்படி உக்காரு. எங்கே மறுபடியும் கூப்பிடு 'அத்தை'ன்னு!" என்று அவள் கைகளைப் பிடித்து வாஞ்யுடன் பக்கத்தில் இருத்திக்கொண்டாள்.

"அதுக்குள்ளே எழுந்துட்டீங்களா! நல்லதுதான். உங்களிடம் பேச வேண்டியது ஒண்ணு இருக்கு" என்றார் டாக்டர் மாத்ருபூதம்.

"தேவ் எப்படி இருக்கிறார் டாக்டர்?" என்று கேட்டாள் தேவகி.

"90 பர்சன்ட் சான்ஸ் இருக்கு. அவருடைய பல்ஸ், சுவாசம் எல்லாம் சீராக இருக்கு. கிட்னி மறுபடியும் வேலை செய்ய ஆரம்பிக்கணும். டயாலிஸிஸ்லே வச்சிருக்கோம். அப்பறம் கோமாவிலிருந்து மீளணும். அதுவும் கஷ்டமில்லே. ஆனா அவர் என்ன மருந்து சாப்பிட்டிருக்கார்னு தெரியணும்!"

"அதைக் கண்டுபிடிக்கிறது கஷ்டமா? எங்கே போயிட்டு வந்தார்னு விசாரிச்சா தெரிஞ்சுடுது!"

"அதைக் கண்டுபிடிக்கணுமே. உங்களுக்கே எங்கே போறேன்னு சொல்லலே. வேற யாருக்கு தெரியும்!"

"பிரண்ட்ஸ் யாராவது இருந்தாக் கேட்டுடலாம்."

"ஒருத்தர் இருக்கார். துரைன்னு பேரு. மினிஸ்டரின் பிள்ளையாம். பாகீரதி அம்மா தான் தகவல் சொன்னாங்க."

"பின்னே என்ன? நானே காலேல காண்டாக்ட்பண்ணி கண்டுபிடிச்சு சொல்றேன் டாக்டர். அவர் தானாகவே போதை மருந்து இந்த அளவுக்கு தின்னிருப்பார்னு நான் நினைக்கலே. வேற யாரோ, விளையாட்டுக்காகவோ, அல்லது பழி

வாங்கறதுக்காவோ விஷம் கொடுத்திருக்காங்கன்னுதான் தோணுது!''

''அதையும் எஸ்டாபிளிஷ் பண்ணிக்க வேணும். எதுக்கும் போலீஸ் வழியா போறு நல்ல துன்னு தோணுது. உங்களுக்கு ஹை லெவல்லே யாரையாவது தெரியுமா?'' என்று கேட்டார் டாக்டர்.

''எங்க வீட்டுக்காரரும் போலீஸ் கமிஷனரும் பிரெண்ட்ஸுங்க தான். அவர் வந்ததும் விசாரிக்கச் சொல்றேன்!'' என்றாள் பாகீரதி.

''அவர் பம்பாய் போயிருக்கிறதா சொன்னீங்களே!''

''காலை பிளேட்ல வந்திடுவாரு. அதனால தான் அவருக்கு போன் கூட போடலே. இப்படி ஆச்சுன்னு தெரிஞ்சா ரொம்ப பதறிப் போயிடுவாரு'' என்று பாகீரதி சொல்லிவிட்டு விம்மி அழுதாள்.

''அழாதீங்க அத்தை, எல்லாம் நல்லபடியா ஆயிடும்'' என்று தேற்றினாள் தேவகி.

''சொல்லும்மா. எல்லாம் நல்லபடியாகி நீயே அவனைக் கல்யாணம் பண்ணிக்குவேன்னு சொல்லும்மா!''

''தேவகி, உங்களிடமிருந்து எனக்கு ஒரு உதவி வேணும். கல்யாணம் கான்ஸல்னு உங்கப்பா சொல்லிக்கிட்டிருக்காரு. அது உங்க குடும்பத்திலே முடிவு செய்ய வேண்டிய விஷயம். ஆனா தேவ்வுக்கு நினைவு திரும்பி அவர் நார்மலாகிற வரை நீங்க அவரைத் தான் கல்யாணம் பண்ணிக்கப் போறீங்கன்னு அவர் நினைச்சுக்கும் படியா நடந்துக்கணும்!''

''நான் என்ன செய்யணும் டாக்டர்?''

''ஒண்ணுமில்லே. இவரை விட்டுட்டு உங்களுக்கு வேற இடத்திலே கல்யாணம் பண்றதா இருந்தா அதுபற்றி அவருக்கு தெரியக் கூடாது.''

''வேற எடத்திலே கல்யாணமா!'' என்று ஏளனமாகக் கேட்டு சிரித்தாள் தேவகி. ''கல்யாணம்னு நிச்சயமான தேதியிலிருந்து நான் தான் அவருக்கு மனைவின்னு முடிவயிட்டுது. அதை நான் மாத்திக்க மாட்டேன் டாக்டர்.''

''என் கண்ணே என் தெய்வமே'' என்று பாகீரதி அவளைக் கட்டித் தழுவி உச்சி முகர்ந்தாள்.

டாக்டர் பூஷணமும் மங்கையர் கரசியும் உள்ளே வந்தனர்.

''ஹலோ? எழுந்திட்டயா தேவகி? குட். நாம வீட்டுக்குப் போவோம். கிளம்பு'' என்றார் டாக்டர் பூஷணம்.

''பேஷண்ட் எப்படி இருக்கார்?'' என்று கேட்டார் டாக்டர் மாத்ருபூதம்.

''அப்படியே தான் இருக்கார். டாக்டர் ஜெயந்தி வந்திட்டாங்க.. இன்னும் 24 மணி நேரம் டயாலிஸிலேயே வச்சிருக்கணும்னு சொல்றாங்க. அவருக்கு நினைவு எப்ப திரும்புமோ. அதை நீங்க தான் கவனிச்சுக்க வேணும்.''

''அப்ப நீங்க போங்க. நான் பார்த்துக்கறேன். பாகீரதி அம்மா கூட போகலாம். காலைலே வந்து பார்த்தா போதும்!'' என்றார் டாக்டர்.

''இல்லீங்க. நான் இங்கேயே அவன் கண்ணு முழிக்கிறவரை இருக்கேன். வீட்டுக்குப் போய் தனியா இருந்து வேதனைப்படறதை விட இங்கேயே இருந்திடறேன்'' என்றாள் பாகீரதி.

''நானும் இருந்திட்டு காலைல வர்ரேம்பா!'' என்றாள் தேவகி.

''என்னது! நீ இருக்கிறதா...? அதெப்படி! உனக்கும் அவருக்கும் சம்பந்தம் வுட்டுப் போயிடுச்சு.. வீட்டுக்கு வா போலாம்!'' என்றாள் மங்கையர் கரசி

''தேவகி. உன்னோட சில விஷயம் பேசணும். எங்களோட வீட்டுக்கு வந்தாகணும்'' என்றார் டாக்டர் பூஷணம்.

''நீங்க போங்க. பாகீரதிஅம்மா இங்கேயே தூங்கட்டும். அப்புறம் நீங்க செய்ய வேண்டிய வேலை

வேற இருக்கு. போங்க'' என்ருர் டாக்டர் மாத்ருபூதம்.

''டாக்டர்! நீங்க வண்டி கொண்டு வரலியே. என் வண்டியிலேயே போயிடுங்க. டிரைவர் கிட்டே சொல்லுங்க. விட்டுட்டு வந்துடுவார்'' என்று டாக்டர் பூஷணத்திடம் சொன்ஞர்.



தேவகியும் அரை மனதுடன் கிளம்பினாள்.

''அம்மா தேவகி! வாசல்லே. எங்கவீட்டு ஆளுங்க இருப்பாங்க. ராமையா இல்லே ராணி யாராவது ஒருத்தரை வரச் சொல்லும்மா!' என்றாள் பாகீரதி.

''சரி அத்தை!'' என்று சொன்ன தேவகியை மங்கையர்க்கரசி முறைத்துப் பார்த்துவிட்டு கையைப் பற்றி இழுத்துக் கொண்டு போனாள்.

''அத்தையாம் அத்தை!'' என்று அவள் நொடிப்பது பாகீரதியின் காதில் விழுந்தது.

''உங்க மகனைப் பார்க்கணும்னு என்னோட வாங்க.'' என்று டாக்டர் மாத்ருபூதம் எழுந்தார்.

கார் ஆஸ்பத்திரியை விட்டுப் புறப்பட்டு ஐந்து நிமிஷம் ஆகியும், டாக்டர் பூஷணம் ஒன்றும் சொல்லவில்லை.

''என்னமோ பேசணும்னு சொன்னீங்களே அப்பா!'' என்றாள் தேவகி.

''வீடு வரட்டும், அப்புறம் பேசலாம்!'' என்றார் டாக்டர்.

வீட்டில் குழந்தைகள் தவிர மற்றவர்கள் தூங்காமல் காத்திருந்தார்கள்.

## பொன்விழாக் காணும்



1932-ம் ஆண்டு. திரு (மகரிஷி) வாசுதேவாச்சாரியார் கல்லூரிப் பேராசிரியராக இருந்தார். தி. நகரில் ஒரு பள்ளிக் கூடம் ஆரம்பிக்க வேண்டும் என்று அவருக்குத் தோன்றியது. திரு. கிருஷ்ணசாமி ஐயர், திரு. சுப்பிரமணிய ஐயர் ஆகிய இரு நண்பர்களுடன் 60 மாணவர்களைச் சேர்த்துக் கொண்டு 13.6.1932-ல் ஸ்ரீ ராமகிருஷ்ண பள்ளியை ஆரம்பித்தார். ராமகிருஷ்ண மிஷனின் ஆதரவை எதிர்பார்த்துஅந்தப்பெயரில் ஆரம்பிக்கப்பட்டாலும் ராமகிருஷ்ண மிஷனின் உதவி பல ஆண்டுகளுக்குப் பிறகே கிட்டியது. ஆரம்ப காலத்தில் முழு மூச்சுடன் ஒத்துழைத்தவர்கள் தனி நபர்களே. அவர்களில் குறிப்பிடத் தக்கவர் திரு ராமசுவாமி ஐயங்கார். வாத நோயினால் படுத்த படுக்கையாக இருந்த நிலையிலும் பிடிவாதமாக ஆரம்ப விழாவிற்கு வந்து சிறப்பித்தார். அடுத்த சில நாட்களில் இறந்து போனார். இவர் போன்ற பொது நலத் தொண்டில் தீவிர ஈடுபாடுடையவர்களின் உழைப்பினால் தான் இந்தப் பள்ளி வளர்ந்தது என்று நினைவு கூர்ந்தார் திரு. சீனிவாசாச்சாரியார். இவர் இப்போதுபழைய மாம்பலம் அசோபில மடம் மேல் நிலைப்பள்ளியை

''மாப்பிள்ளை எப்படி இருக்கார்?'' என்று கேட்டாள் கோமதி அம்மா.

''பொழச்சுக்குவார். ஆனா மாப்பிள்ளைன்னு சொல்லாதீங்க!'' என்றாள் மங்கையர்க்கரசி.

''அப்படீன்னா?''

''கல்யாணம் கான்ஸல்! பையன் தகாத பழக்கமெல்லாம் வச்சிருக்கான்னு இப்பத்தான் தெரிஞ்சுது. நல்ல வேளை தப்பிச்சோம்!''

''அம்மா, அனாவசியமா பழி போடாதீங்க'' என்றாள் தேவகி.

''தேவகி! உனக்கு டீடெய்லா எல்லாத்தையும் சொல்லிடறேன். அப்புறம் எங்க முடிவு சரிதான்னு நீயே ஒப்புக்குவே'' என்று அவளை மாடிக்கு அழைத்துச் சென்றார்.

மங்கையர்க்கரசியும் உடன் சென்றாள்.

''தேவகி, நான் சொல்றதைக் கவனமா கேட்டுக்க. நீ படிச்ச பொண்ணு. எங்களுக்கு உன் சந்தோஷம்தான் முக்கியம். கல்யாணம் என்கிறது உன் எதிர்கால வாழ்க்கையை நிர்ணயிக்கப்போற விஷயம்....''

பீடிகையுடன்தொடங்கி டாக்டர் பூரணம் தேவ்வின் ஸைக்கியாட்ரிஸ்டிடம் கேட்டு அறிந்த விவரங்களை அவளிடம் கூறினார். ஆறு வருட காலமாக டிரக்-அடிக்டாக இருப்பவன். இன்றைக்கு ஏற்பட்ட மூளை

## ஸ்ரீ ராமகிருஷ்ணபள்ளி

வளர்த்து ஆளாக்கி ஆண்டு வருகிறார். இதைத் தோற்று வித்தவரும் இவருடைய தந்தையார் திரு. வாசுதேவாச்சாரியார்தான்.

தி. நகரில் இன்று பெண்கள் அரசினர் பள்ளி இருக்கும் இடம் தான் மாதம் ஒரு ரூபாய் வாடகைக்கு ராம கிருஷ்ண பள்ளியின் ஆரம்பகால இடமாக இருந்தது.

ஒன்று முதல் நான்கு வகுப்புகள் முதலாண்டு இறுதியில் 180 மாணவர்கள் சேர்ந்தனர். அதேஅடுத்து ராமநாதன் தெருவில் நிலம் இலவசமாகக் கிடைத்தது. எட்டு வகுப்புக்கள் வரை சேர்க்கப்பட்டன. முதல் தலைமை ஆசிரியர் திரு. கணேசய்யர். முதல் முதலாகப் பெண்களும் சேர்த்துக் கொள்ளப்பட்டனர்.

பள்ளிக்கு கிளைகள் தேவையுறவே, முதலில் ராமகிருஷ்ணா தென் கிளையை ஆரம்பித்து பிறகு வடகிளையும் சிறியதொரு அளவில் ஆரம்பிக்கப்பட்டது.

பெண்களை தனியே பிரித்தும், சொஸைட்டி ஹாலிலேயே ஆண்களையும் வைத்திருக்கும் போது இன்றைய ''மெயின் பள்ளி'' உள்ள இடம் ஒரு லட்ச ரூபாய்க்கு வாங்கப்பட்டது. அரசு இதற்கென 38,7601 வரை உதவி செய்ய, மீதியைப் பொது மக்களிடமிருந்தும், நாடகங்கள் மூலம் நிதி சேர்த்தும் ஈடு கட்டினர்.

அதற்கான அடிக்கல் நாட்டு விழா 23-2-37-ல் நடைபெற்ற போது தலைமை தாங்கிய கவர்னர் திரு ''எர்ஸ்கின்'' தாம் நாட்டும் இந்தக் கல் மூலம் பள்ளி பெருமளவில் வளரப் போகிறது என்று வாழ்த்தியது உண்மையாகியது என்பது நெகிழ்ச்சியுடன் நினைத்துப் பார்க்க வேண்டிய ஒன்று!

60 மாணவர்களில் ஆரம்பிக்கப்பட்ட இப்பள்ளி சிறிது சிறிதாக வளர்ந்து இன்று மெயின் பள்ளியில் மட்டுமே 3000 மாணவர்கள் படிக்குமளவு உயர்ந்துள்ளது பள்ளியின் வெற்றிக்குப் பெரும்பான்மையான காரணம் பொது மக்களின் ஊக்கமான ஒத்துழைப்பே என்று நன்றியோடு கூறும் திரு. வி. எம் மந்திரம் 1974-லிருந்து தலைமையாசிரியராக இருக்கிறார்.

**வி. தியாகு**

நடிகை: என்னுடன் நடித்த ஹீரோக்களிடம் இல்லாத இரண்டு தனிச் சிறப்புகளை உங்களிடம் காண்கிறேன்!

நடிகர்: நடிப்பும், நகைச்சுவையும் தானே?

நடிகை: இல்லே,... போப்பாவும், பல் செட்டும் பளபளப்பாக இருப்பது தான்.........

கே.வி.பரஞ்ஜோதி

பாதிப்பின் தீவிரம் தெளிந்து எழுந்தால்கூட அவன் இருக்கக்கூடிய நிலைமை—இவற்றைத் தெளிவாக எடுத்துக் கூறினார்.

"ஓர் ஆல்கஹாலிக்கூட முற்றிலும் திருந்திவிடலாம். ஆனால், போதை மருந்துக்கு அடிமைப்பட்டவன் அதிலிருந்து விடுபட்ட பின்னும்கூட முழுமனிதனாக இருப்பதில்லை" என்றார்.

"எப்படி?" என்று கேட்டாள் மங்கையர்க்கரசி.

"ஹி மே பி இம்போடன்ட்; குழந்தை தரக்கூடிய சக்தியை இழந்துவிடலாம். அவனுடைய திங்கிங்-பிராஸஸ், சிந்தனை ஓட்டங்கள், ஒருமாதிரியாக இருக்கும். வாழ்க்கையை எதிர்த்துப் போராடக்கூடிய மனோதிடத்தையே இழந்து விடலாம்!" என்றார் டாக்டர்.

"அப்பா, டாக்டர் மாத்ருபூதம் அப்படிச் சொல்லலே. தேவ் முழுதும் குணமாகிவிடலாம் என்று தான் சொன்னார்" என்றாள் தேவகி.

"நானும் குணமாகமாட்டார்னு சொல்லலே. பாஸிபிலிடீஸ். போதை மருந்தினால் என்னென்ன விளைவுகள் ஏற்படலாம்னுதான் சொன்னேன். நல்லவேளையாக கல்யாணத்துக்கு முன்னேயே தெரிஞ்சுப் போச்சு. ஒய் டேக் ரிஸ்க்? அவனை மறந்துடு" என்றார் டாக்டர்.

தேவகி உடனடியாக ஒன்றும் சொல்லவில்லை. தலை குனிந்தபடி கைவிரல்களை இணைத்தும் பிரித்தும் தனது பரிதவிப்பான நிலையை வெளிப்படுத்தினாள்.

"இது உனக்கு பெரிய ஏமாற்றமாகத்தான் இருக்கும். மூணு மாசம் பழகிட்டே. அதனால் பரவாயில்லே. இதை ஒரு விபத்துன்னு நினைச்சு மறந்துடு. தேவ்வை விட மேலான மாப்பிள்ளையை நாங்க தேடித்தர முடியும்" என்றார் டாக்டர்.

"அப்பா, தேவ் இல்லேன்னா எனக்குக் கல்யாணமே இல்லே. ஒருமுறை வரித்தவனை சுலபமா மறந்துட்டு இன்னொருத்தன் பின்னாலே போகிறவளா நீங்க என்னை வளர்க்கலே. அண்ட் ஐ ஹேவ் மேட் எ பிராமிஸ். ஒரு வாக்குறுதி தந்திருக்கேன்" என்றாள் தேவகி.

"இதென்னடி அதிசயம்? என்ன வாக்குறுதி? எங்களைக் கேட்காம எப்படித் தரலாம்?" என்றாள் அம்மா.

"கல்யாணம் ஆன பிறகு இந்த மாதிரி ஆயிருந்ததின்னா என்ன செஞ்சிருப்பீங்க? அவர் நோயாளியாகவோ பைத்தியமாகவோ வேறு ஏதாக இருந்தாலும் என் கணவராகப் போகிறவர் அவர் தான்...."

"அவசரப்பட்டு சபதம் எடுத்துராதே. நௌ யூ ஆர் எமோஷனல். இப்போதைக்கு கல்யாணத்தை ஒத்திப் போட்டுடறோம். அப்புறம் நீயே யோசிச்சு ஒரு முடிவுக்கு வா" என்றார் டாக்டர்.

"அவர் நார்மலான பிறகு கல்யாணத்தை வச்சுக்கலாம். நான் ஒப்புக்கறேன். ஆனா அதுவரை ஐ'ம் கோயிங் டு அடெண்ட் ஆன் ஹிம். அவருக்கு விஷம் கொடுத்தது யாருன்னு கண்டு பிடிக்கப் போறேன். யாராயிருந்தாலும், அவர்களைத் தேடிப் பிடித்து வழக்குப் போட்டு தண்டனை வாங்கித் தரப் போறேன். இதற்கு நீங்க என்னை அனுமதிக்கணும்!" என்றாள் தேவகி ஆவேசமாக.

(தொடரும்)

# ஏஞ்சல் டஸ்ட்



கி. கஸ்தூரிரங்கன்

## 11. திருமணம் நின்றது

பெற்றோர் இருவரையும் பிரமிப்பில் ஆழ்த்திவிட்டு தேவகி சரேலென்று வெளியேறினாள். வேகமாகக் கீழே இறங்கினாள்.

விடிவதற்கு இன்னும் நேரம் இருந்தது. ஹாலில் கோமதி அம்மா மட்டும் தான் இருந்தாள்.

''தேவகி, என்னம்மா ஆச்சு? எங்கிட்டே யாரும் ஒண்ணும் சொல்ல மாட்டேங்கறு...'' என்று புலம்பினாள்

''ஒண்ணுமில்லே பெரியம்மா. தேவ் பிழைச்சுடுவார்னு டாக்டர் சொல்கிறார். கல்யாணத்தை ஒத்திப்போடணும் அவ்வளவு தான்'' என்றாள்.

''என்ன போறாத காலமோ? என்ன சோதனையோ?'' என்று கோமதியம்மா அங்கலாய்த்தாள்.

தேவகி டெலிபோன் டைரக்டரியை எடுத்துப் பக்கங்களைப் புரட்டினாள். கிரீன்வேஸ் ரோடில் மினிஸ்டரின் போன் நம்பரைக் கண்டுபிடிப்பது கஷ்டமாக இல்லை.

டெலிபோன் இரண்டு நிமிஷம் அடித்துக் கொண்டேயிருந்தது.

அடுத்த முனையில் யாரும் இல்லை என்று தேவகி ஏமாற்றத்துடன் முடிவுக்கு வந்தபோது 'க்ளிக்' என்ற சப்தத்துடன் ரிசீவரை யாரோ எடுத்தார்கள்.

''ஹலோ. மிஸ்டர் சின்னதுரை இருக்காரா? ஐ வாண்டு ஸ்பீக் டு ஹிம் அர்ஜண்ட்...''

''இருங்க...'' என்று ஒரு பெண்ணின் குரல் பதில் தந்தது. ஒரு நிமிஷத்திற்குப் பிறகு சின்னதுரை டெலிபோனில் வந்தான்.

''ஹலோ, நான் தேவகி உங்க பிரெண்ட் தேவ்வின் ஃபியான்ஸி பேசறேன்...''

''தேவ்வின் பியான்ஸியா.. ஹலோ என்ன இந்த ராத்திரியிலே......?''

''தேவ் ஹாஸ்பிடல்லே சீரியஸா கிடக்கிறார் உங்களை ஒரு விஷயம் கேட்டுத் தெரிஞ்சுக்கலாம்னு....''

''ஹாஸ்பிடல்... ஸீரியஸ்?.. வாட் ஹாப்பண்டு ஹிம்...''

''சாயந்திரம் எங்கேயோ போனாராம். போதை மருந்து ஏதோ அதிகமா சாப்பிட்டுவிட்டார்னு டாக்டர் சொல்கிறார்... ஈஸ் இன் எ கோமா...''

''ஓ..'' சின்னதுரை உஷாராகிவிட்டான் ''ஐம் ஸாரி. நான்என்ன செய்யணும்?''

''அவர் எங்கே போயிருப்பார் என்ன தின்னிருப்பார்னு உங்களுக்கு தெரியும்னு சொன்னாங்க...''

''யாரு சொன்னாங்க. ஐடோண்ட் நோ எனிதிங் அபௌட் இட்.....



தேவ்வைப் பார்த்து மூணு மாசம் ஆயிடுச்சு.''

'ப்ளீஸ். யூ மஸ்ட் ஹெல்ப் அஸ். அவர் எங்கே போற வழக்கம்னு சொன்னு போதும்...''

'எனக்கு எப்படி அம்மா தெரியும்; நான் அங்கேயெல்லாம் போனதில்லே. ஸாரி..'' டக்கென்று போனை வைத்து விட்டான்.

தேவகி செய்வதறியாது கையைப் பிசைந்து கொண்டு உட்கார்ந்து விட்டாள். கண்களிலிருந்து பொல பொலவென்று கண்ணீர் விழுந்தது.

''ஓ காட்.. இப்ப என்ன செய் யறது?...ஐ மஸ்ட் நாட் கிவ் அப்..''

அவள் தலையில் பரிவுடன் ஒரு கை அழுந்தியது. அப்பா!

''பேபி.. தேவ்வைப் பத்தி நீ ஒண்ணும் செய்ய முடியாது. இனிமே அவனோடே ஒரு இன்வால்வ்மெண்டும் உனக்கு வேணும்.. இட்ஸ் ஃபர் யூவர் ஓன் குட்''.

''நோ.. ஐ ஹாவ்டு ஸேவ் ஹிஸ் லைப்..அவரைப் பிழைக்க வைக்கணும். அவரைக் கொல்ல நினைச்சவங்களைக் கண்டு பிடிக்கணும்..''

''சரி..சரி.. எல்லாம் காலையில் செய்துக்கலாம்..இப்போதைக்கு இந்த மாத்திரையைச் சாப்பிட்டு விட்டுத் தூங்கு...'என்று கண்டிப்புடன் ஒரு மாத்திரையைத் திணித்தார். அம்மா ஒரு டம்ளர் நீர் கொண்டு வந்தாள்.



''எனக்கு வேணும். ஐ டோண்ட் வான் டு ஸ்லீப்...'' என்று மறுத்தாள் தேவகி.

''யூ மஸ்ட்.. அப்புறம் உனக்கு நெர்வஸ் பிரேக்டௌன் ஆகிப்போய் ஒண்ணுமே செய்ய முடியாமற் போகும்.''

தேவகி மாத்திரையை வாங்கி தண்ணீருடன் விழுங்கிளுள்.

''குட்.. நீ போய் தூங்கு.. மங்கா! உப்பிலியைக் கூப்பிடு.. கல்யாணத்தை கான்ஸல் பண்ணிட்டோம்னு விளம்பரம் போடணும்...''

''அப்பா. கான்ஸல்னு போடாதீங்க. ஒத்திப் போட்டுட்டோம்னு சொல்லுங்க.'' என்றுள் தேவகி கண்டிப்பாக.

''சரி.சரி.. அப்படியே செஞ்சுட லாம்...''

''அப்பா!'' என்று உரத்த குரல் கேட்டது. பின்னால் பாஸ்கர் நின்று கொண்டிருந்தான்.

''பாஸ்கரா. இப்பத்தான் வரியா? டு யூ நோ வாட் ஹாப்பன்ட்...'' என்று கேட்டார் டாக்டர் பூஷணம்.

''எல்லாம் தெரிஞ்சுகிட்டேன். தேவகியின் கல்யாணம் ஞாயிற்றுக் கிழமையன்னிக்கே அதே முகூர்த்தத் திலேயேநடத்திரலாம்.என் பிரெண்ட் சேகர் இப்ப கூட ரெடி..'' என்றான் பாஸ்கர்.

''உன் கிரிக்கெட் ஹீரோவா....? தேவகி சரின்னா நடத்திடலாம்...!'' என்றார் டாக்டர் கொஞ்சம் நம்பிக் கையுடன்

''ஏன் எல்லாம் கிடந்து பேத்த றீங்க. லீவ் மீ அலோன். தேவ்வைத் தவிர வேறே யாரையும் நான் கல் யாணம் செய்துக்க மாட்டேன்!'' என்று வீறிட்டுக் கத்தினாள் தேவகி.

''அவன் செத்துட்டான்னு கூடவா?''

''டோன்ட் பி ஹார்ட் லெஸ் மை ஸன். தேவகி நீ போய் படும்மா. இப் போதைக்கு கல்யாணத்தை போஸ்ட் போன் பண்ணிடறோம். அப்புறம் யோசிக்கலாம்...''என்றார் டாக்டர். மங்கையர்க்கரசி தேவகியை கைத் தாங்கலாகப் பிடித்து மாடிக்கு அழைத்துச் சென்றாள்.

மைத்துனன் உப்பிலி வந்தான். அவனிடம் நிலைமையைச் சுருக்கமாக விளக்கினார்.

''.......எதிர்பாராத காரணங்களி னால் ஞாயிறு அபட்ஸ்பரியில் நடக்க இருந்த திருமணம் ஒத்திப் போடப் பட்டு விட்டது என்று இரண்டு காலம் 'மூணு இஞ்ச் விளம்பரம் ஒண்ணு எழுதி. ஹிந்து,எக்ஸ்பிரஸ்,தினமணி, தந்தி..நாலிலும் நாளைக்காலையிலேயே வரும்படி கொடுத்திடு. மத்த ஏற்பாடுகளையும் கான்ஸல் பண்ணிடு. முடிஞ்ச வரை இன்விடேஸ்களை போன்ல கூப்பிட்டுச் சொல்லிடு. மாப் பிள்ளை திடீர்னு சுகவீனம் ஆயிட்ட தனாலே என்று காரணம் சொன்னா போதும்.''

'சம்பந்தி கிட்ட நானே சொல்லி விடவா?'' என்றான் உப்பிலி.

'பிள்ளை பம்பாயிலிருந்து வந்தப் புறமா நானே சொல்லிடறேன்....'

டாக்டர் பூஷணம் கடைசி உத் தரவுகளைப் பிறப்பித்து முடித்த போது வீட்டில் மூன்று மாதமாக மலர்ந்திருந்த கல்யாணக் களை அடி யோடு குலைந்துபோய் ஓர் இறுக்கமும் சோகமும் சூழ்ந்தது கனத்துப் போன இதயத்துடன் களைப்பு மேலிட்ட வராய் டாக்டர் பூஷணம் மாடியில் தன் அறைக்குப் போய் படுத்தார்.

ஃ ஃ ஃ

தூக்க மாத்திரை போட்டுக் கொண்டும் தேவகியினால் அதிக நேரம் உறங்க முடியவில்லை. ஆறு மணிக்கே எழுந்து கீழே இறங்கி வந்தவள் வீட் டில் எல்லோருமே இன்னும் தூங்கிக் கொண்டிருப்பதைக் கண்டாள். கோமதியம்மா கூட காலையில் பால் வாங்கி வைத்து விட்டு சமையலறை யிலேயே கையைத் தலையணையாக வைத்துத் தூங்கிக் கொண்டிருந்தாள்.

தேவகி பின் கதவைத் திறந்து கொண்டு சிறிய தோட்டத்தில் அள வாக வெட்டியிருந்த புல் படுகையில் வெறுங்காலுடன் இறங்கி நடந்தாள். பூத்துக் குலுங்கியிருந்தது தோட்டம். கோடியில் பவழமல்லி மரத்தைவிட்டு இறங்கி விட்ட பூக்கள் சிதறிக் கிடந் தன. கம்மென்ற வாசனை தோட்ட முழுவதையும் நிறைத்தது. வலது பக்கம் சுவரோரம் ரோஜாக்கள் மொட்டு விட்டிருந்தன. சிறிது நேரத் தில் சூரிய ஒளிபட்டு மலர்ந்து விடும்.

இந்தத் தோட்டமே தேவகியின் கைவண்ணத்தினால் இத்தனை அழகாய் உருவாகியிருக்கிறது. பூஞ்செடிகள், பவழமல்லி மரம் இதைத் தவிர வேறு எதுவும் அவள் வைக்கவில்லை. ரோஜாவில் ஐந்து வகைகளை அவள் நட்டிருந்தாள். எல்லாம் செழித்து வளர்ந்திருந்தன' குண்டுமல்லிகை ஆரம்பத்தில் ஒரே ஒரு செடிதான் இருந்தது. பின்னர் அதுவாகவே படர்ந்து நிறையச் செடிகளாகி ஒரு

பக்கமுழுவதையும் நெடுக ஆக்கிரமித்துக் கொண்டிருந்தது. அதில் பூத்த மலர்கள் வெளேரென்று சிரித்து அவளை வரவேற்றன.

தேவகி புல் மீது மண்டியிட்டு உட்கார்ந்து கொண்டாள். பளிரென்று கண்ணைப் பறிக்கும் வண்ணங்களாய் சிறகுகளை விரித்த இரு வண்ணத்துப் பூச்சிகள் ஒன்றையொன்று துரத்திக் கொண்டு அவளை வட்டமடித்துப் பறந்தன. தவிட்டுக்குருவிகள் நாலைந்து புல்லைக் கோதியபடி தத்தி தத்தி வந்தன. அந்த வேளையில் அவளுடைய பிரசன்னம் பழக்கப்பட்டுப் போனதால் அவை அவளைப் பார்த்துப் பயப்படவில்லை. ஒவ்வொரு சமயம் மிகவும் நெருங்கி வந்து அவளோடு விளையாடக் கூட வரும்.

தேவகிக்கு எதிலும் மனது ஈடுபடவில்லை.

'தேவ்வை இந்த கதிக்கு ஆளாக்கியவர்' யார்? எப்படி அவர்களைக் கண்டு பிடிப்பது?' என்ற கேள்விகள் அவள் மனதில் சுழன்றன.

அவர்களைத் தேடிக் கண்டு பிடிக்க வேண்டும். காலம் தாமதிக்கக்கூடாது. ஆனால் வீட்டில் அவள் முயற்சிக்கு ஆதரவு தரக் கூடியவர்கள் யாருமே இல்லை. தேவ்வுடன் இனி தொடர்பு வேண்டாம் என்பதில் அப்பாவும் அம்மாவும் கண்டிப்பாய் இருக்கிறார்கள்.

யாருடைய உதவியும் இல்லாமல் தேடிக் கண்டு பிடிப்பதும் கஷ்டம்... தேவ்வின் அப்பாவைப் போய்ப்பார்த்தால் என்ன?

தேவகிக்கு இந்த யோசனை பிடித்திருந்தது. அவர் மிகவும் செல்வாக்குள்ளவர். பாதிக்கப்பட்டவன் அவருடையமகன். தேவ்வுக்குவிஷமிட்டவர்களையும் என்ன விஷம் என்று கண்டு பிடிப்பதிலும் அவரும் தீவிரமாக இருப்பாரல்லவா?

தேவகி சுறுசுறுப்புடன் எழுந்தாள். மாடியறைக்குச் சென்று முகம் கழுவி உடைமாற்றி, வந்தபோது கோமதியம்மா எழுந்து விட்டிருந்தாள்.



'தமிழ் நிகழ்ச்சி நேரத்தைக் குறைத்து விட்டோம் என யாரும் குறைப்பட வேண்டாம். நாளை முதல் நமது தொலைக்காட்சி மாலை ஆறு மணிக்குத் தொடங்கும். 6.02 லிருந்து 7. வரை தரங்கிணி-தெலுங்கு நிகழ்ச்சி. 7.02 லிருந்து 8 வரை கலாகைரளி -மலையாள நிகழ்ச்சி. 8.02 லிருந்து 9.30 வரை டில்லியிலிருந்து இந்தி நிகழ்ச்சி. 9.32 லிருந்து 10 வரை பம்பாயிலிருந்து ஆங்கில நிகழ்ச்சி. 10.30க்கு நிகழ்ச்சி முடிவு.

'மற்ற நேரங்களில் வழக்கம் போல தமிழ் நிகழ்ச்சி நடைபெறும் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம்..

---

''நீ தோட்டத்தில் இருப்பதைப் பார்த்தேன். காபி போட்டிருக்கேன் சாப்பிடு..' என்றாள் பரிவுடன்.

'ரொம்ப தேங்ஸ் பெரியம்மா! நான் இப்ப அவசரமா வெளியே போறேன். அப்பா கேட்டா நான் ஆஸ்பத்திரிக்குப் போயிருக்கேன்னு சொல்லுங்க!'' பூஜையறைக்குச் சென்று குங்குமம் எடுத்துநெற்றியில் வைத்துக் கொண்டாள். கதவைத் திறந்து வெளியே புறப்பட்டவளை கோமதியம்மா தடுத்தாள்.

''இரும்மா...அம்மாவை எழுப்பிச் சொல்லிட்டுப் போ!'' என்றாள்.

''நீங்க சொல்லிடுங்க பெரியம்மா. எனக்கு நேரமில்லை'' என்று சொல்லிவிட்டு வேகமாய் நடந்தாள் தேவகி.

(தொடரும்)

# இதையெல்லாம் உங்களை யார்



# 12. சேகர்

தெரு முகப்பில் ஆட்டோ ஸ்டாண்ட். 15 நிமிஷத்தில் விஜயா போய் விடலாம். ஓர் ஆட்டோவில் ஏறி உட்கார்ந்த தேவகி 'ஸ்ஸ்' என்று நாக்கைக் கடித்துக் கொண்டாள். பணம் கொண்டு வரவில்லை. கைப் பையைத் தன் அறையிலேயே மறந்துவிட்டு வந்து விட்டாள்.

தேவகி இறங்கி விட்டாள்.

''என்னம்மா?'' என்று கேட்டான் டிரைவர்.

''வேறு ஓரிடம் பக்கத்தில் போக வேணும்ப்பா'' என்று சொல்லிவிட்டு நடந்தாள்.

வீட்டுக்குப் போனல் அம்மா வந்து விட்டிருக்கலாம். பிடித்து வைத்துக் கொண்டு விடுவாள்.

ஆஸ்பத்திரிக்குப் போய் யாரிடமாவது பணம்வாங்கித்தந்துவிடலாம். யாரிடம் கேட்பது' என்பதுதான் பிரச்னை. தேவ்வின் அம்மா வீட்டுக்குக் கிளம்பி விட்டிருக்கலாம். பம்பாயிலிருந்து பிள்ளை எப்போது திரும்புவார்? எட்டு மணிக்கெல்லாம் வந்து விடலாம்.

அவர்கள் வீடு இங்கிருந்து இரண்டு கிலோ மீட்டரில் இருக்குமா? தேவ் வுடன் ஒரு முறை போயிருக்கிறள். அவன் அப்பா, அம்மா வேலைக்காரர்கள் எல்லாமே அவளை முகமலர்ச்சியுடன் வரவேற்றனர்.

இப்போது அங்கே போய் இருவரில் யாராவது வரும் வரை காத்திருக்கலாம். தேவகி மோபரேஸ் ரோடை நோக்கி நடந்தாள்.

மணி ஏழை நெருங்கிக் கொண்டிருந்தது. காலையில் வாகனங்கள் அதிகம் இல்லை. இன்னும் ஒரு மணி நேரத்தில் ஒரே நெரிசலாகி விடும். பஸ் நிலையங்களில் வித விதமான யூனிபார்ம்களில் சின்னப் பையன்களும் பெண்களும் நின்று காத்திருந்தார்கள்.

தேவகி நடந்தாள். தூரம் நீண்டு கொண்டே போகிறமாதிரி தோன்றியது. பின்னல் 'ட ட ட வென்று ஒரு ஸ்கூட்டர் வந்தது. அவளை உரசினற் போல நின்றது.




கி. கஸ்தூரிரங்கன்

பாஸ்கரின் கிரிக்கெட் ஹீரோ சேகர். வெள்ளையில் டி ஷர்ட்டும் குட்டை நிஜாரும் அணிந்திருந்தான்.

''ஹலோ தேவகி, எங்கே அதிகாலையில் தனியாக....?''

''ஓ ஹலோ, சும்மாதான் வாக்கிங் புறப்பட்டேன்...''

''தனியாகப் புறப்படலாமா? உன் அண்ணனை துணைக்கு வரச் சொல்லக் கூடாது?'' என்று உரிமையுடன் கடிந்தான்.

'உனக்கென்ன வந்தது? உன் வேலையைப் பார்த்துக் கொண்டு போயேன்' என்று தேவகி மனதிற்குள் நினைத்துக் கொண்டாள்.

''இஃப்யூ டோன்ட் மைண்ட்.... ஐ வில் வாக் வித் யூ!'' என்று ஸ்கூட்டரிலிருந்து இறங்கிக் கொண்டான் சேகர்.

''நீங்க போங்க, உங்க வேலை கெட்டுடும்!'' என்று அவனைத் தவிர்க்க முயன்றள்.



''டோக்கியோவில் நடக்கும் நம்ம பட ஷூட்டிங்குக்கு இன்னும் ஐந்து பிளேன் டிக்கெட் வாங்கச் சொன்னியாமே, யார் யாருக்கு?''

''எனக்குத் துணையாக வரும் என் அம்மா . அம்மாவுக்குத் துணையாகப் பாட்டி. பாட்டிக்குத் துணையாக கொள்ளுப் பாட்டி, கொள்ளுப்பாட்டிக்குத் துணையாக வரும் அவள் பாய் பிரண்டு ஆகியோருக்கு!''

''இட்ஸ் நத்திங். ஒய்எம்சிஏல டென்னிஸ் விளையாடப் போறேன். டெய்லி இதே நேரம்தான். கீப்ஸ் யூ ட்ரிம் யூ நோ!'' ஒரு கையை நீட்டி மடக்கித் திண்மையான முண்டாவைப் பெருமையுடன் காண்பித்தான்.

இன்னொரு கையால் ஸ்கூட்டரை தள்ளிக்கொண்டுவந்தான். திடீரென்று ஸ்கூட்டர் எதிர்ப்பக்கம் சாய்ந்து தபீரென்று விழுந்தது. சேகர் கால் இடறி அதன் மேல் விழுந்தான்.

''ஐயய்யோ? என்ன இப்படி?'' என்று அவன் கையைப் பிடித்துத் தூக்கினாள். சேகர் சுதாரித்து எழுந்து அவள் தோளை அணைத்தபடி நின்றான்.

''இட்ஸ் நத்திங். உன் ஸ்பரிசத்துக்காக இன்னொருமுறைவிழவும்தயார்!''

''ஐ'ம் ஸாரி!'' என்று தேவகி சரேலென்று விலகிக் கொண்டாள். சேகர் ஸ்கூட்டரை நிமிர்த்தி அதைத் தள்ளிக்கொண்டே அவளை ஒட்டியபடி நடந்தான்.

இவனிடமிருந்து எப்படித் தப்பிப்பது என்று சங்கடத்துடன் யோசித்தாள் தேவகி.

''தேவகி.... யூ நோ ஐ லவ்யூ....... ஐ டோண்ட் நோ ஒய் யூ டோன்ட் லைக் மி...''

''உங்களைப் பிடிக்கவில்லை என்று யார் சொன்னாங்க....''

''ஐ கேன் ஃபீல் இட்.... மனசுக்குள்ளே தெரியுது.... உன்னைக் கல்யாணம் பண்ணிக்கணும்னு ஆசைப்பட்டேன். யூ ரிஜெக்ட் மீ..... பரவாயில்லை...உன்னை நான் இன்னும் நேசிக்கிறேன் தேவகி.''

''மிஸ்டர் சேகர். நீங்க என் அண்ணனோடு பிரெண்டுங்கற முறையிலே உங்களிடம் எனக்கு மதிப்பு உண்டு. அதுக்கு மேலே லவ், கிவ்னு என்னிடம் பேசாதீங்க. மோரோவர் ஐ'ம் ஆல்ரெடி பெட்ராத்ட்... இன்னொருத்தர் மனைவின்னு நிச்சயமாயிட்டுது...'' என்றாள்.

''ஐ நோ! ஐ நோ! நான் சொல்ல வந்ததை நீ தவறாகப்புரிஞ்சுக்கிட்டே. உனக்குக் கல்யாணம் நிச்சயமான பின்னர் பாஸ்கரோட தங்கை என் தங்கைங்கிற அளவிலேயே நேசிக்கிறேன்....நீ என்னை டிஸ்லைக் பண்றது மனசை கஷ்டப்படுத்துது. அதான் சொல்ல வந்தேன்!''

''ஓகே. நான் உங்க தங்கை. நீங்க என் அண்ணன். நீங்க புறப்பட்டுப் போங்க.... வேணும்னா அடையார் கேட்வரை உங்க பின்னாலே உக்காந்திட்டு வர்றேன்.... தென் ஐ கான் வாக் பேக்!'' என்றாள் தேவகி.

சேகர் சந்தோஷத்துடன் அவளைப் பின்னால் ஏற்றிக்கொண்டு அடையார் கேட் ஹோட்டல் எதிரில் கொண்டு விட்டான்.

''நாளைக்கும் வாக்கிங் வருவயா.? வீட்டுக்கே வந்து அழைச்சிட்டுப் போறேனே!'' என்றான்.

''தேங்க்ஸ்... ஆனா ஸ்கூட்டர் பின்னாலே உக்காந்திட்டு வாக்கிங் போக முடியுமா? நீங்களே சொல்

லுங்க. போயிட்டு வாங்க தாங்க்ஸ்'' என்று கைகூப்பி இடது பக்கம்திரும்பி நடந்தாள்.

சேகர் எதையோ சாதித்துவிட்டவன் போல் மிதப்புடன் சீட்டியடித்து வாறு எதிர்ப்பக்கம் ஸ்கூட்டரில் வேகமாகப் பறந்தான். கிரிக்கெட் ஹீரோவானாலும் பெண் என்றால் அசடு வழியும் போலிருக்கிறது என்று தேவகி நினைத்துக்கொண்டாள்.

''இத்தனை சரளமாகபொய்சொல்ல எப்போது கற்றுக்கொண்டேன்' என்றும் ஆச்சரியப் பட்டுக்கொண்டு, போட் கிளப்சாலை வழியே நடந்தாள். கிளப்புக்கு முன்னாலேயே அடையாறை ஒட்டி இருந்தது தேவ்வின் வீடு. மிகவும் அமைதியான ஒதுப்புறமான இடம்.

அநேகமாக எல்லாப் பங்களாக்களிலும் எல்லோரும் இன்னும் தூங்கிக் கொண்டிருந்தார்கள்.



## நீங்கள் அழகியா?

நீங்கள் அழகிகளா?

சோதித்துப் பார்த்துக் கொள்ளுங்கள்......

இந்த 'மூன்று'களை......

இக்காலத்தில் அழகு ராணிகள் பற்றியெல்லாம் ஆஹா ஆஹாவென அளக்கிறோம். பெண்களை அழகு படுத்தும் ப்யூட்டிபார்லர்கள் இருக்கின்றன. பெண்ணின் அழகு- எதில் எதில் இருக்கின்றன என்ற நீண்ட ஆராய்ச்சிகள் நீண்ட காலமாகவே இருந்து வந்துள்ளன- பல நூற்றண்டுகளுக்கு முன்பே இலத்தீன் மரபுகளில் ஆண் அழகு விமரிசகர்களின் கருத்துக்களைப் பாருங்கள், பெண்கள் எப்படி எப்படி இருக்க வேண்டுமென்று அவர்கள் கருதினர்கள்?

பெண்களின் அழகுக் குறிப்புக்கள் இதோ.

வெண்மையாக இருக்க வேண்டிய மூன்று, சருமம், பற்கள், கைகள்.

கருமையாக இருக்க வேண்டியமூன்று-கண்கள், கண் புருவங்கள் கண் இமைகள்.

சிவப்பாக இருக்க வேண்டிய மூன்று: உதடுகள், கன்னங்கள், நகங்கள்.

---

தேவ்வின் பங்களாவின் உயர்ந்த கேட்டுக்கள் பூட்டி இருந்தன. நூற்பதடி விட்டு இரண்டடுக்குகளாக, வெளேரென்று ஒரு பெரிய கப்பல் போல நின்றது பங்களா. எல்லா ஜன்னல்களும் கதவுகளும் அடைத்திருந்தன.

தேவ்வின் அம்மா திரும்பவில்லை. அவருடைய அப்பா சென்னை வந்து சேர்ந்திருக்க மாட்டார்.

வேலைக்காரர் இருவரும் ஆஸ்பத்திரியிலிருந்து வரவில்லை.

கேட் அருகே தேவகி யோசித்துக் கொண்டு நின்றாள்.

இவ்வளவு தூரம் வந்தது வீண் தானு என்று நிராசைப்பட்டாள். திரும்பி நடக்கலாம் என்று எண்ணிய போது,

''கோன் ஹை?'' என்ற கேட்டுக்கப்பால் இருந்து அதட்டும் குரல் கேட்டது.

காவலாளி கூர்க்கா. அவனை முன்னே பார்த்ததாக ஞாபகம் இல்லை.

''நான்....நான் தேவகி! கதவைத் திறந்துவிடு'' என்றாள்.

'கர்மே கோயி நை.''

''தெரியும். அவங்க வர்றவரைக்கும் காத்திருக்கேன். உள்ளே விடு.''

காவலாளி தயங்கினன். பெண்ணைப் பார்த்தால் திருட வந்தவளாகத் தோன்றவில்லை என்று நிச்சயித்துக் கொண்டு கதவைத் திறந்தான்.

''வெராண்டா மே குர்ஸீ.... உஸ்பர் பைடீயே!'' என்று கையைக்காட்டினன்.

''நான் இப்படி தோட்டத்திலேயே இருக்கேன்....'' என்று தேவகி இடுப்புயரத்துக்கு அளவாக வெட்டுப்பட்டு வேலியாக நின்ற குரோட்டன்ஸ் பதியங்களைத்தாண்டி விஸ்தாரமான மலர்ப் பூங்காவுக்குச் சென்றாள். முதன் முறையாக தேவ்வுடன் வந்த போது இங்கேதான் கார்டன் சேர்களில் உட்கார்ந்து அவனுடைய பெற்றோர்களுடன் பிஸ்கெட்டும் காபியும் குடித்தது நினைவுக்கு வந்தது.

அவள் வீட்டுத் தோட்டத்தை ஒப்பிட்டால் இது பெரிய நந்தவனம். காம்பவுண்டு சுவரே அரை கிலோ மீட்டர் இருந்தது. அதையொட்டி



குட்டையாக இருக்கவேண்டிய மூன்று:பற்கள், காதுகள், பாதங்கள்.

நீளமாக இருக்க வேண்டிய மூன்று: இடுப்புக்கும் தலைக்கும் இடைபாகம்கைகள், தலைமுடிமயிர்

அகலமாக இருக்க வேண்டிய மூன்று:மார்பு, நெற்றி, கண் இமைகள்.

குறுகலாக இருக்க வேண்டிய மூன்று: வாய், இடுப்பு, கணுக்கால்கள்.

கடினமாக இருக்க வேண்டிய மூன்று:புஜங்கள், தொடைகள், ஆடுசதைகள்.

மென்மையாக இருக்க வேண்டிய மூன்று:விரல்கள், மயிர், உதடுகள்.

சிறியனவாக இருக்கவேண்டியமூன்று:மார்பகம், மூக்கு, தலை.

இப்ப்டி எத்தனை அழகு ராணிகளுக்கு இருக்கின்றன..?

The Indian Ideas of Beauty - என்ற நூலிலிருந்து.

வரிசையாக அணிவகுத்த அசோக மரங்கள். முடுக்கில் ஒரே ஒரு மாமரம் படர்ந்து விரிந்து பூவும் பிஞ்சுமாய் குலுங்கியது. பார்டர் கட்டினாற் போல் நான்கு புறமும் பாத்தியில் வாசனை இல்லாத இங்கிலீஷ் பூச் செடிகளை நட்டிருந்தன. நடுவில் பரந்த புல்வெளி, இரண்டு செட் கார்டன் சேர்கள்.

ஒரு நாற்காலியில் உட்கார்ந்து காத்திருந்தாள் தேவகி 'இந்தப் பெரிய தோட்டத்திற்கும், வீட்டுக்கும், செல்வத்துக்கும் எஜமானியாக போகிறேன்' என்று முதல் தடவை வந்தபோது இறுமாந்ததுண்டு. அதற்குத்தான் இப்போது பெரியதண்டனை நேர்ந்துவிட்டதோ?

ஊகூம். தேவ் செல்வந்தர் வீட்டுப் பிள்ளையாக இல்லாமல் குடிசையில் வாழும் தொ[illegible]ளியாக இருந்தாலும் கூட அவள் அவனை நேசிப்பாள். அவனோடு வாழத்தயாராக இருப்பாள். 'இருப்பாய், இருப்பாய்!' என்று மனசுக்குள் ஒருசின்னக் குரல் நக்கல் செய்தது. காதல் கூட சமூகக் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டது தான். அதை மீறி காதலிக்க முடியுமென்றாலும் சமூகத்தை மீறி திருமணம் செய்து கொண்டு சந்தோஷமாக வாழ்வது என்பது கஷ்டம் தான்.

எப்படியானாலும் பணத்திற்காக அவள் தேவ்வை திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்று நினைக்கவில்லை. அது மட்டும் உறுதி. பார்க்கப் போனால் அவளைப் போன்ற குணமுள்ள பெண் மருமகளாக வருவதற்கு அவர்கள்தாம் கொடுத்து வைத்திருக்க வேண்டும். தேவ்வின் அம்மாவே சொல்லவில்லையா? தேவ் பிழைத்தெழுந்திருக்க வேண்டுமே..

அவனுக்காக ஒன்றும் செய்ய முடியாமல் தன்னைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருந்தது அவளிடம் குற்ற உணர்வை ஏற்படுத்தியது. பக்கத்து பங்களாவுக்குச் சென்று ஆஸ்பத்திரிக்குப் போன் செய்து தேவ்வின் நிலைமையை அறிந்து கொள்ளலாம்என்ற முடிவுடன் எழுந்தாள்.

அதே சமயம் வாசல் கேட்டருகே காரின் ஒலி கேட்டது. காவலாளி பரபரப்புடன் கேட்டைத் திறந்து

விட்டான். உள்ளே வந்த அம்பாஸடர் காரில் ராமையாவும் ராணியும் இருந்தனர்.

''ராமையா.. ராமையா!'' என்று குரலிட்டபடி தேவகி ஓடினாள். கார் நின்றது.

''நீங்களாம்மா? இங்கே என்ன செய்யிறீங்க...'' என்று ராணி கேட்டாள்.

''யாராவது வருவீங்கன்னு தான் காத்திருக்கேன். அம்மா வரலியா?''

''அம்மா அங்கேயே இருக்காங்க. ஏர்போர்ட் போய் ஐயாவைக் கூட்டியான்னு சொன்னாரு. வர வழியில் ராணியை வீட்லே விட்டுவிடலாம்னு வந்தோம். நீங்க இங்கன இருக்கீங்க...'' என்றான் ராமையா.

''நல்ல வேளை. சரி நானும் ஏர்போர்ட் வரேன். சின்ன ஐயாவுக்கு எப்படி இருக்கு?''

''அப்படியே தான் நெனப்பு நீச்சில்லாம கெடக்காரு. ஒரு நாளுபோகணும்கிறாரு டாக்டர்'' என்றாள் ராணி.

''சரி, நீ இறங்கிக்க. நாங்க ஏர்போர்ட் போறோம்!'' என்று துரிதப்படுத்தினான் ராமையா.

அவள் இறங்கியதும் தேவகி காரில் ஏறிக் கொண்டாள்.

ஏர்போர்ட்டை அடைவதற்கும் பம்பாய் பிளேன் வந்திறங்குவதற்கும் சரியாக இருந்தது..

இறங்கிய பிரயாணிகளில் தேவ்வின் தந்தை சிவபாத சுந்தரம் பிள்ளை இருக்கவில்லை.

தேவகிக்குப் பெரிய ஏமாற்றமாகப் போயிற்று. மானிஃபெஸ்ட் வரும்வரை காத்திருந்து அவர் பிரயாணிகளின் பட்டியலில் இல்லை என்று உறுதி செய்து கொண்ட பின்னரே வீடு திரும்ப முடிவு செய்தனர்.

''அவுரு இப்படித்தான் கடைசி நிமிஷத்திலே கான்சல் பண்ணிடுவாரு. பிசினஸ் ஜோலி வந்திருக்கும்'' என்று விளக்கம் தந்தான் ராமையா.

தேவகி யோசித்தாள். போலீஸ் கமிஷனர் பிள்ளைக்கு சினேகிதர் என்று பாகீரதி சொன்னது நினைவுக்கு வந்தது. தேவகி ஒரு முடிவுக்கு வந்தாள்.

''ராமையா, போலீஸ் கமிஷனர் வீடு எங்கே தெரியுமா?'' என்று கேட்டாள். ''எனக்குத் தெரியும்மா, ஐயா அங்கே போய்வருவதுண்டு'' என்றான், டிரைவர்.

''அப்போ நேரா அங்கே ஓட்டு'' என்றாள்.

(தொடரும்.)



''மளிகை கடைக்காரரை கல்யாணத்துக்குத் தலைமை தாங்கி...வாழ்த்தச் சொன்னது பெரிய தப்பாப் போயிடுச்சி..?''

''ஏன் என்னாச்சி....?''

''கடுகும் கல்லும் போல, சாம்பார்ப்பொடியும் செங்கல் பொடியும் போல... இணைந்து வாழ்க''ன்னு வாழ்த்த ஆரம்பிச்சுட்டாரு...!''

பாரதி ரங்கன்

# மஞ்சள் டெஸ்ட்



## கி. கஸ்தூரிரங்கன்

போலீஸ் கமிஷனரின் வீட்டை அடைந்தபோது அவர் அலுவலகம் போய்விட்டிருந்தார். காரை அங்கே விடச் சொல்லி இறங்கிக் கொண்டாள் தேவகி.

''ராமையா, ஆஸ்பத்திரிக்குப் போய் பம்பாயிலிருந்து ஐயா வரலேங்கிறதை அம்மாவிடம் சொல்லிடு. கொஞ்ச நேரத்துக்குப் பிறகு ஆஸ்பத்திரிக்கு நானே வந்திடறேன்'' என்று காரை அனுப்பி விட்டாள்.

சிவபாதசுந்தரம்பிள்ளை வீட்டிலேயிருந்து வந்திருப்பதாகச் சொன்னதும் கமிஷனர் உடனே கூப்பிட்டனுப்பினார்.

பிரிட்டிஷ் காலத்துப் பாணியில் சுவரில் தேக்குப் பலகைகள் இழைத்த பெரிய அறைக்குள் அனுமதிக்கப்பட்டபோது தேவகிக்குக் கூச்சமாக இருந்தது. இவ்வளவு பெரிய அதிகாரியிடம் எப்படித் தன் சொந்த விஷயத்தைச் சொல்லி உதவி கேட்பது என்று தயங்கினாள்.

''வாம்மா, இப்படி உட்காருங்க. நான் என்ன செய்யட்டும்?'' என்று கமிஷனர் அவளைக் கனிவாக அழைத்து உட்கார வைத்தார்.

''ஸார், சிவபாத சுந்தரம்பிள்ளையின் மகன் தேவ்வைத் தெரியுமல்லவா?''

''ஓ எஸ். நல்லாத் தெரியுமே. அவனுக்கு ஞாயிறன்று கல்யாணம் இல்லையா?''

''நிச்சயமாகி இருந்தது. இப்போ நின்று விட்டது!''

''அப்படியா? எனக்குத் தெரியாதே! என்ன காரணம்!''

''அவர் ஆஸ்பத்திரியில் கிடக்கிறார். யாரோ அவருக்கு விஷம் வைத்து விட்டார்கள். பிழைப்பாரோ என்கிற நிலையில் இருக்கிறார்?''

கமிஷனர் அதிர்ந்து விட்டார். ''உண்மையாகவா? பெரிய குண்டாப் போடறீங்களே! நீங்க யாரு?''

''நான் தேவகி. அவருக்கு மனைவியாக நிச்சயிக்கப்பட்ட பெண்!''

சொல்லும் போதே தேவகியின் நெஞ்சில் விம்மல் வெடித்தது. புடவைத் தலைப்பினால் வாயைப் பொத்

திக் கொண்டு அழுகையை விழுங்க முயன்றாள். முடியவில்லை.

கமிஷனர் எழுந்து அவளருகில் வந்து தோளைத் தட்டிக் கொடுத்தார்.

"அழாதேம்மா! என்ன நடந்து துன்னு விவரமாச் சொல்லு. டெல்மி எவ்ரி திங்!" என்றார்.

தேவகி நிதானமடைந்தாள். முந்தைய நாள் இரவு மயக்க நிலையில் தேவ்வை வீட்டில் யாரோ கொண்டு போட்டுவிட்டதைச் சொன்னாள். அவன் போதை மருந்து அதிகம் சாப்பிட்டுவிட்டதால் கோமாவில் விழுந்திருப்பதாக டாக்டர் கூறியதையும் சொன்னாள்.

"இன்விடேஷன்கள் கொடுத்திட்டு வரேன்னு சொல்லியிருந்தார். போன இடத்தில் இப்படி ஆகிவிட்டது. அவருக்கு விஷமிட்டவங்க சுவடு தெரியாமல் வீட்லே அவரோட மோட்டார் சைக்கிள்லேயே கொண்டு தள்ளிட்டுப் போயிட்டாங்க!"

"யாருக்கெல்லாம் இன்விடேஷன் கொடுக்கப் போனார்னு தெரியுமா?"

"தெரியாது. அவரோட அப்பா பம்பாய்க்குப் போயிருக்கிறார். இன்னும் வரல்லே!"

"பாகீரதி அம்மா?"

"ஆஸ்பத்திரியிலேயே இருக்காங்க. அவருக்கும் ஒண்ணும் சொல்லத் தெரியலே.. யாரோ சின்னதுரைன்னு மினிஸ்டரின் மகனும் அவர் தேவ்வின் சிநேகிதன் வீட்டுக்கு வந்து போயிருக்கிறார்னு சொன்னாங்க."

"சின்னதுரை? மினிஸ்டர்ஸ் ஸன்?"

கமிஷனர் யோசனையுடன் சுவரோரம் இருந்து ஃபைல் காபினெட்டுக்குச் சென்றார். சிவப்பு நிற ஃபைல் ஒன்றைத் தேடி எடுத்தார். பிரித்துப் பார்த்தார்.

"மை காட்! இட் கான்ட் பீ.." என்று வாய்விட்டுச் சொன்னார்.



தேவகி அவரைக் கேள்விக் குறியுடன் பார்த்தாள்.

இன்டர்காம் சுவிச்சை அழுத்தி,

'எஸ்ஐ தேவராஜனை வரச் சொல்'' என்றார்.

''தேவகி! உனக்கு தேவ் யாரைப் பார்க்கப் போனார், என்ன சாப்பிட்டார் என்று தெரியணும் இல்லியா?''

''ஆமா ஸார். அது முக்கியம்னு டாக்டர் சொன்னார்.''

''சின்ன துரையைப் பற்றி ஒரு குறிப்பு இங்கே இருக்கு. நேற்று இரவு ஒரு மோட்டார் சைக்கிள்லே ஜெமினி பாலத்தடியில் தேவ்வை நம்ம ஆள் ஒருத்தர் பார்த்திருக்கார், சின்ன துரையோட..''

''அப்படின்னு, அவர்தான் தேவ்வை வீட்டில் கொண்டு போட்டவரு?''

''அப்படித்தான் தோணுது..ஆனா இந்த ரிப்போர்ட்லே சின்னதுரை குடிச்சுட்டு மயக்கமாயிருந்தார்னு இருக்கு..''

''எதுக்கு இந்த ரிப்போர்ட்..?''

''வி ஐ பி யைச் சேர்ந்தவர்களைப் பத்தி டாஸியர்ஸ் வச்சிருக்கோம். அவ்வப்போது கிடைக்கிற இன்ஃபர்மேஷன் இதிலே உடனுக்குடன் ஏறிடும்.



இந்த ரிப்போர்ட்டை அனுப்பியவர் இவர்தான்: எஸ்ஐ தேவராஜன்.''

அரிவாள் மீசையுடன் ஆஜானுபாகுவாக வந்து நின்றார் இன்ஸ்பெக்டர் தேவராஜன். ஸ்மார்ட்டாக ஸல்யூட் அடித்தார்.

''மீட் மிஸ் தேவகி!'' என்று அறிமுகப்படுத்தி விட்டு அவரிடம் விஷயத்தைச் சொன்னார்.

''சின்னதுரை பற்றி நீங்க அனுப்பிச்ச ரிப்போர்ட்ல அவர் குடிச்சிருந்தார்னு போட்டிருக்கீங்க. இந்தப் பெண் சொல்றதை வச்சுப் பார்த்தா இவளோட வுட்-பி தேவ்வுடன் அவர் அதே மோட்டார் சைக்கிள்லே இருந்திருக்கார்னு தெரியுது.. ஆனா மயக்கமாயிருந்த ஆளு சின்ன துரையில்லே. தேவ்தான்னு ஆகுது. ஷி ஸேஸ் ஹி வாஸ் பாய்ஸண்டு பை ஸம் ஒன்!''

''எனக்குத் தெரியாது ஸார்! ரூட்டீனா ஓவரா குடிச்சு விழுந்திட்ட கேஸ்ஸுனு நினைச்சேன். மோட்டார் சைக்கிள் ஓட்டி வந்தவர் நல்லா ஸோபரா இருந்தார். தெளிவா பேசினார்.''

''வண்டியோட நம்பர் நோட் பண்ணீங்களா?.... எஸ். இதோ இருக்கு. டி.எம்.க்யூ. 9976. இது யாரோட வண்டின்னு 'செக்' பண்ணீங்களா?''

''பண்றேன் ஸார்'' என்றார் எஸ்ஐ.

''அவசியமில்லே. அந்த மோட்டார் சைக்கிள் தேவ்வோட வண்டிதான்..'' என்றாள் தேவகி.

''தட் மீன்ஸ் ஓட்டிட்டு வந்தவர் சின்ன துரை... மாத்திச் சொல்லிட்டாரு. அல்லது வேறு யாராவது அவர் பேரைச் சொல்லியிருக்கலாம்.''

''ஐயம் ஸாரி சார். இன்னும் விசாரிச்சிருக்கலாம்னு இப்போ தோணுது. மினிஸ்டர் பேரைச் சொல்லவே...''

''ஐ அண்டர்ஸ்டாண்ட்.. அந்த ஆளைக் கவனிச்சீங்களா?... மோட்.

---

# ஜாமீனில் வந்த மாப்பிள்ளை



ஞாயிறன்று கல்யாணம். வெள்ளிக் கிழமை தான் மணமகனை அவனது தோழர்கள் வெளியே கொண்டு வந்தார்கள்.

மணநாளன்று அவரது தாய் தந்தையார் வரவில்லை. அண்ணன் தம்பி உறவுகள் யாரும்வரவில்லை. மணமகள் வீட்டாரும் அப்படியே. இவர்கள் மனத்தால் ஒன்றாகி நின்றார்கள் அவர்கள் பெற்றோர்கள் மதத்தால் வேறாகி நின்றார்கள்.

மணமகள் புலவர் விஜயலட்சுமி. ஓர் இந்து. மணமகன் முனவர் பாட்சா ஒரு முஸ்லீம். இந்து முறைப்படியே திருமணம் நடந்தது. யாரும் மதம் மாறவில்லை.

முனவர் பாட்சா நெடுமாறன் கட்சியின் மாணவர் பிரிவுத் தலைவர். சென்னை சேப்பாக்கத்தில் இந்திய இலங்கை அணிகளுக்கிடையே நடந்த கிரிக்கெட் போட்டியின் போது இலங்கை அணியில் தமிழர்கள் யாரும் இல்லை. எனவே இலங்கை அணியோடு விளையாடக் கூடாது என்று மறியல் செய்யப் போன இடத்தில்தான் திருமணத்திற்கு ஒரு நாள் இருக்கும் போது கைதானதால் கட்சித் தோழர்கள் அவரை ஜாமீனில் வெளியே கொண்டுவந்தார்கள். திருமணத்தையும் சிறப்பாக நடத்தி வைத்தார்கள். ஆசீர்வதித்தார்கள்.

சுவாரசியமான அரசியலைத் தந்து கொண்டிருக்கும் அரசியல் வாதிகளின் வாழ்க்கையும் சுவாரசிமாகத்தான் இருக்கிறது!

- நாஞ்சில் சு. காந்தியன்

''நல்ல பொழுதையெல்லாம் தூங்கிக் கெடுத்தவர்கள் நாட்டைக் கெடுத்ததுடன் தானும் கெட்டார்'

உலக நாடுகளின் மன்றமாக ஐ. நா.வில் புகழ் பெற்ற நாடுகளாம் சீனு, ஜப்பான், அமெரிக்கா, சோவியத் யூனியன் ஆகிய நாட்டுப் பிரதிநிதிகள் தங்கள் இருக்கையில் தூங்கி வழிகிறார்கள்.

சைனாவின் தூதுவர் சென்-கு ஆழ்ந்து யோசிக்கிறாரா? இல்லை. தூங்குகிறார்; ஜப்பானின் தூது கோஷ்டியே தூங்குகிறது; அமெரிக்க தூதுவர் சார்லஸ் லிக்சன்ஸ்டைனின் ஆழ்நிலைத் தூக்கம். அனைவரையும் விஞ்சுகிறார் சோவியத் யூனியனின் அயலுறவு மந்திரி ஆந்தரே குரோமைகோ.

படமும் தகவலும் - மாத்தளை சோமு.





டார் சைக்கிளை ஓட்டி வந்தவர் எப்படி இருந்தார்.''

''சரியா தெரியலே..இருட்டு மழை. அவர் கோட்லே இருந்தார். முகத்திலே ட்ரிம்பண்ணின தாடி இருந்தது. அதைக் கவனிச்சேன்.''

''தென் இட் கான்ட் பி சின்னதுரை. அவருக்கு தாடி கிடையாது. வேறு யாரோ அவர் பேரைச் சொல்லி உங்க கிட்டேருந்து தப்பிச்சுக் கிட்டாங்க.''

''ஐயம் ஸாரி சார்!'' என்றார் எஸ்ஐ.

''உங்க மேலே தப்பு ஒண்ணும் இல்லே. கடமையை சரியாவே செஞ்சிருக்கீங்க.. நீங்க போகலாம்...''

எஸ் ஐ ஸல்யூட் அடித்து விட்டு வெளியேறினார். கமிஷனர் இன்டர்காமில், ''மினிஸ்டர் - வீட்டுக்குப் போன் செய்து மிஸ்டர் சின்னதுரை இருக்காரா பார்'' என்றார்.

''இது ஸீரியஸ் கேஸா இருக்கும் போலிருக்கு.. இமேஜின் ஸம் ஒன் பாய்ஸனிங் த ப்ரைட் க்ரூம்!'' என்றார் தேவகியிடம்.

டெலிபோன் பஸ்ஸர் ஒலித்தது.

''எஸ்.. ஹலோ மிஸ்டர் சின்னதுரையா? நேத்து இரவு சுமார் எட்டரை மணிக்கு மோட்டார்சைக்கிள்ளே எங்கேயாவது போனீங்களா?'' என்று கமிஷனர் நேரடியாக விஷயத்துக்கு வந்தார்.

''ஒண்ணுமில்லே.. உங்க பிரண்ட் தேவ்வை யாரோ பாய்ஸன் பண்ணி அவரோட மோட்டார்சைக்கிள்ளேயே வீட்லே கொண்டு தள்ளிட்டுப் போயிட்டாங்க.. போற வழியிலே. எஸ் ஐ ஒருத்தர் மடக்கிகேட்டிருக்கார் நீங்கதான் குடிச்சிட்டு மயக்கமாயிட்டீங்க. வீட்லே கொண்டு சேர்க்கப் போறேன்னு அந்த ஆள் சொல்லியிருக்கான்.. யாராயிருக்கும்னு உங்களுக்குத் தெரியுமா? தாடி வச்சிருந்தாராம். தேவ்வோட மோட்டார் சைக்கிள்ளேதான் போயிட்டிருந்தான்... தெரியலையா? ஓகே..ஸாரி டு டிஸ்டர்ப் யூ!'' என்று போனை வைத்தார்.

''சின்னதுரை வாஸ் நாட் அட் தி ஸீன்...ஆனு அந்தத் தாடிக்காரன்










யார்னு அவருக்குத் தெரியும் மறைக்கிருரு...சின்னதுரை பேரைச்சொல்லி அந்த ஆள் தேவ்வின் பிரெண்டாகவும் இருக்க வேணும்..அடிக்கடி சந்திக்கிறவங்களா இருந்திருப்பாங்க.'' என்றபடி கமிஷனர் ஃபைலைப் புரட்டினுர்.

''தேவ் ஒரு டிரக் அடிக்டாக இருந்தார்னு அவங்க அம்மாவே சொன்னுங்க..இவங்க அவரோட கூட்டாளியா இருக்கலாம்..'' என்று தேவகி இதுவரை சொல்லத் தயங்கிய விஷயத்தை வெளியிட்டாள்.

''ஈஸ் தட் ஸோ! முதல்லயே சொல்லலியே..அப்படீன்ரு திஸ் மஸ்ட் பி த ப்ளேஸ் ஆஃப் தேர் மீட்டிங்..ம்யூஸி ம்யூஸிகல்ஸ், பிராட்வே. எ ஸஸ்பெக்டட் ப்ளேஸ் ஆஃப் டிரக் - டிராஃபிக்...சின்னதுரை அடிக்கடி அங்கே போறவர்...அவர் ஒரு அபெக்டட் டிரக்-அடிக்ட் என்று இதிலே எழுதியிருக்கு'' என்ருர் கமிஷனர்.

''இந்த சின்ன ஃபைல்லே இவ்வளவும், தெரிஞ்சுடுதா?'' என்று அதிசயித்தாள் தேவகி.

''அதுக்குதானே இந்த டாஸியர் இருக்கு...பெரிய வீட்டுப் பிள்ளைங்க யாரும் எங்க கண்காணிப்பிலேயிருந்து தப்ப முடியாது..வி நோ வாட்ஸ் கோயிங் ஆன். ஆனு எங்களுக்குத் தெரியும்னு அவங்களுக்குத் தெரியாது!'' என்ருர் கமிஷனர்.

பின்னர் சட்டென்று ''லெட்ஸ் கோ! ம்யூஸி ம்யூஸிகல்ஸை விசிட் பண்ணிட்டு வருவோம்'' என்று எழுந்தார்.

அடுத்த பத்தாவது நிமிடம் பிராட்வே முனைச் சந்தில் இருந்த ம்யூஸி ம்யூஸிகல்ஸ் கடை முன்னர் போலீஸ் ஜீப் ஒன்று நின்றது. அதிலிருந்து கமிஷனரும், இரண்டு போலீஸ்காரர்களும் இறங்கினர். தொடர்ந்து தேவகி இறங்கி பின்னே நடந்தாள்.

இவர்களைக் கண்டதும் கடைக்காரர் பரபரப்புடன் எழுந்து வந்தார். ட்ரிம் செய்யப்பட்டிருந்த தாடி வைத்திருந்த பெர்னியை கமிஷனர் பார்த்தார்.

''இந்த ஆள்தான்!'' என்ருர்.

— தொடரும்.

# கதாநாயகனின் வயது 17½

டைனிங் டேபிள். அது ஒரு கலைக்குடும்பம். குடும்பத் தலைவர் சொன்னார்:

"கஷ்டப்பட்டு கதையை எழுதி முடிச்சுட்டேன். இதுவோ டீனேஜ் ஸ்டோரி. ஹீரோவா யாரைப் போடறது? அதுதான் குழப்பமாக இருக்கு" என்கிறார் மனைவியிடம்.

"உங்க கதையிலே வருகிற ஹீரோவுக்கு வயசு என்ன?" என்றார் மனைவி.

"பதினெட்டு."

"ஏன் - நம்ப ரவிக்கு என்ன குறைச்சல். இரண்டாவது அவனுக்கு காமிரா பயமும் இல்லே. இது புதுமுகங்களின் பொன்னான காலம். அவனையே போடுங்க" என்று தன் பிள்ளையை சிபாரிசு செய்கிறார்.

குடும்பத் தலைவரும் 'கரெக்ட்' என்று ஆமோதிக்கிறார்.

அந்த நிமிடத்திலேயே தமிழ் படவுலகிற்கு ஒரு பதினேழரை வயதுக் கதாநாயகன் உதயமாகிறான்.

கே. பி. ரவிக்குமார் - படிப்பது ப்ளஸ் டு வகுப்பில். பள்ளி: செயிண்ட் பீட்ஸ். படத்தின் பெயர்: 'கண்ணோடு கண்.'

குடும்பத் தலைவரின் பெயர்: கே. பி. கொட்டாரக்கரா. 'பாசமலர்' போன்ற நூற்றுக்கணக்கான தமிழ் மலையாளப் படக் கதைகளின் சிருஷ்டி கர்த்தா. தயாரிப்பாளரும்கூட. அவரது பரம்பரையில் இளைய தலைமுறை உதயமாகிறது.

ரவிக்குமார் சிறு வயதிலிருந்தே அம்மா செல்லம். அதே சமயம் சினிமாவில் நடிப்பது அவனுக்கு வெல்லம். தந்தை கொட்டாரக்கரா தயாரித்த 'வித்யார்த்தி, அம்மா, சாந்தா ஒரு தேவதா, அக்னி பர்வதம்' போன்ற மலையாளப் படங்களில் சிறுவனாக நடித்தான்.

'தனி மரம்' படத்தில் கதாநாயகி சத்யகலாவின் தம்பி ராஜுவாக நடித்துப் பெயர் வாங்கினான். 'நீதி பிழைத்தது' படத்தில சி.ஐ.டி. மாதிரி மாறுபட்ட வேடம்.

"'கண்ணோடு கண்' படத்தின் முதல் காட்சியை ஊட்டியில் எடுத்தார்கள். நான் வழக்கமாக கண்ணாடி அணிவதுண்டு. அதை அகற்றிவிட்டு திடீரென்று கதாநாயகி சுலட்சணாவுடன் டூயட் பாடியது மாறுபட்ட அனுபவமே. சுலட்சணாவுக்கு ஏற்கனவே 'தூறல் நின்னு போச்சு' படத்தில் நடித்த அனுபவம். இருப்பினும் கூட நடிக்கும் என்னையும் அனுசரித்து ஒத்துழைத்து நடித்தார்.

"கேமிரா மேன் அசோக்குமார் அதிக மேக்கப்பின் எதிரி. முதல் நாள் அப்பா, அம்மா டைரக்டர் கிருஷ்ணா, கேமிரா அசோக்குமார், நடிகர்கள் பிரபு, மற்றும் ராஜேஷிடம் ஆசி வாங்கினேன். மறக்க முடியாத அனுபவம்."

"படப்பிடிப்பு முடிந்து பள்ளிக்குப் போனீர்களா?"

"அதை ஏன் கேட்கிறீங்க? ஏகக் கலாட்டா?"

"ஏண்டா, சுலட்சணாவுடன் ஜோடியாக நடிக்கிறியாமே? லவ் சீன் எக்ஸ்பீரியன்ஸ் எப்படி?" என்று சக மாணவர்கள் என்னைச் சீண்டிவிட்டதுடன் ராகிங்கும் பண்ண ஆரம்பித்துவிட்டார்கள். சமாளித்தேன்."

"படப்பிடிப்பில் அனுபவம் ஏதாவது?"

"சண்டைக் காட்சியில் நானே தான் நடிப்பேன். டூப் போடமாட்டேன்' என்று பிடிவாதம் பிடித்தேன். அதற்குப் பலன் ஸ்டண்ட்

# ஏஞ்சல் டஸ்ட்

கி.கஸ்தூரிரங்கன்

## 14. பெர்னி & ஸ்டெல்லா

கடைக்குள்ளே போலீஸ் உயர் அதிகாரியைப் பார்த்ததும் பெர்னியின் முகம் வெளிறியது. குற்ற உணர்வும் பயமும் சில்லென்று தாக்க கைகால்கள் வெடவெடத்தன.

ஆனால் சுலபமாக சமாளித்துக் கொண்டான். போலீஸின் கவனம் அவன் மீது விழுந்திருக்கிறது என்று சற்று முன்னர்தான் சின்னதுரை டெலிபோனில் கூப்பிட்டு எச்சரித்திருந்தான். தேவ்வுக்கு போதை மருந்தை அளவுக்கு மீறி தந்ததற்காகவும், அவன் பெயரைப் போலீஸிடம் சொன்னதற்காகவும் ரொம்பவும் கோபித்துக் கொண்டான்.

''அண்ணனும் தங்கையும் இத்தனை முட்டாளாகவா இருப்பீங்க? இனிமேல் எதற்கும் என் பெயரை இழுக்காதே! போலீஸ் ரெய்டு செய்ய வரலாம். எச்சரிக்கையா இருங்க'' என்று சின்னதுரை சொன்னான்.

அந்த எச்சரிக்கையின் பேரில்தான் கடையின் பின் அறையில் சேமித்து வைத்திருந்த சரக்குகளை ஸ்டெல்லா அப்புறப்படுத்திக் கொண்டிருந்தாள். அங்கிருந்து 'ஜிங்கு ஜிங்கு' என்று தென்அமெரிக்க சங்கீதம் டேப்ரிகார்டரில் ஒலித்துக் கொண்டிருந்தது. சரக்கையெல்லாம் டாய்லெட்டில் போட்டு ஃப்ளஷ் செய்து விடுவதில் ஈடுபட்டிருந்தாள் ஸ்டெல்லா. அவள் சீக்கிரம் வந்துவிட்டால் தேவலை என்று பெர்னி நினைத்துக் கொண்டான். போலீஸ் அதிகாரியின் முன்னே தனியாக நிற்க அவனுக்குப் பயமாக இருந்தது. துணிச்சலைத் திரட்டி

''வாங்க ஸார். உட்காருங்க. என்ன விஷயம்?'' என்று அவன் உபசரித்தான்.

''ஹூம்!'' என்ற கமிஷனர் பெர்னியைக் கூர்ந்து பார்த்தார். பெர்னி அவரிடமிருந்து தப்பிக்க விரும்புவது போல அங்கேயும் இங்கேயும் பார்த்தான்.

''மிஸ்டர்.... உங்க பேரென்ன?'' என்று கேட்டார் கமிஷனர்.

''பெர்னி... பெர்னார்ட் ஜோஸப்.. ஏன் எதுக்குக் கேக்கறீங்க?''

''நேற்றிரவு மோட்டார் சைக்கிள்லே அழைச்சிட்டுப் போனீங்களே தேவ்... உங்க நண்பரா?''

''தேவ்? மோட்டார் சைக்கிள்? என்ன சொல்றீங்க!'' என்று குழறினான் பெர்னி.

''மிஸ்டர் ஜோஸப்... எங்களுக்கு எல்லாம் தெரியும்! ஒன்றையும் ஒளிக்க வேண்டாம்!'' என்று அதட்டினார் கமிஷனர்.

நீங்க சொல்றது ஒண்ணுமே விளங்கலே... கொஞ்சம் இருங்க... என் ஸிஸ்டரைக் கூப்பிடறேன்..'' என்று பெர்னி சரேலென்று பின் அறைக்குள் ஓடினான்.

போலீஸ் கமிஷனர் வேகமாக அவனைப் பின் தொடர்ந்தபடியே,

''கான்ஸ்டபிள் பின்சந்திலே போய் நின்னுக்க... அந்த ஆள் தப்பிச்சு ஓடப் பார்க்கலாம்!'' என்று உத்தரவை வீசி விட்டு விரைந்தார். போலீஸ்காரர் இருவரில் ஒருவர் கடைக்கு வெளியே ஓடினார். இன்னொருவர் வாசலில் காவலாக நின்றார். தேவகி கமிஷனர் பின்னே சென்றாள்.

பெர்னி டாய்லெட் கதவை தடதட வென்று தட்டிக் கொண்டிருந்தான்.

''ஸ்டெல்லா! சீக்கிரம் வாயேன். போலீஸ் வந்திருக்காங்க!'' என்றான் பதட்டத்துடன்.

கமிஷனர் பெர்னியை ஒட்டி அவன் கையைப் பிடித்துக் கொண்டார்.

''ஓடப் பாக்காதீங்க மிஸ்டர் ஜோஸப்.. ஒரு ஆளைப் பாய்ஸன் பண்ணி கொலை செய்ய முயன்ற குற்றத்துக்காக உங்களைக் கைது செய்ய வந்திருக்கேன்!'' என்றார்.

''நான் ஒண்ணும் செய்யலை. எல்லாம் என் ஸிஸ்டர் அவளைக் கேட்டுக்குங்க'' என்று பெர்னி திமிறினான்.

டாய்லெட்டுக்குள் ஃப்ளஷ் தண்ணீர் அடித்துப் பாயும் சப்தம் கேட் கேட்டது. மறுகணம் கதவு திறந்தது. கண்ணில் விழுந்த மயிர்க்கற்றையை சிலிர்த்துப் பின்னுக்குத் தள்ளியபடி வெளிப்பட்டாள் ஸ்டெல்லா. கமிஷன



# இவ்வளவு ஆசையாக அவள் பாயசம் சாப்பிடுவதை நான் பார்த்ததே இல்லை...

இதுவரை கண்டதில்லை
இது போன்ற சேமியா:

- தரம் மிகுந்த மைதா மாவினால் தயாரிக்கப்பட்டது.
- சமைக்கும்போது பசைபோல ஒட்டிக்கொள்வதில்லை.
- நவீன இத்தாலிய எந்திரங்களினால் சுகாதாரமான முறையில் தயாரிக்கப்படுவது.
- சுவையான பாயசம் தயாரிக்க மிகவும் ஏற்றது.



இப்போது!

பிஸ்கட் தயாரிப்பாளர்கள் அளிக்கும் சிறந்த சேமியா




HTM-AFL-2856

ரின் பிடியில் பெர்னி இருப்பதைப் பார்த்ததும் அப்படியே உறைந்தாள்.

ஒரு கணம்தான். சுதாரித்துக் கொண்டாள். கண்களை அகல விரித்த படி சீறினாள்.

''வாட் நான்ஸென்ஸ் இஸ் திஸ்'' அவனை எதற்காகப் பிடிச்சிட்டிருக் கீங்க? விடுங்க!'' என்று கிறீச்சிட்டுக் கத்தினாள்.

''ஓ.... உள்ளே ஸிஸ்டர் இருந்தது உண்மைதானா? ஆள் தப்பி ஓடப் பார்க்கிறான்னு நினைச்சேன்!'' என்று கமிஷனர் பெர்னியை விட்டார்.

''ஆல்ரைட். உங்க ரெண்டு பேரை யும் அரெஸ்ட் செய்ய வேண்டியது தான்...'' என்றார்.

''ஃபார் வாட்? நாங்க என்ன குற்றம் செஞ்சோம்?''

''உனக்கு ஒண்ணுமே தெரியா தில்லே! நேற்று மாலை தேவ் என்கிற வர் இங்கே வந்திருக்கார். நீங்க அவ ருக்குப் பாய்ஸன் டிரக் எதையோ கொடுத்திருக்கீங்க. அவர் மயக்கமா யிட்ட நிலையிலே.... இவர் மிஸ்டர் ஜோஸப் மோட்டார் சைக்கிள்ளே வச்சு இவங்க மிஸ் தேவகியின் வீட் டுலே போட்டுட்டு சொல்லாமல் போயிருக்கார். நௌ...தேவ் இஸ் இன் ஹாஸ்பிடல் ... ஆல்மோஸ்ட் டெட்...அதுக்கு நீதான் ரெஸ்பான்ஸி பிள்னு இப்பதான் இவர் சொன்னார்!''

ஸ்டெல்லா கடகடவென்று சிரித் தாள். ''மிஸ்டர் போலீஸ்மேன். உங் களைப் பார்த்தா பெரிய அதிகாரி மாதிரி இருக்குது... இப்ப ஒருகதை சொல்லிக்கிட்டு கௌரவமானவங்க வந்துபோற கௌரவமான ஷாப்புக் குள்ளே வந்து ரகளை செய்றீங்க. நீங்க சொல்ற மாதிரி தேவ்'னு எந்த ஆளும் இங்கே நேத்திக்கு வரலே. எங்களுக்கு யாரையும் பாய்ஸன் பண்ணி கொல்ல வேணும்கிற அவ சியமுமில்லே. இங்கே பாய்ஸன் எதுவும் கிடையாது!''

''யூ டீல் இன் டிரக்ஸ்...போதை மருந்து வியாபாரம் செய்றீங்க.... இந்தக் கடையைப்பற்றி எங்ககிட்டே ரிபோர்ட் வந்திருக்கு.''

''வி டீல் ஒன்லி இன் ம்யூஸிக்... காஸெட்ஸ்..ரிக்கார்ட்ஸ்...இன்ஸ்ட்ரு மெண்ட்ஸ்...''

''உன்னோடு பேசி நேரத்தை வீணாக் கத் தயாரில்லே நான். தேவ்வுக்கு என்ன விஷம் கொடுத்தீங்கன்னு தெரியணும். அவர் செத்துப் போகக்கூடாதுன்னு.. நீங்க ரெண்டு பேருமே கொலை குற் றத்திலிருந்து தப்பிக்கணும்னு அந்த டிரக்கின் பேரைச் சொல்லுங்க..''

''எங்களுக்கு ஒண்ணும் தெரி யாது!'' என்றாள் ஸ்டெல்லா.

''தென்..உங்களை போலீஸ் ஸ்டேஷ னுக்குக் கூட்டிப் போய் கேட்கிற விதத்திலே கேட்க வேண்டியிருக்கும்!''

''நாங்க வர மறுத்தால் ''

''அரெஸ்ட் பண்ண வேண்டியிருக் கும்.''

''ஆன் வாட் கிரௌண்ட்ஸ்! அரெஸ்டு வாரெண்ட் காமியுங்க... எங்க லாயரைக் கூப்பிடறேன். அவர் பார்க்கட்டும்!'' என்று ஸ்டெல்லா முன் அறைக்கு ச சென்றாள்.

''பை ஆல் மீன்ஸ் லாயரைக் கூப்பிடு...வந்திருக்கிறவர் போலீஸ் கமிஷனர் என்று அவரிடம் சொல் லுங்க....'' என்றார்.

ஸ்டெல்லா அவரை முறைத்து விட்டு முன் அறைக்கு விரைந்தாள். கமிஷனர் அறையைச் சுற்றி நோட் டம் விட்டார். பெர்னி சுவரோரமாகப் பதுங்கி நழுவுவதற்கு எத்தனித் தான்.

''மிஸ்டர் ஜோஸப்! இந்த இடத்தை விட்டு போயிடாதீங்க. இந்த அறையை ஸர்ச் பண்ணணும். இன் யுவர் பிரஸன்ஸ்.''

கமிஷனரின் கவனம் ஷெல்பில் வைத்திருந்த வட்டமான அலுமினி யப் பெட்டிகளின் மீது பதிந்தது. ஒன்றை எடுத்துத் திறந்தார். காலி யாக இருந்தது. முகர்ந்து பார்த்தார்.

''ஹூம்...ஸம் நார்கோடிக்ஸ்... போதை மருந்து இருந்திருக்கிறது... அப்புறப்படுத்திட்டீங்க'' என்று சொல்லியபடி மற்ற பெட்டிகளையும் திறந்து பார்த்தார். எல்லாமே காலி யாகத்தான் இருந்தது. ஸ்டெல்லா மீண்டும் தோன்றினாள்.

''மிஸ்டர் போலீஸ் கமிஷனர்! உங்க இன்ஸ்பெக்ஷன் முடிஞ்சிட்டு தின்னு இங்கே வந்து உட்காருங்க. லாயர் வந்ததும் அவரோட பேசிக்க லாம்'' என்றாள்.

''ஹும்..யூ ஆர் எ கிளவர்கேர்ல்.. ஆனா உன் கெட்டிக்காரத்தனம் போலீசிடம் செல்லாது..உன் லாயரை கமிஷனர் ஆபீசுக்கு வரச் சொல்லு. இப்போ மிஸ்டர் ஜோஸப்பை கைது செய்து என்னோடு அழைத்துப் போகிறேன்'' என்றார்.

''யூ ஹாவ் நோ ரைட்டு டு தட்... இவர் மேலே என்ன கம்பிளெய்ண்ட யார் கொடுத்தது...அரெஸ்ட் பண்ண மாஜிஸ்ட்ரேட் வாரண்ட் எங்கே?''

''மை டியர்கேர்ல்..போலீஸ் கமிஷனருக்கே மாஜிஸ்ட்ரேட் அதிகாரம் எல்லாம் உண்டுண்ணு உனக்குத் தெரியாது. நானே அரெஸ்டு வாரன்ட் எழுதிக்கலாம். மிஸ்டர் ஜோஸப்பை இன்டராகேஷனுக்காக அழைச்சிக் கிட்டுப் போக எனக்கு அதிகாரம் உண்டு.''

பெர்னி பரிதாபமாக ஸ்டெல்லாவை பார்த்தான். அவளுக்கு எதுவும் பேசத் தோன்றவில்லை.

'ஆல் ரைட். வாங்க போகலாம்'' என்றார் கமிஷனர். ''கான்ஸ்டபிள்!'' வாசலில் நின்றகான்ஸ்டபிள் ஓடி வந்தார்.

"இந்த ஆளைக் கொண்டு போய் ஜீப்பில் ஏற்று...'' என்றார்.

கான்ஸ்டபிள் பெர்னியின் தோள் பட்டையில் கைவைத்து முன்னே தள்ளிக் கொண்டு போனார்.

''பெர்னி. லாயரைக் கூப்பிட்டு வரவரைக்கும் கேள்வி எதுக்கும் பதில் சொல்லாதே. உனக்கு ஒண்ணுமே தெரியாது...ரிமேம்பர் தட்'' என்று ஸ்டெல்லா எச்சரித்தாள்.

பெர்னியைத் தொடர்ந்து கமிஷனரும் ஸ்டெல்லாவும் வாசலுக்கு வந்தனர். தேவகி பின்னே சென்றாள்.

கடை வாசலில் கஜ்கஜவென்று ஜனம் சேர்ந்திருந்தது. போலீஸ் என்றதும் வேடிக்கை பார்க்க வந்து விட்ட கூட்டம்.

''நீங்க வந்து கடையின் பெயரையே கெடுத்திட்டீங்க, அவமானப்படுத்திட்டீங்க. இதுக்கெல்லாம் நீங்க பதில் சொல்லியாகணும்'' என்று பொருமினாள் ஸ்டெல்லா.

''ஓ.கே... உன்னால் ஆனதைச் செஞ்சுக்க. இங்கே என்னய்யா வேடிக்கை! போங்க போங்க'' என்று கமிஷனர் கும்பலை விரட்டினார்.

''ஆர் யூ நாட் கமிங் .தேவகி?'' என்று தேவகியைக் கேட்டார்.

தேவகி கடை வாயிலிலேயே தயங்கினாள். ஸ்டெல்லா அவளை வெட்டுவது போல் பார்த்து விட்டு கடைக்குள் போய்விட்டாள்.

போலீசை துணைக்குக் கூப்பிட்டு வந்ததால் காரியமே கெட்டுப் போயிற்று என்று தோன்றியது.

''ஸார், நான் இந்தப் பெண்ணோடே பேசிட்டு அப்பறம் வரேன்...''

''எதற்கு?..இந்த ஆளிடமிருந்தே விஷயத்தை வரவழைச்சிடலாமே?.'' என்றார் கமிஷனர்.

''ஸார். ஸ்டெல்லாங்கிற இந்தப் பெண் தான் இதில் அதிகம் சம்பந்தப் பட்டிருக்க வேணும்னு எனக்குத் தோணறது.....அவளிடம் நயமா பேசி தெரிஞ்சிக்க முயற்சி செய்து பார்க்கிறேன். உங்க வழிப்படி போனா தாமதமாகும்...இட் மே பீ டு லேட்!''

''சரி...பி கார்ஃபுல்... என்று சொல்லி விட்டு கமிஷனர் சென்றார்.

எதிர் சாரியில் லாட்டரி டிக்கெட் விற்றுக் கொண்டிருந்த, மப்டியில் இருந்த போலீஸ்காரரிடம் சமிக்ஞையாக ஏதோ சொன்னார். பின்னர் ஜீப்பில் ஏறிக் கொண்டு வாகன வெள்ளத்தில் மறைந்தார்.

தேவகி சற்றுத் தயங்கி விட்டு கடையின் உள்ளே சென்றாள். அங்கே ஒரேசமயத்தில் பலவிதமானடேப்புகள் காஸெட்டு இசையை வாரியிறைத்துக் கொண்டிருந்தன.

அவற்றின் நடுவே ஒரு நாற்காலியில் ஸ்டேல்லா உட்கார்ந்தபடி சிகரெட் ஒன்றைப் புகைத்துக் கொண்டிருந்தாள். கன்னத்தில் கண்ணீர் வழிந்து கொண்டிருந்தது.

(தொடரும்)

# ஏஞ்சல் டஸ்ட்

கி. கஸ்தூரி ரங்கன்

15

## ஸ்டெல்லா & தேவகி

"ஸ்டெல்லா!" மிருதுவாகத் தான் கூப்பிட்டாள் தேவகி. சாட்டை அடிபட்டது போல திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தாள் ஸ்டெல்லா.

"ஓ, யூ! ..வாட் டூ யு வான்ட்" என்றாள் குரோதமாக

"ஸ்டெல்லா! நான் போலீஸ் ஆள் இல்லே. நான் தேவகி!"

ஸ்டெல்லாவின் புருவங்கள் உயர்ந்தன.

"எஸ்..தேவ்வின் கல்யாண அழைப்பிதழில் மணமகளாக என் பேர்தான் இருந்தது. நீ பார்த்திருப்பாய்!"

"ஐ டோண்ட் நோ வாட் யூ ஆர் டாக்கிங்... தேவ் என்று யாரையும் தெரியாது எனக்கு!"

தேவகி அருகே இருந்த ஸ்டூலில் உட்கார்ந்து கொண்டு ஸ்டெல்லாவை நேராகப் பார்த்தாள். ஸ்டெல்லா அவள் பார்வையைத் தவிர்க்க முயன்றாள்.

"ஸ்டெல்லா! உன் தைரியத்தைப் பாராட்டுகிறேன்.. ஆனால் இனிமேல் எதையும் மறைக்க முடியாது... பெர்னி உன் அண்ணன் தானே...? அவனிடம் உனக்குப் பாசம் உண்டல்லவா!"

"இதையெல்லாம் எதற்குக் கேட்கிறாய்! லீவ் மி அலோன்!" என்று எழுந்து கொண்டாள் ஸ்டெல்லா

"நேற்றிரவு பெர்னி தேவ்வை என் வீட்டில் குற்றுயிராகக் கொண்டு தள்ளினார். அதற்கு சாட்சி இருக்கிறது. நீங்கள் அவருடைய நண்பர்கள். உங்களை அழைக்கத்தான் வந்தார்னு எனக்குத் தெரியும்!"

"ஹௌ டு யூ நோ? எங்களைப் பற்றி உன்னிடம் சொன்னாரா?"

"எஸ்.. உங்களுக்கு இன்விடேஷன் கொடுத்து விட்டு வருகிறேன் என்று என்னிடம் சொல்லிவிட்டுப் போனார் மாலை ஐந்து மணிக்கு. ஒன்பது மணிக்கு என் வீட்டு வாசலில் மோட்டார் பைக்கின் மேல் நினைவு தப்பியவராகக் கிடந்தார்!"

ஸ்டெல்லா அறைக்குள் நடக்கலானாள். நடையில் பதட்டம் தெரிந்தது. தேவகியிடம் தேவ் போகிற இடத்தைச் சொல்லவில்லைதான், ஆனால் ஸ்டெல்லாவிடமிருந்து உண்மையை வரவழைக்க ஒரு சின்னப் பொய் தேவையாக இருந்தது.

'இத்தனை சின்னப் பெண் இப்படி ஒரு காரியம் செய்வதற்கு எத்தனை

துணிச்சல் இருக்க வேண்டும்!' என்று மனதில் நினைத்து வியந்தாள்.

''ஸ்டெல்லா.. நான் சொல்வதை முழுதும் கேட்டுக் கொள். அட்தி மோமண்ட்... இப்போது பெர்னி போலீசிடம் எல்லா விவரத்தையும் சொல்லியிருப்பார்....''

''ஹி நோஸ் நத்திங்... அவனுக்கு ஒண்ணும் தெரியாது!''

''தேவ் உங்களை அழைக்க வந்தது, இங்கே எதையோ சாப்பிட்டுவிட்டு மயக்கமானது, அவரோட மோட்டார் சைக்கிள்ளிலேயே அவரை வைத்து என் வீட்டிலே விட்டுட்டுப் போனது இதெல்லாம் உன் அண்ணனுக்குத் தெரியும். வழியில் போலீஸ் இன்ஸ்பெக்டர் வேறு நேரில் பார்த்துக் கேட்ட போது மினிஸ்டர் மகன் சின்னதுரைதான் குடிபோதையில் மயக்கமாயிட்டான். அவங்க வீட்டுக்கு எடுத்துட்டுப் போறேன்னு பொய் சொல்லியிருக்கிறுர். இதையெல்லாம் போலீஸ் குடைந்து கேட்டு உண்மையை வரவழைத்துவிடும்!''

''தே கான்ட் ப்ரூவ் எனிதிங்.. ஐ ஹாவ் ஹைலெவல் கான்டாக்ட்ஸ்... பெர்னியை மீட்டுக்கொள்ள எனக்குத் தெரியும்..நௌ..யுகெட் அவுட்.''

தேவகிக்குக் கோபம் வந்தது. தன்னைச் சூழ்ந்துள்ள ஆபத்தை உண



ராது பேசுகிருள் இந்தப் பெண்! எத்தனை தலைக்கனம்!

''ஸ்டெல்லா, தேவ்வின் உயிர் ஊசலாடிக்கிட்டு இருக்கு. ஹி இஸ் இன் கோமா... அவர் சாப்பிட்ட விஷம் என்னன்னு தெரிஞ்சா அவரைப் பிழைக்க வைத்து விடலாம்... அவர் இறந்து போயிட்டா உங்க இரண்டு பேர் மீதும் கொலைக் குற்றம் விழும்! அதிலிருந்து உங்களைத் தப்ப வைக்க யாராலும் முடியாது!''

பேசும் போது தேவகி உணர்ச்சி வசப்பட்டு அவளது குரல் கிறீச்சிட்டது.

ஸ்டெல்லா துவண்டு போய் நாற்காலியில் சாய்ந்தாள்.

''வாட்டூ யு வான்ட் மி டு டூ..... என்னை என்ன செய்யச் சொல்றீங்க!'' என்று தணிந்து வந்தாள்.

தேவகி அவளது ஒரு கையைப் பற்றி நயமாகப் பேசினுள். ''ஸ்டெல்லா, ஒய் டிட் யூ பாய்ஸன் தேவ்?'' என்று கேட்டாள்.

''நான் ஒண்ணும் பாய்ஸன் கொடுக்கலே.. இட் வாஸ் ஆன் ஆக்ஸிடென்ட்!''

''ஆல்ரைட்... நீ வேண்டுமென்று விஷம் கொடுத்தாய் என்று நான் சொல்லலே.. ஆனு எப்படி அது நடந்தது என்று சொல்ல வேணும்!''

''அவர் வந்தது நிஜம்தான். இது முதல் தடவை இல்லே... உங்க கணவராக வரப் போகிறவர் ஒரு டிரக் அடிக்குன்னு தெரியுமா?''

''எஸ் ஐ நோ! அவருடைய அம்மாவே சொல்லியிருக்காங்க..''

''ஐஸீ.. ஸ்டில் யூ வான்ட்டு மாரி ஹிம்!''

''எஸ்... விஷயம் தெரிஞ்சபோது இட் வாஸ் டூ லேட்.. ஆனு என்னை அவர் சந்திச்சது முதல் போதை மருந்து எதுவும் அவர் சாப்பிடவில்லே!''

''உங்களுக்குத் தெரிஞ்சது அவ்வளவு தான், வீட்டிலேயே மாத்திரை வச்சுட்டிருப்பாரு. எனிவே...இட்ஸ் யுவர் ஃப்யுனரல்!''

''இருக்கட்டும். இங்கே வந்த போது என்ன நடந்ததுன்னு சொல்லு?''

''இங்கே இல்லே. என் வீடு புரசவாக்கம்..அங்கே வந்திருந்தாரு. எல்லாரும் டீ சாப்பிட்டோம், கேக் சாப்பிட்டோம்... வழக்கமா கேக்கில் ஹஷீஷ் போட்டு சாப்பிடுவோம். இந்த முறை ஒரு பவுடர்....அதைப் போட்டிருந்தேன். அவர் கேக்கில் அதிகமாயிட்டுது போலிருக்கு... மயங்கி விழுந்துட்டாரு.''

''நீயும் அதையேதான் சாப்பிட்டாயா...?''

''நானும் அண்ணனும் தின்றதிலே ஒண்ணும் போடலே..அண்ணனுக்கு டிரக்ஸ் பிடிக்காது..எனக்கு ஹஷீஷ் புகைப்பதுதான் பிடிக்கும். இந்த சிகரெட். ஸ்பெஷல் ஹஷீஷ் சிகரெட். வான் டு ட்ரை?'' என்று நீட்டினுள்.

''சீ..எனக்கு வேணும். அந்த மருந்து..என்ன பேர் சொன்னே...?''

''ஏஞ்சல் டஸ்ட்.''

'ஏஞ்சல் டஸ்ட்' - தேவகி மனதில் ஒருமுறை சொல்லிப் பார்த்துக்






கொண்டாள். அவளுக்குப் போதை மருந்துகள் பற்றி சுத்தமாக ஒன்றும் தெரியாது. இந்தப் பெயரே கேள்விப் பட்டதில்லே. டாக்டர் மாத்ருபூதத்திற்குத் தெரிந்திருக்கலாம். இவ்வளவு தூரம் ஒத்துழைத்த இந்தப் பெண் இந்த மருந்தின் 'ஸாம்பிள்' கேட்டால் கொடுக்கலாம்!...

''உன்னிடம் இந்த மருந்து இன்னும் இருக்கிறதா?''

''இங்கே இல்லே. எல்லாத்தையும் கொட்டிட்டேன். ஸம் த்ரீ தௌஸண்ட் ஒர்த் ஆஃப் ஸ்டஃப்'' என்றாள் வருத்தமாக.

''வீட்டுக்குப் போனால் கிடைக்குமா?... ஸ்டெல்லா, தேவ் பிழைக்கணும்னு நீதான் ஹெல்ப் பண்ணணும்... யூ வான்ட் ஹிம் டு லிவ்... டோன்ட் யூ?''

''ஆஃப் கோர்ஸ்! நான் வேணும்னே அவருக்கு பாய்ஸன் கொடுத்திடலே..வழக்கமா ஹஷீஷ் போட்ட கேக்தான் தேவ்வுக்குப் பிடிக்கும். இந்த முறை இந்தச் சனியனே போட்டுட்டேன். கொஞ்சம் அதிகமாயிட்டுது போலிருக்கு!''

''இட் வாஸ் டெட்லி பாய்ஸன்... கொடிய விஷம்!''

''கொஞ்சமா சாப்பிட்டா ஒண்ணும் ஆகாது.''

''பட் ஹி இஸ் டையிங்!''

''பெர்னியும் அப்படித்தான் பயந்துட்டான். வீட்லே கொண்டு போய் விட்டுட்டு வரேன்னு போனான். ஒரு ராத்திரி போயிருந்தா மயக்கம் தெளிஞ்சுப் போயிருக்கும்!''

''ராத்திரியாயிட்டுது ... இப்போ பகல் 11 மணி .. இன்னும் எழுந்திருக்கலே ... அவரோட கிட்னி அபெக்டாகி டயாலெஸிஸ்லே.. சிறு நீரை சுத்தம் செய்யற கிட்னி மெஷின்ல வச்சிருக்காங்க.''

''ஐ'ம் ஸாரி'' என்று உண்மையாகவே வருத்தப்பட்டாள் ஸ்டெல்லா.

அதன் பிறகு அவள் தேவ்வைக் காதலித்த சங்கதியைச் சொன்னாள். அவன் வாரத்துக்கு ஒருமுறை அவள் வீட்டுக்கு வந்து போனதைப் பற்றிச் சொன்னாள். இரண்டு பேரும் கல்யாணம் செய்து கொள்ள இருந்ததாகச் சொன்னாள்.

''பட்.. ஹி வாஸ் எ கவர்ட்... என்னைக் கல்யாணம் பண்ணிகிட்டா அம்மா அப்பா கோவிச்சிப்பாங்களோன்னு பயந்துட்டார்!''

தேவகி அவள் பேச்சை நம்பவில்லை. மூன்று மாத பழக்கத்தில் தேவ்வின் உயர்ந்த ரசனைகள் அவளுக்கு முற்றிலும் பரிச்சயமாகிவிட்டது. ஸ்டெல்லா போன்ற கோணலான இயல்புகளையுடைய பெண்ணைத் தன் வாழ்க்கைத் துணையாக நிச்சயம் தேர்ந்தெடுத்திருக்கமாட்டார்.

''உன்னைக் கல்யாணம் செஞ்சுக்கிறேன் என்று அவர் வாக்குக் கொடுத்திருந்தாரா?''

''அதுக்கு அவசியமில்லே. ஹி லைக்ட் மை கம்பெனி.''

''தேவ் மாதிரி இன்னும் நிறைய பிரெண்ட்ஸ் உனக்கு உண்டல்லவா?''

''ப்ளென்டி.பாய் பிரெண்டு நிறைய உண்டு. ஆனா ஐ வாஸ் கோயிங் ஸ்டெடி வித் தேவ்.. அதெல்லாம் பழைய கதை. உங்களைத் தேர்ந்தெடுத்து

## இப்படியும் சில காரணங்கள்

ராஜ்கோட் வட்டாரங்களில் அற்ப காரணங்களுக்காகக் குடும்பப் பெண்கள் தற்கொலை செய்து கொள்வது அதிகரித்து வருகிறதாம். சிறு காரணங்களுக்கெல்லாம் உணர்ச்சிவசப் படுவது தான் இத்தகைய தற்கொலைகளுக்குக் காரணமாம். ஒரு சில காரணங்கள்.

ஒரு இளம் பெண் தனது கணவன் தான் விரும்பிய சினிமாவிற்கு டிக்கெட் வாங்கித் தர முடியவில்லை என்ற காரணத்திற்காகத் தற்கொலை செய்து கொண்டாளாம்.

தன் கணவன் தனது கையால் தனக்கு உணவு ஊட்ட வில்லை என்ற காரணத்திற்காகத் தற்கொலை செய்து கொண்டாளாம் மற்ெறாரு பெண்.

தனது பெற்றோர் வீட்டிற்கு ஒரு முக்கிய நிகழ்ச்சியாக கலந்து கொள்ளத் தன் கணவன் அனுமதிக்கவில்லை என்று ஒரு பெண் தற்கொலை செய்து கொண்டாளாம்.

பாநுஷா

விட்டார். நாட் எ பேட் சாய்ஸ்!'' என்றாள் ஸ்டெல்லா.

''தேவ் பிழைச்செழுந்து உன்னையே கல்யாணம் செஞ்சுக்கிறேன்னு சொன்னா நான் விட்டுக் கொடுத்திடறேன்.. இட்ஸ் எ பிராமிஸ்'' என்றாள் தேவகி.

ஸ்டெல்லா அவளை ஒரு மாதிரியாகப் பார்த்துச் சிரித்தாள்.

''பெரிய மனசு உங்களுக்கு. ஆனா உங்களை 'லவ்' பண்ண ஆரம்பிச்ச எந்த ஆம்பளையும் வேறு யாரையும் ஏறெடுத்துப் பார்க்கமாட்டார்ன்னு எனக்குத் தோணுது. மோர் ஓவர் தேவ் என்னை காதலிச்சாரோ என்னவோ? கல்யாணம் செஞ்சுக்க எப்பவுமே தயாராயில்லை...''

அதன் பிறகு இருவரும் சற்று மௌனமாகவே இருந்தார்கள். திடீரென்று டெலிபோன் மணி அடித்தது.

ஸ்டெல்லா எழுந்து போனாள்.

''இட்ஸ்.. பார் யூ'' என்று தேவகியை அழைத்தாள்.

'இங்கே யார் எனக்குப் ஃபோன் செய்யக்கூடும்' என்று அதிசயித்தபடி தேவகி ரிசீவரை வாங்கிக் கொண்டாள்.

''ஹலோ.. அப்பாவா?.. ஐம் ஸாரி டாடி. சொல்லிக்காம கிளம்பிட்டேன்.''

அதன் பிறகு இரண்டு நிமிஷம், ''ஐம் ஸாரி டாடி 'ஐம் ஸாரி டாடி' என்று அவள் சொல்லிக் கொண்டிருந்தாள். அவள் அப்பா கோபித்துக் கொண்டு திட்டுகிறார் என்று தெரிந்தது.

''இன்னும் கால்மணிலே வந்திடறேம்பா... தேவ் எப்படி இருக்கார்... அவர் சாப்பிட்ட மருந்து எதுன்னு தெரிஞ்சு போச்சு... ஏஞ்சல் டஸ்ட்... அப்புறம் நேரில் வந்து எல்லாத்தையும் சொல்றேன்.''

தேவகியின் நெற்றியில் முத்து முத்தாக வியர்த்திருந்தது.

''காலையிலே வீட்லே சொல்லிக்காம கிளம்பிட்டேன். அப்பா கமிஷனருக்குப்போன் பண்ணி இங்கே என்னை பிடிச்சிட்டார்.

''அப்ப வீட்டுக்குப் போகலாம். கடையைப் பூட்டிக்கிட்டு வந்திடறேன்'' என்று ஸ்டெல்லா எழுந்தாள். அப்போது, ''ஹல்லோ ஓ..ஸ்டெல்லா டார்லிங்'' என்று ஆரவாரித்தபடி ஓர் இளைஞன் உள்ளே வந்தான். ஸ்டெல்லாவைக் கட்டிப் பிடித்து அவள் கன்னத்தில் முத்தமிட்டான்.

''ராஜ் இப்பத்தான் ஆடி அசைஞ்சுக்கிட்டு வரையாக்கும்? போலீஸ் வந்து போயி ஒரு அவராயிட்டுது'' என்று கடிந்தாள் ஸ்டெல்லா.

## இது ஒரு காதல் கதை!

உத்திரப்பிரதேச மாநிலத்தில் உள்ள சரணாலயம் ஒன்றில் நிறைய யானைகள் வசிக்கின்றன.

இங்குள்ள பெண் யானைகளில் 'ராஜ் பேகம் நல்ல அழகி!

ஒரு நாள் நேபாளத்திலிருந்து இரை தேட வந்த யானைகளில் சில ஆண் யானைகள் 'ராஜ் பேகத்தைக் கண்டு மனதைப் பறி கொடுத்தன.

சிறிது காலத்திற்குப் பின் நேபாள யானைக் கூட்டம் சொந்தக் காட்டிற்குத் திரும்பியது.

ஆனால் மூன்று யானைகள் மட்டும் திரும்பிச் செல்லவில்லை.

இரவில் ராஜ் பேகத்தை இந்த மூன்று யானைகளும் சுற்றிக் கொண்டிருக்கின்றன. ஆனால் லாயத்துனுள் ராஜ்பேகம் இந்த ஆண் யானைகளைச் சட்டை செய்யாது வைராக்கியமாக இருக்கிறது.

ஒரு நாள் இரவு ராஜ்பேகத்தைத் 'தட்டிக்கொண்டுபோகச் செய்த முயற்சி பலிக்கவில்லை.

'எவ்வளவு நாள் தான் ராஜ்பேகம் வைராக்கியமாக இருக்க முடியும். அதுவும் பெண் (யானை) தானே! எந்த நேரத்திலும் அது நேபாள ஆண் யானைகளுக்கு இணங்கி விடக் கூடும் என்று சரணாலய அதிகாரிகள் எதிர் பார்க்கின்றனர்.

ராஜ்பேகத்தைச் கட்டவிழ்த்து விட வேண்டிய அவசியம் விரைவில் நேரிடலாம் என்று அவர்கள் கருதுகின்றனர்.

ஆதாரம்: தினமணி
-லட்சுமி.

''இவன்தான் ராஜ். லாயர், ஹைகோர்ட்லே பிராக்டீஸ் பண்றவன்னு பேரு.. ஆனா வெட்டியா ஊரையே சுத்திட்டிருப்பான்'' என்று தேவகிக்கு அறிமுகப் படுத்தினாள். ராஜ் ஓரக் கண்ணால் அவளைப் பார்த்து குலுக்கக் கையை நீட்டினான். தேவகி கைகளைச் குவித்து வணங்கினாள். அவன் முகம் சுளித்தான்.

அமிதாபச்சன் ஸ்டையிலில்ஸ்டெப் கட்டிங், மெல்லிய மீசையும் முகம் நிறைய பவுடரும், ஜீன்ஸ் மேலே துருத்திய அரைக்கை சட்டையும்: அவனைப் பார்த்தால் வக்கீலாகவே தோன்றவில்லை

அவன் முகத்தில் ஒரு வில்லன்களை இருந்தது.

''ஸ்டெல்லாவின் போதைக் கும்பலில் ஒரு ஆள் போலிருக்கு.... இதில் போய் தேவ் மாட்டிக்கொண்டாரே!'' என்று நினைத்துக் கொண்டாள்.

''ஒரு நிமிஷம் தேவகி.. இவரிடம் கேஸை சொல்லிட்டு வரேன்'' என்று அவனை பின் அறைக்கு அழைத்துச் சென்றாள் ஸ்டெல்லா. உள்ளே தாழ்ந்த குரலில் ஏதோ பேசிக்கொண்டார்கள்.. ஏதோ வாக்குவாதம் போல் இருந்தது.

பதினைந்து நிமிடத்திற்குப் பிறகு இருவரும் வெளியே வந்தார்கள். ராஜ் தேவகியை வெறித்துப் பார்த்தான். அவன் கண்ணில் சந்தேகமும் வெறுப்பும் தெரிந்தது.

''லெட்ஸ் கோ. ராஜ் வில் டிராப் அஸ்'' என்றாள். அவளது குரலில் முன்பிருந்த அன்னியோன்னியம் மறைந்து பதட்டம் தெரிந்தது.

கதவைப் பூட்டினாள். ராஜ் சந்து முனையிலிருந்து சிவப்பு வெள்ளை டபிள்-டோன் ஹெரால்ட் காரின் கதவைத் திறந்து முன் சீட்டை தூக்கிப் பிடிக்க தேவகி தயக்கத்துடன் ஏறி பின்னால் உட்கார்ந்தாள். ஸ்டெல்லா முன்னே அமர ராஜ் காரை செலுத்தினான்.

கார் பிராட்வேயைக் கடந்து வலது பக்கம் திரும்பியது. தேவகி பின்னால் பார்த்தாள். லாட்டரி டிக்கெட் விற்றுக் கொண்டிருந்த சி.ஐ.டி. அதிகாரி ஒரு மோட்டார் சைக்கிளில் பின் தொடர்ந்து வந்து கொண்டிருந்தார். கமிஷனர் அவரிடம் சமிக்ஞை செய்து ஏதோ சொன்னது நினைவுக்கு வந்தது.

ராஜ்ஜைப் பற்றி மனதிற்குள் சுரந்த பயம் ஓரளவு தணிந்தது.

(தொடரும்)



பிரபல மலையாள நடிகர் பிரேம் நசீர்' இது வரை 600 படங்களில் நடித்து, ''கின்னஸ்' சாதனைப் பட்டியலில் சேர்ந்து விட்டார். இவரது பெருமை, 'கன்னியாகுமரி முதல் காஷ்மீர் வரை' உள்ளவர்கள் அனைவருக்குமே பெருமை தரக் கூடியது. இதை உணர்த்த வேண்டியோ, என்னவோ, இவர் நடிக்கும் '600-ம் படத்திற்குப் பெயர் இப்படி வைத்துள்ளார்கள்;

'கன்னியாகுமரி டு காஷ்மீர்!'

கே. எம். இளங்கோ

இரு ஜாதகங்களுமே 'சஷ்டாஷ்டகம்' என்னும் அமைப்பிலுள்ளன. இவ்விரு ராசிகளுக்கும் ராசி அதிபதி சுக்கிரனே ஆனாலும் இருவருமே நடைமுறையில் 'ஜன்மவைரிகள்' ஆக இருப்பார்கள் என்பதையே இந்த சஷ்டாஷ்டகம்' உறுதியாயும் நடைமுறை ரீதியாயும் தெளிவுப்படுத்துகிறது. எம். ஜி. ஆரின் ஜாதகம்? அது இதோ:

பெண்கள் தாங்கள் நடக்கும் போதும் சரி. உட்காரும்போதும் சரி, அதில் ஒரு கவர்ச்சி இருக்க வேண்டும். கால்களை கைகளை அசைப்பதிலும். சிரிப்பிலும் பேசுவதிலும் பெண்கள் கவர்ச்சியைக் காட்ட வேண்டும். ஆபாச உடைகளை அணிந்து காட்ட முடியாத கவர்ச்சியை அங்க அசைவுகளால் காட்டி விடலாம்.

அழகாய் இருக்க வேண்டும்என்று விரும்பாதவர்களும் நம்மை, 'அழகாய் இருக்கிறோம்' என யாராவது பாராட்ட மாட்டார்களாஎன ஏங்காத பெண்களும் கிடையாது.

-அழகுக் குறிப்புகள் தருபவர் தமிழ்வாணன்.

கல்கண்டில் வந்த கேள்வி-பதிலில் சுவையானவற்றைத் தொகுத்து தனிப் புத்தகமாய் போட்டிருக்கிறார்கள்-

கே: பார்க்கக் கோரமானது எது?

ப: மேக்கப் இல்லாத நடிகையின் முகம்.

பதில் சொல்வதில் லேனாவும். பலே ஆள்தான். இவரது கேள்வி-பதில் தொகுப்பிலிருந்து ஒன்று:

கே: குழந்தைக்குத் தாய்ப்பால் நல்லதா? புட்டிப்பால் நல்லதா?

ப: தாய்ப்பால் கொடுத்தால், தாய் மீது பாசம் வளரும். புட்டிப்பால் கொடுத்தால் புட்டிமீதுதான் பாசம் வரும்.

'ஜெனரல் நாலட்ஜ்' என்று ஒரு புத்தகம். பலவிஷயங்கள் உள்ளன. சிலகேள்விகள் மட்டும் கேட்கிறேன் விடைகளை தேடிப் பிடித்துக்கொள்ளுங்கள்.

சந்திரனில் ஒலி கேட்காது. ஏன்?

குடிநீரில் குளோரின் கலக்குவது ஏன்?

சைட்டாலஜி என்பது என்ன? (இளைஞர்களே இது நீங்கள் நினைப்பது போல இல்லை)

உயரத்தில் இருந்த புத்தக வரிசையைப் பார்த்தேன். 'சிறுகதை எழுதுவது எப்படி?' என்று அட்டையில் அமர்க்களமாய் சிரித்தபடி சொல்லிக் கொண்டிருந்தார்சுஜாதா பக்கத்தில் அவர் எழுதியபுத்தகங்கள் வரிசையாய். கையைஉயர்த்தி எடுக்க முயற்சித்தேன். கை எட்டவில்லை. மனுஷன் பிடிக்கமுடியாத உயரத்தில் இருக்கிறார் என்பதைச் சொல்லாமல் சொல்லியது.

சரி; முக்கியமான சமாசாரத்துக்கு வருவோம். ஆரம்பத்தில் சொன்ன முக்கிய புள்ளியின் விலாசம்: 12, சாரதாம்பாள் தெரு, சென்னை-93.

அந்தப் புள்ளி: சிலுக்குஸ்மிதா.



# ஏஞ்சல் டஸ்ட்

கி. கஸ்தூரி ரங்கன்

Phencyclidine Hydrochloride (B. Vet. C) 01 395; PCP. 1-(Phenylcyclohexyl). A white odourless crystalline powder.

Phencyclidine is related chemically to ketamine and is a potent analgesic and anaesthetic. It has been given intravenously to produce an amnesic trance-like state, with analgesia. Phencyclidine hydrochloride is used only in veterinary medicine or as a drug of abuse. Toxic effected: include respiratory depression, hallucinations, agitation, catatonic rigidity, postoperative disorientation, incoordination, nystagmus, hypersalivation, vomiting convulsions, numbness and maculopapular skin rash.

Phencyclidine was a major component of street drug preparations. In liquid form it was sprayed on marihuana, parsley, oregano, or other plant leaves and sold as 'angel dust'. In powder form it was marketed as phencyclidine or 'peace pills'. It was frequently sold as lysergide, mescaline, psilocybin, cocaine, 3-4 methylenedioxyamphetamine (MDA), tetrahydrocannabinol and other drugs, or it might be mixed with these agents. Many unrecognised toxic reactions secondary to sympathomimetic anaesthetic abuse were occurring and phencyclidine, a major drug of abuse, was a member of this group.

## 16. ஃபின்ஸைக்ளிடின்

ஃபார்மோ கோப்பியாவில் இந்த விவரத்தைத் தேடிப் படித்த டாக்டர் பூஷணம் "அட பாவிகளா!" என்று வாய்விட்டுச் சொன்னார்.

"என்ன மக்கி! என்ன ஆச்சு?" என்று பதைப்புடன் கேட்டாள் அருகே இருந்த அவர் மனைவி மங்கையர்க்கரசி.

"தேவகி போன்லே சொல்லித்தில்ல, ஏஞ்சல் டஸ்ட்... மாட்டையே கொல்லக்கூடிய விஷம். இதை இந்தப் பசங்க தின்ன ஆரம்பிச்சிருக்காங்க... தேவ்வுக்கும் அதைத்தான் கொடுத்திருக்காங்க..." என்றார்.

"அப்படின்னா அந்தப் பிள்ளை பொழச்சு எழுந்திருக்காதா?"

"சரியான மாற்று மருந்து கொடுத்தா பொழச்சிடலாம்...... டாக்டர் மாத்ருபூதத்தைக் கேட்கணும்.....இரு" என்று டெலிபோனை எடுத்தார்.

விஜயாவில் டாக்டர் மாத்ருபூதத்தின் அஸிஸ்டென்ட் நர்ஸ் மாயா பேசினாள். காலைவரை தேவ்வின் உடல் நிலையை அருகிலிருந்து கண்காணித்த பிறகு நிலைமையில் அபிவிருத்தி காணாது வீட்டுக்குப் போயிருப்ப

தாகச் சொன்னாள். ''பத்து மணிக்கு திரும்பி வருவதாகச் சொன்னார். வர்ர சமயம்தான்!'' என்றாள்.

''வந்தா ஏஞ்சல் டஸ்ட்...பி.ஸி.பி. விஷத்துக்கு டிரீட்மெண்ட் தரச் சொல்லுங்க....''

''என்ன டஸ்ட்?'' என்றாள் மாயா.

''நெவர் மைண்ட். நானே நேரில் வந்து சொல்லிக்கிறேன். என் டாக்டர் தேவகி வந்துட்டுதா?''

''இன்னும் வரலியே டாக்டர்!''

''வந்தா அவளையும் அங்கே இருக்கச் சொல்லு....''

டாக்டர் பூஷணம் போனை வைத்தார். அவசரமாக உடைகளை மாற்றிக் கொண்டு காரில் புறப்பட்டார்.

''நானும வர்றேன் மக்கி'' என்று மங்கையர்க்கரசி மாடியிலிருந்து குரல் கொடுத்தாள்.

''சரி....சீக்கிரம் வா!''

அடுத்த 10-வது நிமிடம் இருவரும் விஜயா ஆஸ்பத்திரியை அடைந்த போது டாக்டர் மாத்ருபூதம் எதிர்பார்த்துக் காத்திருந்தார்.

''பாய்ஸன் என்னன்னு தெரிஞ்சிட்டுதா?'' என்றார்.

''யெஸ்.. என் டாக்டர்தான் போன்லே சொன்னா... போதை மருந்தைக் கொடுத்தவங்களே சொன்னதாம்.... ஏஞ்சல் டஸ்ட்.... அதுபற்றி கேள்விப்பட்டிருக்கீங்களா?''

''ஆஃப்கோர்ஸ்! ரொம்ப மோசமான டிரக் ஆச்சே.... அமெரிக்க



சரக்கு. இங்கேயும் வேகமா பரவிக்கிட்டு வர்றது!''

''யூ மீன் அமங் டிரக் அடிக்ட்ஸ்!''

''ஆமா. இந்தக் கெமிக்கலை தயாரிப்பது மலிவு.... சாதாரணமா எல்எஸ்டி, மரியுவானா, ஹெராயின் இதுங்களை உபயோகப்படுத்தற வங்க அதிக விலை கொடுக்க வேண்டியிருக்கு. இப்ப இதை அந்தப் பேரைச் சொல்லி விற்கறாங்க. இதிலேயும் அதேமாதிரி எஃபக்ட் கிடைக்கும். ஆனா ரொம்ப அபாயமான விஷம்...''

''ஆன்டிடோட் என்ன? குளோரோப்ரோமிஸின்?''

''கொடுக்கலாம். ஆனா ரிகவரி ஸ்டேஜ்ல வேற டிரீட்மெண்ட் தரணும்.... மயக்கம் தெளிஞ்சாக் கூட புத்தி பேதலிச்ச நிலைமைகொஞ்ச நாளைக்கு இருக்கும். ஷிசோப்ரினியா ... இரட்டைக் குணபேதம்.... டிஸ்ஓரியனடேஷன்.... பழகியவர் முகம் மறந்து போவது.... வயன்லன்ஸ்.... தற்கொலை முயற்சி என்று பலவிதமாக இருக்கும்.....''

''ஏஞ்சல் டஸ்ட் வெறும் பி.ஸி.பி. மட்டும்தானா.... வேற ஏதாவது கலந்திருக்குமா? சமீபத்திலே அமெரிக்காவிலே பொட்டாஷியம்ஸைனைட் இதோட கலப்படம் செஞ்சு 18 பேர் செத்துட்டாங்கன்னு படிச்சேன்....''

''அது ஒரு டேஞ்சர் இருக்கு.... சிறுநீரைப் பரிசோதித்தால் தெரியும்....இவருக்கு அதுவும் அபெக்டாகி இருக்கு.....''

''ஆல்ரைட்.... முதலில் டிரீட்மெண்டை ஆரம்பித்துப் பார்ப்போம்'' என்று டாக்டர் இருவரும் தேவ் படுத்திருந்த அறைக்குச்சென்றார்கள்.

டாயாலைஸிஸ் மெஷினை நிறுத்தி விட்டு தேவ்வைப் பரிசோதித்தார்கள்.

''தேர் இஸ் ஸம் பிராக்ரஸ்! பல்ஸ் ரேட் சீராகிட்டு வருது...கிட்னியும் வேலை செய்ய ஆரம்பிச்சுடும்னு நினைக்கிறேன்..'' என்றார் டாக்டர் பூஷணம்

டாக்டர் மாத்ருபூதம் சிரிஞ்சில் மருந்து ஒன்றை ஏற்றி தேவ்வின் கையில் துளைத்து மருந்தைமெல்ல ஏற்றினார்.

தேவ்வின் முகத்தில் லேசாகச் சுளிப்பு. இடது கால் வலிப்பு வந்தாற்போல விலுக்கென்று ஒரு முறைஉதறி அமைதியானது.

''ஹி வில் கம் அரவுண்ட்..பிழைச்சுக்குவார்!'' என்றார் டாக்டர்மாத்ருபூதம்.

''அப்பாடா நல்ல சேதியாச்சொன்னீங்க. இவரோட அம்மாவுக்கு நிம்மதியாயிருக்கும். எங்கே அவங்க? ''என்றாள் மங்கையர்க்கரசி.

''அவங்களையும் வீட்டுக்குப்போகச் சொன்னேன். தேவ்வின் அப்பா, மிஸ்டர் பிள்ளை ஈவினிங் பிளைட்லே வந்ததும் அவரோட வரச் சொன்னேன்'' என்றார் டாக்டர் மாத்ருபூதம்.பின்னேடு...

''வேர் இஸ் யுவர் டாட்டர்? இவருக்கு விழிப்பு வர்ற போது அவங்க பக்கத்தில் இருந்தா நல்லது'' என்றார்.

''விஷங் கொடுத்தவங்களைக் கண்டு பிடிக்கறேன்னு போலீஸ் கமிஷனரோடு எங்கியோ போனா.. ஸம் ம்யூஸிக் ஷாப்! அங்கேதான் போன் செஞ்சு அவரோட பேசினேன். உடனே வறேன்னு சொன்னா. ஒரு மணி நேரம் ஆயிட்டுது இன்னும் காணோமே!'' என்றார் டாக்டர் பூஷணம் கவலையுடன்.

''கமிஷனரைக் கூப்பிட்டுக்கேட்டுப் பாருங்க. அங்கே போயிருக்கலாம்!''

டாக்டர் பூஷணம் கமிஷனருக்கு டெலிபோன் செய்ய வெளியே சென்றார்.

''உங்க பெண் ரொம்பக் கெட்டிக்காரி. தனியா முயன்று கண்டு பிடிச்சிட்டாங்களே!'' என்று மங்கையர்க்கரசியிடம் பாராட்டுத் தெரிவித்தார் டாக்டர் மாத்ருபூதம்.

''கெட்டிக் காரத்தனமா? குண்டு தைரியம்! இப்படி தனியா போயிருக்கிறாளே? வம்பிலே மாட்டிக்காமஇருக்கணுமேன்னு என்மனசு திக்கு திக்குனு அடிச்சிக்கிட்டிருக்கு!''

''கவலைப் படாதீங்க. தன்னைப் பார்த்துக் சொள்ள தேவகிக்கு தெரியும். அவ மாதிரி தன்னம்பிக்கைஉள்ள பெண்களைப் பார்ப்பது அபூர்வம்!''

டாக்டர்பூஷணம்வேகமாக உள்ளே வந்தார். அவர் முகத்தில் கவலை படர்ந்திருந்தது.

''அங்கேயும் வரல்லியாம். என்னை உடனே வரச் சொல்கிறார்.. நாங்க போய் பார்த்திட்டு வரோம். பேஷ




ண்டை நீங்க பாத்துக்கமுடியுமில்லே'' என்றார்.

''போய்வாங்க.. ஐ வில் டேக் கேர்'' என்றார் டாக்டர் மாத்ருபூதம்.

ராஜ் அலட்சியமாக ஸ்டீயரிங்கை ஒடித்து வாகனக் கூட்டத்தில் இடுக்குகளில் புகுந்து மீண்டான். கூடவே வழி நெடுக ஸ்டெல்லாவை ஒரு மாதிரியான ஆங்கில பாஷையில் திட்டிக்கொண்டே வந்தான். நான்கெழுத்து கெட்ட வார்த்தைகள் தாராளமாகவே கலந்திருந்த அவன் பேச்சு தேவகிக்கு சுத்தமாகப் புரியவில்லை.

'ஸ்டெல்லாவின் மடத்தனத்தால் போலீஸ் வரை விஷயம் போய் விட்டது, பிஸினஸே கெட்டு விட்டது'' என்று நாலைந்து முறை சொன்னது மட்டும் தேவகிக்குப் புரிந்தது.

பூந்தமல்லி ஹைரோடு வந்ததும், காரின் வேகம் கூடியது. ஒரு சந்தில் புகுந்து காம்பவுண்டு சுவருக்குப் பின்னால் இருந்த ஒரு தாழ்வானவீட்டு வாசலில் நின்றது.

''க்விக்.. பாக் அப் எவ்ரிதிங்!'' என்று ராஜ் உத்தரவிட்டான். ஸ்டெல்லா இறங்கி, தேவகி இறங்குவதற்கு முன் ஸீட்டைத் தூக்கிப் பிடித்தாள். அந்தக் காருக்கு இரண்டே கதவுகள் தான்.

''லெட் ஹர் ஸ்டே இன் தி கார். சீக்கிரம்..'' என்றான் ராஜ்.

''தேவகி... கார்லேயே இருங்க. அஞ்சு நிமிஷத்திலே வந்திடறேன்.'' என்று ஸ்டெல்லா சொல்லி விட்டு அவனுடன் உள்ளே போனாள்.

தேவகி பின்ஸீட்டிலேயே தலையை ஸீட்டின் விளிம்பில் வைத்துக்கண்களை மூடிக் கொண்டாள்.

இரவு சரியாகத் தூக்கம் இல்லாதது. காலையில் காப்பி மட்டும் சாப்பிட்டு விட்டு வெளியே வந்து இவ்வளவு தூரம் அலைந்தது எல்லாம் அவளை சோர்வுறச் செய்திருந்தன. கொஞ்ச நேரம் தூங்கினால் தேவலை என்று உடம்பு கெஞ்சியது.

கூடவே இதுவரை எடுத்துக் கொண்ட பிரயாசைகள் வீண்போகவில்லை என்ற திருப்தியும் இருந்தது. விஷ மருந்தின் பெயர் தெரிந்து விட்டது. ஸ்டெல்லாவிடம் அதன் ஸாம்பிளை வாங்கிக் கொண்டு விட்டால் தேவ்வின் உடம்பு குணமாகிவிடும் என்ற நம்பிக்கை மனதில் நிறைந்திருந்தது. நிமிடங்கள் கரைந்துகொண்டிருந்தன.

தேவகி கண்ணாடி வழியாக வீட்டுக்குள் பார்த்தாள். கதவு மூடியிருந்தது. இறங்கிப்போய்ப் பார்க்கலாமா?

ஆனால் அவள் கூட வருவதை ராஜ் விரும்பவில்லை. இங்கேயே இருக்க வேண்டியதுதான்.

தேவகி மீண்டும் கண்களை மூடிக் கொண்டாள்.

''மாடம், மாடம்'' என்று குரல் கேட்டு தேவகி கண் திறந்து பார்த்தாள்.

''டீ மாடம்.. ஸ்டெல்லா அனுப்பிச்சுது!'' வெளியே கறுத்த முகம் வெள்ளை முடி. இரட்டை நாடி., உடம்பைச் சுற்றிய தொள தொளவென்ற கவுன். இந்தத் தோற்றத்தில் ஒரு பணிப் பெண் நின்று கொண்டிருந்தாள். ஜன்

னல் வழியாக சாஸரில் வைத்த ஒரு டீ கோப்பையை நீட்டினுள்.

தேவகி தயக்கத்துடன் வாங்கிக் கொண்டாள். உள்ளே கூப்பிட்டுத் தராமல் காரிலேயே உட்காரவைத்து டீ அனுப்பி யிருக்கிருளே என்று நினைத்துக் கொண்டாள்.

அப்போது அந்த டீ அவளுக்குத் தேவையாக இருந்தது. ரசித்து உறிஞ்சி சாப்பிட்டாள்.

''தேங்ஸ்!'' என்று கோப்பையை திருப்பிக் கொடுத்தாள்.

''ஸ்டெல்லா வர நேரமாகுமா?''

''எனக்குத் தெரியாது மேடம்!'' என்று சொல்லியபடி பணிப்பெண் விருட்டென்று திரும்பி உள்ளேசென்று விட்டாள்.

டீ புத்துணர்வு தருவதற்குப் பதிலாக தேவகியை மீண்டும் உறக்கத்தில் தள்ளியது. இமைகள் கனத்தன. மூடிக் கொண்டன.

கொஞ்சம் கொஞ்சமாக சூழ்நிலை மங்கி அவள் ஆழ்ந்து உறங்கிப் போனுள்.

பத்து நிமிடங்கள் கழித்து ராஜ் ஒரு பெரிய அட்டைப் பெட்டியைத் தூக்கிக்கொண்டு வெளியே வந்தான். டிக்கியைத் திறந்து உள்ளே வைத்து மூடினுன்.

காருக்குள் எட்டிப் பார்த்தான். தேவகி தூங்குவது கண்டு, ''குட்!'' என்ருன்.

பிறகு உள்ளே சென்று ஸ்டெல்லாவைக் கைத்தாங்கலாகப் பிடித்து அழைத்து வந்தான்.

ஸ்டெல்லாவின் கண்கள் பள பளத்தன. கிறங்கின.

''த் ஸ்டஃப் வாஸ் கிரேட் ராஜ்!'' என்று சொல்லிச் சிரித்தாள். அவள் சிரிப்பில் பைத்தியம் தெரிந்தது. போதை தெரிந்தது.

''ஹெள இஸ் அவர் ஹிரோயின்? தூங்கிப் போச்சா... பாவம்!'' என்று தேவகியைப் பார்த்து மறுபடியும் சிரித்தாள்.

ராஜ் ஸ்டெல்லாவை முன் ஸீட்டில் அமர்த்திக் கதவை மூடினுன்.

ராஜ் காரில் ஏற முற்பட்ட போது, குறுக்கே வந்து நின்ருர் ஒரு மீசைக்காரர்.

''லாட்டரி டிக்கெட்ஸ் சார்... ஹரியாளு, ராஜஸ்தான், தமிழ்நாடு சார். 10 லட்சம் சார். இன்னிக்கு குலுக்கல் சார்.'' லாட்டரி டிக்கெட்டுகளை நீட்டினுன்.

''கெட் அவுட் ஆஃப்தி வே மேன்... உன் லாட்டரி டிக்கெட் ஒண்ணும்.. வேணும்!'' என்று கடுமையாக மறுத்து விட்டு. ராஜ் காரைக் கிளப்பி வேகமாகச் செலுத்தினுன்.

''வேர் ஆர் வி கோயிங் ராஜ்?'' என்று ஸ்டெல்லா குழைந்தாள்.

''சும்மா கேள்வி போடாம் நான் கூட்டிப் போற எடத்துக்கு வா.....'' என்று எரிந்து விழுந்தான் ராஜ்.

''தேவகியை அவங்க வீட்லே விடணும்!''

''ஷட் அப்! எத்தனை வாட்டிசொல்றது. இவ நம்ம ஆளா மாறுகிறவரைக்கும் வெளியே உடக் கூடாது. ஷி நோஸ் டு மச்!'' என்ருன் ராஜ்.

சாலைகள் மாறின. தொலைவிலேயே அந்த சிவப்பு வெள்ளை ஹெரால்ட் கார் தனித்துத் தெரிந்தாலும் பின்னே மோட்டார் சைக்கிளில் தொடர்ந்த சி.ஐ.டி. அதிகாரியிஞல் பிடிக்க முடியவில்லை. நாலைந்து திருப்பத்திற்குப் பிறகு அது காணமற் போயிற்று.

—தொடரும்



## வாசகர் பதில்

# சரியே... மிகச் சரியே...!

'கல்லானாலும் கணவன், புல்லானாலும் புருஷன்' என்று கூறும் அதே நேரத்தில் 'கணவனே கண்கண்ட தெய்வம்' என்கிறார்கள். இப்படி தெய்வத்திற்கு ஈடாக ஒப்பிடும் கணவனைக் கல்லுக்கும் புல்லுக்கும் உதாரணம் காட்டியிருப்பது சரிதானா?'' என்ற பல்லாவரம் கே. லோகநாதனின் கேள்விக்கு வாசகர் அளித்த பதில்களில் தேர்ந்தெடுக்கப்பட்டவை இங்கே பிரசுரிக்கப்படுகின்றன.

-ஆசிரியர்



## ரூ. 10 பரிசு பெற்ற பதில

பண்டை நாளில் வீரர்கள் போர் செய்து புண்பட்டு இறந்துபோவாராயின், அவர்களுடைய பெயரையும் அவர் பெற்ற பெருமைகளையும் ஒரு கல்லில் எழுதி, அதை நீராட்டிப் பல பேர் செல்லக்கூடிய வழிகளிலும் ஆற்றங்கரைகளிலும் நிறுத்தி வைப்பது வழக்கம். அந்தக் கல்லை கல் நின்ற வீரனுடைய மனைவி நீராட்டி நெல்லும் பூவும் சொரிந்து அதைத் தன் கணவனாகவே எண்ணி வழிபடுவாள். இதை ''ஒலிமென் கூந்தல் ஒண்ணுதல் அரிவை நடுகல் தொழுது பரவும்'' எனப் புறநானூறு முதலிய சங்க நூல்கள் கூறுகின்றன. இது பற்றியே கல்லென்றாலும் கணவன் என்ற பழமொழி உண்டாயிற்று. மேலும் கொல்லைகளிலும் வயல்களிலும் கதிர் முற்றி வரும் பயிர்களுக்குக் காவலாகப் புல்லும் வைக்கோலும் கொண்டு ஆள் போல உருவம் செய்து வயல் வரப்புகளில் நிறுத்துவது வழக்கம். அதனைப் புல்லாள் என்பர். அதனிடத்தில் வீரச்செய்கை ஒன்றும் இல்லையாயினும் தொலைவில் வருபவர்க்கும்- இரவில் வருபவர்க்கும் ஆள் போலத் தோன்றி ஓரளவு காவலாவது பற்றி அப்புல்லாளை நிறுத்தி வைப்பர். இவ்வாறே போர்க்குரிய ஆண்மையில்லாமல் வழிப்பறி செய்து வாழ்பவரையும் புல்லாள் என்பது வழக்கம். இதைச் சான்றோர் ''புல்லாள் வழங்கும் புள்ளலை வைப்பின் புலம்'' என்று பதிற்றுப் பத்தில் குறித்திருப்பதைக் காணலாம். தன்னைக் கொண்டவன் நேரிய வீரமில்லாத புல்லாளாயினும் அவனையும் கணவனாகக் கொண்டு ஒழுக வேண்டியது பெண்கட்கு வகுத்துரைக்கும் முறை. இம்முறை இரண்டையும் சேரத்து ''கல்லென்றாலும் கணவன், புல்லென்றாலும் புருடன்'' என்ற பழமொழி தோன்றி வழங்கி வருவதாயிற்று.

குறிப்பு: ''ஏட்டில் இல்லாத இலக்கியம்- பழமொழிகள்'' என்ற தலைப்பில் 16-1-1949இல் திருச்சி வானொலியில் ஒளவை சு. துரைசாமிப்பிள்ளை அவர்கள் பேசியது. மேலும் இது செந்தமிழ்ச் செல்வி பிப்ரவரி 1949 இதழில் வெளிவந்துள்ளது)

மேற் கூறிய விளக்கத்தைக் கொண்டு பார்க்குமிடத்துக் கணவனைக் கல்லுக்கும் புல்லுக்கும் உதாரணம் காட்டியிருப்பது சரியே.

சேலம் — எம். எம்.தேவராஜன்



**உள்ளத்தில் அவனே உள்ளான்**

கல்லும் புல்லும் காலில் மிதிபடும் அதே நேரத்தில் கல் தெய்வமாக உருவெடுப்பதையும், அருகம் புல் தெய்வத்திற்கு அர்ச்சிக்கப்படுவதையும் பார்க்கிறோம். அது போல் தான் மனைவியினால் சில நேரங்களில் கணவன்மார் அவதிப்படுவதற்கு ஆளான போதிலும், மனைவியானவள் உள்ளத்தில் கணவன் தெய்வமாக மதிக்கப்

# 'மாடல்' கமலா



''ஒருமுறை, சென்னை மருத்துவக் கல்லூரியில் மாடலிங்கிற்காக ஸ்டேஜில் போஸ் கொடுத்துக் கொண்டிருக்கறப்ப, என்னோட கால், ஸ்டேஜ்ல இருக்கற இடை வெளியில சிக்கிண்டிருச்சு. காலை வெளியே எடுகக வரலே. அதனாலே, நின்ன இடத்திலேருந்தே, பல விதமா, போஸ் பண்ணிண்டு இருந்தேன். மனசெல்லாம், காலை எப்படி வெளியே எடுக்கறதுங்கற ஆராய்ச்சியிலேயே இருந்தது. இதுக்குள்ளே, 'நேரமாகிவிடவே. வேற 'மாடல்ஸ்' என் முன்னலெ வந்து, போஸ் பண்ணிட்டு, போக ஆரம்பிச்சாங்க. கூட்டத்திலே சல சலப்பு ஏற்பட ஆரம்பிச்சுது. என்னோட கஷ்டத்தை உணர்ந்த ரெண்டு மூணு பாய்ஸ், உடனே, ஸ்கிரீனை எறக்கிட்டு, என்னோட கால, வெளிலே எடுக்க 'ஹெல்ப்' பண்ணுங்க. அப்புறம்தான், எனக்கு உயிரே வந்தது..''

மாடலிங்கில், தனக்கேற்பட்ட விந்தையான நிகழ்ச்சியை வருணிப்பவர், எதிராஜ் கல்லூரியில் பி.ஏ. முடித்துவிட்டு, தற்போது, டிப்ளமா இன் டிராவலிங் படித்து வரும் குமாரி கமலா.

மாடலிங்கைத் தவிர, டிபேட்டிங், நாடகங்கள், பரத நாட்டியம் ஜஸ்ட் எமினிட், டம்ப் சராட்ஸ், மோனே ஆக்டிங், லிமரிக் ரைட்டிங் ஆகிய பல துறைகளில், கிண்டி எஞ்சினியரிங் கல்லூரி, ஏ. எம். கல்லூரி, லயோலாக் கல்லூரி, ஸ்டெல்லா மேரிக் கல்லூரி, தியாகராயா கல்லூரி ஆகிய பல கல்லூரிகளில் நடந்த, அனைத்துக் கல்லூரிப் போட்டிகளில் முதற் பரிசு பெற்றுள்ளார். '81-82ம் ஆண்டு, இவருடைய பலதுறைத் திறமையின் காரணமாக, ''அவுட்ஸ்டாண்டிங் ஸ்டூடண்ட்ஸ் அவார்ட்'' வாங்கினார். நன்னடத்தைக்காக, 'சங்கராச்சாரியிடமிருந்து பரிசு வாங்கியுள்ள இவர், 'டிபேட்டிங்கில்' 'சேவா சக்ரா' பரிசு பெற்றுள்ளார். டி. வி. இளம் தென்றலில்



'ஜாம்', பரதநாட்டிய நிகழ்ச்சிகள் அளித்துள்ளார். எதிராஜ் கல்லூரியின், கலை, கலாச்சார செயலராக பொறுப்பேற்று, எம். எம். ஸி. 'ராந்தேவூ' விழாவில், 'அனைத்துக் கல்லூரி பியூட்டி க்வீன்'க தேர்ந்தெடுக்கப்பட்டார். ஜர்னலிஸத்தில், டிப்ளமா வாங்கி, பல ஆங்கிலப் பத்திரிகைகளுக்கு, சிறு கதைகள் எழுதி வருகிறார். வாலிபால் ப்ளேயரான இவர் செய்யும் ஸோஷியல் ஸர்வீஸ்: உடல் ஊனமுற்ற குழந்தைகளுக்கு, ஆங்கிலக் கல்வி போதிப்பது. எல்லாத் துறைகளிலும்' இவர் அதிகம் விரும்புவது 'மாடலிங்'தான்.

''பலர் நினைப்பதைப் போல, 'மாடலிங்' மட்டமான துறை அல்ல. அதில் ஈடுபடும் அனைவரும் கண்ணியமானவர்களே. இப்படி இருந்தும், அதில் கலந்துகொள்ள பல பெண்கள் முன்வராததின் காரணம் புரியவில்லை. கோ-ஆப்டெக்ஸ் ஸுக்காக, பல்முறை மாடலிங் செய்துள்ளேன். என்னுடைய அடுத்த மாடலிங் நிகழ்ச்சி, 'சோழா' ஓட்டலில், இன்னும் சில நாட்களில் நடக்க இருக்கிறது.

**பேட்டி: வாமாலி**



# ஏஞ்சல் டஸ்ட்

இ.கஸ்தூரிரங்கன்

## 17. ராஜ்

உஸ்மான் அண்ணாவைச் சந்திக்கும் சாலை முனையில் டிராபிக் போலீஸின் சிக்னலுக்குப் பணிந்து காரை நிறுத்தினான் ராஜ்.

இதுவரை சந்து பொந்துகளில் எல்லாம் புகுந்து மீண்டு போலீஸைத் தவிர்த்து வந்து விட்டான். பின்னால் தேவகி வசதியாக சீட்டில் படுத்துக் கொண்டு விட்டாள்.

கிறக்கத்திலேயே இருந்து ஸ்டெல்லா எழுந்து விழித்து, 'இறங்கலாமா?' என்று கேட்டாள்.

''இன்னும் இருக்கு போக வேண்டிய இடம்!'' என்றான் ராஜ்.

''வேர் ஆர் யூ கோயிங் ராஜ்?'' என்று ஐந்தாவது தடவையாகக் கேட்டாள்.

''போனா தெரிஞ்சுக்குவே! இப்ப சும்மா தொணதொணக்காம வா!'' என்று எரிந்து விழுந்தான் அவன்.

''யு ஆர் ஆங்ரி வித் மீ?'' என்று சிணுங்கினாள் ஸ்டெல்லா. ''நான் இறங்கப் போறேன்'' என்று கதவை திறக்க முற்பட்டாள்.

''டோன்ட் பி ஸில்லி ஸ்டெல்லா; இப்ப நாம பாக்டரிக்குப் போறோம். தொரை வில் பி வெயிட்டிங் பார் அஸ்!''

''பாக்டரி? தொரை? எங்கே இருக்கு?''

பின்னால் கார், பஸ், ஸ்கூட்டர்கள் அலறின. உயரத்தில் பீப்பாய்மேல் நின்றிருந்த ஸார்ஜெண்ட், ''போய்யா போய்யா!'' என்று படபடத்தார்.

ராஜ் காரை விசையாகக் கிளப்பி வலது பக்கம் அண்ணாசாலையில் திருப்பினான்.

''லெட் மீ கான்ஸன்ட்ரேட் ஆன் டிரைவிங் ஸ்டெல்லா. நீ தூங்கு. இடம் வந்ததும் எழுப்பறேன்'' என்றான் ராஜ்.

ஸ்டெல்லா மீண்டும் சிணுங்கிக் கொண்டே கண்களை மூடிக் கொண்டாள்.

ராஜ் நெற்றி வியர்வையை கைக்குட்டையால் ஒற்றிக் கொண்டான். பலநாள் திருடன் ஒருநாள் பிடிபடுவான்! அவனது ஐந்தாண்டு கால அமோகமான பிஸினெஸ், அருகே குழந்தை மாதிரி தூங்கிக் கொண்டிருக்கும் இந்த அழகிய முட்டாளால், ஒரே இரவில் சரிந்து போய் விட்டது. லாயர் என்று ஊருக்குச்

சொல்லிக் கொண்டு, ஆர்மீனியன தெருவில் ஒரு கன்ஸல்டிங் ரூம் வைத் வைத்திருந்தாலும், அவனது முக்கிய பிழைப்பு போதை மருந்து கடத்து வதுதான். காஷ்மீரிலிருந்தும், நேபாளத்திலிருந்தும் ஹஷீஷ் கடத்தி வந்து தென் பிராந்தியம் முழுதும் விநியோகித்து வந்தான். ஸ்டெல்லா ம்யூஸிக் ஷாப் போன்ற நூற்றுக் கணக்கான ரகசிய விநியோக கேந்திரங்களை ஏற்படுத்தியிருந்தான். வெளிநாடுகளுக்கும் வாகான கடத்தலுக்கு ஏற்பாடு செய்திருந்தான். தினம் ஆயிரம் ரூபாய் வரை லாபம் கிடைத்து வந்தது.

ஹஷீஷ் புகைப்பவர்கள் அதனுடன் திருப்திப் படுவதில்லை.

ஓபியம் இன்னொரு வகை போதை சரக்கு. இந்தச் செடி மத்திய பிரதேசத்தில் ஏராளமாக விளைகிறது. இதிலிருந்து தயாரிக்கப்படும் போதை மருந்து ஹெராயின்.

இந்தச் சரக்கு எளிதில் கிடைப்பதில்லை. இந்தியாவில் கடுமையான அரசுக் கண்காணிப்பினுல் தயாரிப்பு இல்லை. ஓபியத்திலிருந்து மார்ஃபைன் தயாரித்து வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றன. அங்கே ஹெராயின் தயாரிக்கப்பட்டு கடத்தல் காரர்ககள் மூலம் திரும்பவும் இந்தியாவுக்கு வருகிறது.

இதை போதைச்சரக்கு அடிமைகள் ஊசிமூலம் கண்ட இடத்தில் குத்திக் கொண்டு நேரடியாக ரத்தத்தில் ஏற்றிக் கொண்டனர். உண்மையில் போதை மருந்து வியாபாரிகள் இந்த மருந்தை இலவசமாக முதலில் வழங்குவர். முதல் தடவையிலேயே அடிமைப்படுத்தும் சரக்கு இது. ஒரு முறை பழக்கப்பட்டு விட்டவர் அது இல்லாமல் இருக்க முடியாது. என்ன விலை கொடுத்தும் அதைப் பெற்றுக் கொள்ள முயல்வார்கள். ஹெராயினுக்கு அடிமையானவர்கள் அதை தருவித்துக் கொடுப்பவருக்கும் அடிமையாகி விடுவர்.

எல் எஸ் டி எனப்படும் D-Lyserg:c Acid Dythelamide என்பதும் வெளி நாட்டுச் சரக்குதான். பிரமிட்ஸ், மைக்ரோ டாட்ஸ், எனப்படும் சிறு மாத்திரைகளாகவும் கிடைக்கும். நாக்கு நுனியில் வைத்தால் கரைந்து போகும்.

மனதில் கிளர்ச்சி ஏற்படும். வண்ணக் கனவுகள் வரும். உலகமே காலடியில் இருப்பது போன்ற உணர்வு வரும். சிலருக்குப் பயங்கர சொப்பன அனுபவங்கள் வரலாம். நிறையப் பசிக்கும். அல்லது ஒன்றும் வேண்டியிருக்காது.

எல்எஸ்டி, ஜாதியைச் சேர்ந்தவை மெஸ்கலின், பெதடீன் ஆகியவை. எல்லாம் விலை அதிகம். கிடைப்பது கஷ்டம்.

ராஜ் பெரும்பாலும் ஹஷீஷ், எல் எஸ்டி இவற்றில் மட்டுமே ஈடுபட்டிருந்தான். அபூர்வமாக ஹெராயின் தருவித்துத்தருவதுண்டு. சிலர் போதை மருந்துப் பழக்கத்தை நிறுத்தி விட முனையும் போது சரக்கு சப்ளை செய்பவர்களைக் காட்டிக் கொடுக்கலாம். அந்தக் கட்டத்தில் ஹெராயினை ரத்தத்தில் ஏற்றி விட்டால் சாகும் வரை ரகசியத்தைக் காப்பாற்றுவார்கள். திரும்பத் திரும்பக் காலடியில் வந்து விழுவார்கள். உடல் பொருள் ஆவி அத்தனையும் தருவதற்கு முன் வருவார்கள்.

ஸ்டெல்லாவையும் தேவகியையும் அடிமைப்படுத்தி வைக்க இதை விடச் சிறந்த வேறு வழியில்லை. ஆனல் நிலைமை கொஞ்சம் கை மீறிப் போய் விட்டது. போலீஸ் தேட ஆரம்பித்து

## சிறு கதைப் போட்டி

**வி**த்தியாசமான தலைப்புக்கள் உள்ள சிறுகதைப் போட்டிக்கு மொத்தம் 1277 கதைகள் வந்துள்ளன. 'விதைத்து வேறு முளைத்தது வேறு' தலைப்பை அதிகபட்சம் எழுத்தாளர்கள் (267) தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். 'வட்டங்கள், சதுரங்கள், முக்கோணங்கள்' 81 பேரிடம்தான் கற்பனையைத் தூண்டியுள்ளது. மூவர் அடங்கிய நடுவர் குழு கதைகளைப் பரிசீலித்து வருகிறது. இது பற்றிய அறிவிப்பு முடிவுகளோடு விரைவில் வெளியாகும்.

ஆசிரியர்.

விடும். அதுவரை இரண்டு பெண்களையும் மறைத்து வைக்க வேண்டும்.

அதற்கு ஃபாக்டரி தான் சிறந்த இடம். முதலாளி தொரை ஆக வேண்டியதைக் கவனித்துக்கொள்வான்.

தொரையை நினைத்துப் பயந்தான் ராஜ். ஸ்டெல்லாவை வறுத்துஎடுத்து விடுவான். இனிமேல் அவளை வெளியே விடுவதே சந்தேகம்.

தேவகியை என்ன செய்வான்? ராஜ் திரும்பிப் பார்த்தான். அம்பு பட்ட மான்போல்சுருண்டு படுத்திருந்தாள். பாவம் அழகான பெண். டீயில் அரை மாத்திரை மாண்ட் ராக்ஸைப் போட்டு அனுப்பியிருந்தான். அதற்கே இப்படி ஆகிவிட்டாள்.

இரண்டு மணி நேரம் தூங்குவாள். தூங்கி எழுந்தவுடனே ஒரு ஹெராயின் ஷாட். அவனே தருவான்.

இதுவரை ராஜ் பெண்களால் அதிகம் ஈர்க்கப்பட்டவனல்ல. விளையாட்டுப் பொம்மைகளாகவே அவர்களைக் கருதினன். ஒன்றை விளையாடிச் சலித்த போது மாற்றினன்.

தேவகியின் பால் அவனுக்குப் புது விதமான உணர்ச்சி எழுந்தது. அவ்வளவு தூய்மையான அழகை அவன் இதுவரை சந்தித்ததில்லை. இவள் எனக்கு மட்டுமே சொந்தமாக வேண்டும். ஏராளமான பணம் சேர்த்தாகி விட்டது. பிஸினஸை மூடி விட்டு நேபாளம், ஸ்ரீலங்கா, முடிந்தால் அமெரிக்கா என்று கம்பி நீட்டி விடலாம்.

தேவகி இருந்தால் போதும்.

ஒழுக்கமான கௌரவமான வாழ்க்கையை ஆரம்பிக்கலாம்.

ஆனல் தொரை என்ன சொல்லப் போகிருனே? தொரைதான் அவனுடைய பைனுன்ஸியர்: எஜமானன். இக்கட்டில் மாட்டும் போது தப்பிக்க வைக்கக்கூடிய செல்வாக்குள்ளவன் அவன்தான்.

தேவகியை எனக்கு தந்து விடு என்று கேட்டால் மறுக்க மாட்டான். அவனுக்காக எத்தனை செய்திருக்கிருன். எவ்வளவு பணம், எத்தனைப் பெண்கள்!

சென்ற ஆண்டுதான் ஏஞ்சல் டஸ்ட் அறிமுகத்திற்கு வந்தது. வேறு சரக்கு இல்லாவிட்டால் இதுவே போதும். எல்லா விதப் பெயர்களிலும் அதை விற்கலாம். போதை அடிமைகள் அதை விரும்பினர்கள்.

அதை இங்கேயே தயாரிக்கலாம் என்று தொரைதான் யோசனை கூறினன். அதற்கான பார்மூலாவையும். கெமிக்கலையும் அவனே தருவித்துக் கொடுத்தான்.

திருவான்மியூரில் புதிதாக எழும்பிக் கொண்டிருந்த தொழிற்பேட்டையில் சுலபமாக இடம் பிடித்துக் கொடுத்தவன் அவனே. ட்விலைட் பார்மாஸூடிகல்ஸ் இரண்டே மாதத்தில் செயல்பட துவங்கி விட்டது. புரோட்டீன் டானிக் தயாரிப்புக்கு லைசென்ஸ். ஆனல் முக்கியமாக ஏஞ்சல் டஸ்ட் தான் தயாரிக்கப் பட்டது.

நிழலான நடவடிக்கைகளுக்குஏற்ற விதத்தில்தான் அந்தக் கட்டடம் ஆளுயரம் வளர்ந்திருந்த கோரைப் புதர்களுக்குப் பின்னல் பதுங்கி இருந்தது. முகப்பில் ''ட்விலைட் ஃபார்மாஸூடிகல்ஸ்'' என்று மங்கிப்போன ஆங்கில எழுத்துக்களைக் கொண்ட போர்டு. கொஞ்சம் ஒரு பக்கம் சாய்ந்திருந்தது.

முள்வேலியை இணைத்த ஒருக்களித்த மரகேட். ராஜ் காரின் பம்பரால் மோதித் திறந்து குறுகலான பாட்டையில் செலுத்தினன்.

முன் தாழ்வாரத்தில் படிகளைஒட்டி கிறீச்சென்று பிரேக் போட்டு நிறுத்தினன்.

''ஸ்டெல்லா வேக்அப்! கெட் டௌன்'' என்றபடி தோளைப் பற்றி உலுக்கினன்.

ஸ்டெல்லா கண் விழித்து,'ஆஹங்' என்றள்.

''இறங்கு. கெட் தட் கர்ல்ஆல்ஸோ இன்ஸைட். க்விக்!'' என்று சொல்லி விட்டு தாழ்வாரம் ஏறி உள்ளே சென்றன்.

வானவில்களே படிகளாக மேலே மேலே ஏறிச் சென்றுகொண்டிருந்தாள் தேவகி. உச்சிப் படிக்கு அப்பால் ஒன்றுமில்லை. ஒரே இருட்டு. அதள பாதாளத்திலிருந்து, 'தேவகி, தேவகி' என்று ஓலம் கேட்டது. தேவ்வின் குரல்போல் ஒலித்தது.

''வந்துவிட்டேன் தேவ்'' என்று குரல் தந்து அவள் இருட்டில் ஓடினள்.

ஒரு பெண்ணை பலவந்தமாக முத்தமிட்டதாக ஒரு வாலிபனுக்கு பத்து டாலர் அபராதம் விதித்தார் நீதிபதி. அந்தப் பெண்ணின் முகத்தைப் பார்த்தார். மேலும் பத்து டாலர் அபராதம் விதித்தார். ஏன் தெரியுமா? அவன் குடி போதையில் இருந்திருக்க வேண்டுமென்று!

லட்சுமிசிவம்

பள்ளத்தில் தலைக்குப்புற விழப்போனவளை மெலிதான கரம் ஒன்று தடுத்தது.

''தேவகி, தேவகி! கெட் அப்'' என்று ஸ்டெல்லா அவளை அசைத்து எழுப்பிக்கொண்டிருந்தாள். ஹெரால்ட் காரின் பின்ஸீட்டில் தூங்கிவிட்டதை உணர்ந்தாள். பயந்தாள்.

''வேர் ஆர் வீ? ஸ்டெல்லா! இது என்ன இடம்? எதற்கு இங்கே கூட்டி வந்தே?''

''நான் கூட்டி வரலை. ராஜ்தான் இங்கே கொண்டு வந்திட்டான். உள்ளே போயிருக்கிறான். போகலாம், இறங்கு'' என்றாள் ஸ்டெல்லா.

''யூ பிராமிஸ்ட் டு கிவ் மீ தட் ஸாம்பிள். அதை எடுத்து வா. நான் தனியா போய்க்கொள்வேன்.''

''வண்டியிலே பின்னாலே இருக்கு தேவகி. உள்ளே வா!'' என்று அழைத்தாள் ஸ்டெல்லா.

''ஹலோ ஸ்டெல்லா பேபி. எங்கே இவ்வளவு தூரம்?'' என்று குரல் கேட்டு இருவரும் திரும்பிப் பார்த்தனர்.

தாழ்வாரத்தில் உயரமாக தடியாக பொம்மென்று தலை கிராப்புடன் நின்றான் அவன்.

''சின்னதுரை! யூ ஸ்கௌண்ட்ரல்! வாட் ஆர் யூ டுயிங் ஹியர்?'' என்றாள் ஸ்டெல்லா. படியேறியவள் தடுக்கி விழுந்தாள்.

சின்னதுரை வந்து அவளைப் பிடித்துக்கொண்டான்.

தேவகி திக்பிரமையுடன் அவனைப் பார்த்தாள்.

மந்திரியின் பிள்ளை சின்னதுரை இவன்தான் போனில் கேட்ட அதே கரகரப்பான குரல்.

''உன் பிரெண்டு அங்கேயே உக்காந்திட்டாங்களே. இறங்கிவாங்க சிஸ்டர்'' என்று கனிவாக அழைத்தான் சின்னதுரை.

தேவகி இறங்கினாள். மருட்சியுடன் சுற்றுமுற்றும் பார்த்தாள்.

சினிமாவில் காணும் கொடிய வில்லனின் பாசறைக்குக் கடத்தப்பட்டு வந்தவளைப் போல - உணர்ந்தாள்.

''பயப்படாதே தேவகி. உள்ளே வாங்க. ஐ'ம் வித் யூ!'' என்றாள் ஸ்டெல்லா.

ராஜ் தோன்றினான்.

''தொர, ரூம் தயார் பண்ணிட்டேன். விருந்தாளி இரண்டு பேரும் சௌகரியமா எத்தனை நாள் வேணு தங்கலாம்!'' என்றான்.

''குட். லெட் அஸ் கோ. பிரெட், பட்டர் ஜாம் எதெது இருக்கோ மேஜை மேலே எடுத்து வை. பாவம், இரண்டு பெண்களும் ரொம்பப் பசியோட இருப்பாங்க!'' என்றான் சின்னதுரை.

ஸ்டெல்லா தேவகியின் கையைப் பிடித்து அழைத்தாள். தேவகி பற்றிய கையை உதறி.

''நான் வரலை. யூ ஆர் ஆல் க்ரூக்ஸ்! நான் போறேன்!'' என்று கத்தியபடி திரும்பினாள்.

ராஜ் முன்னே பாய்ந்து வழியை மறித்தான்.

''பயப்படாதீங்க ஸிஸ்டர்! நான் தேவ்வின் ஃப்ரெண்டு. நீங்க எனக்கு ரொம்ப வேண்டியவங்களாகிவிட்டீங்க. நீங்க் கேட்டதை கொடுத்து அனுப்பத்தான் வரவழைச்சேன். இல்லையா ஸ்டெல்லா?'' என்று கண் சிமிட்டினான் சின்னதுரை.

''அவளை சீக்கிரம் வீட்லே கொண்டு விட்டுடு தொரை! இத்தனை நேரம் எல்லாரும் தேட ஆரம்பிச்சிருப்பாங்க!'' என்றாள் ஸ்டெல்லா.

''ஆப்கோர்ஸ். முதலில் அவர்களோடு கொஞ்சம் பேசணும். அப்புறம் நானே கொண்டு விட்டுர்றேன். கம் ஆன். டோன்ட் வேஸ்ட் டைம்!'' என்றான் சின்னதுரை.

தேவகி தயக்கத்துடன் ஸ்டெல்லாவை ஒட்டியபடி உள்ளே சென்றாள். கதவு தாழ்ப்பாள் கிளிக்கென்று பூட்டிக்கொண்டது. (தொடரும்)

# சந்திப்பு... கே.பாலசந்தர்

தீபாவளியன்று காலே, டைரக்டர் பாலச்சந்தர் வீட்டுக்குள் நுழையும் போது எதிரே அவரது வாழ்த்துக்களுடன் திரும்பிக் கொண்டிருந்தார் நடிகர் திலீப். வாழ்த்துச் செய்திகளைத் தாங்கி தொடர்ச்சியாய் ஃபோன் கால்கள் வந்து கொண்டிருக்க...... பிஸியாய்க் காணப்பட்டார் பாலச்சந்தர்.

''என்ன, 'அக்னி சாட்சி' படம் பாத்தீங்களா? புடிச்சிருக்கா?'' என்று கேட்டார் பாலச்சந்தர்.

''உங்களோட படங்களிலேயே ரொம்பப் புடிச்சது 'அவர்கள்'. இது 'அவர்களை'விட இம்ப்ரெஸ் பண்ணித்து.''

''நாலு வருஷம் முன்னுல எடுத்தது 'அவர்கள்.' இந்த நாலு வருஷத்துல கொஞ்சமாவது நான் வளர்ந்திருக்க மாட்டேனு? 'அக்னி சாட்சி' 'அவர்களை'விட நல்லாயிருந்ததுன்னு நான் வளர்ந்திருக்கேன்னு அர்த்தம்.''



''சிடி ஆடியன்ஸ் படத்தை நல்லா ரசிப்பாங்க. அதுல சந்தேகமேயில்லே. ஆனு படம் கமர்ஷியலா நல்லா போகுமான்னு ஒரு சந்தேகம் இருக்கு' என்றவுடன் இடைமறித்தார் பாலச்சந்தர்.

''அதைப்பத்தி நீங்க ஏன் கவலேப்படறீங்க? கவலேப்பட வேண்டியவன் நான். ரசிகர்கள்எங்கிட்டவித்யாசமா ஏதாவது எதிர்பார்க்கருங்க. பாலச்'தர் படம்னு நல்ல படம்னு எதிர் பார்த்து வர்றவங்களே ஸாடிஸ்ஃபை பண்ண வேண்டிய பொறுப்பு..ஆஸ் எ ஃபிலிம் டைரக்டர்...எனக்கு நிறைய இருக்கு. படம் ஓடுதா, ஓடலியாங்கறதை விட நல்ல படமா, இல்லியாங்கறதுலதான் என்னுடைய கவலேயும், எதிர்பார்ப்பும் அதிகம்.

''கமர்ஷியலா ஓடறதைப் பத்தி நீங்க ஏன் கவலேப்படணும்னு கேட்டீங்க. இந்த மாதிரி ஒரு படம் கமர்ஷியலா ஓடினுத்தானே, அடுத்து ஒரு எக்ஸ்பெரிமெண்ட் பண்ற வேகமும், தைரியமும் உங்களுக்கு அதிகமாகும்? அதை உத்தேசித்து நாங்க கவலேப்படறது நியாயமில்லேயா?'' என்று கேட்டபோது சிரித்தவாறே ஒப்புக் கொண்டார் பாலச்சந்தர்.

''வாஸ்தவம். 'அவர்கள்' படம் ரொம்ப சிரத்தையோட செஞ்சேன். படம் சரியா போகலேங்கறதுனுல 'அக்னி சாட்சி' அட்டெம்ப்ட் பண்ணும இருந்தேனு என்ன? ஒரு படத்தோட வெற்றி தோல்விகள் ஒரு கிரியேட்டிவ் டைரக்டரோட ஸ்பீடை குறைச்சுடறதில்லே. நல்ல படம் தரணும்கற தாகமும், வேகமும், எப்பவும் பாலச்சந்தருக்குள்ள இருக்கிற விஷயம். அதனுலதான் பதினேந்து வருஷமா இந்த இண்டஸ்ட்ரீயில நிலேச்சு நிக்க என்னுல முடிஞ்சிருக்கு'' என்ருர் பாலச்சந்தர்.

-உத்தமன்



# ஏஞ்சல் டஸ்ட்

கி. கஸ்தூரி ரங்கன்

## 18. ஸ்டெல்லா & சின்னதுரை

வெளியே இருந்து பார்க்கும்போது மகா நஷ்டத்தில் ஓடும் பாக்டரி மாதிரி தோன்றிய ட்விலேட் ஃபார்மாஸூடிகல்ஸ் உள்ளே ரொம்பவும் 'போஷ்' ஆக இருந்தது. நுரை மெத்தை சோபாக்கள் மூன்று இஞ்சு அழுந்தும் கார்பெட், கண்ணாடி அலமாரிகளில் கஜுராஹோ மாடல்கள் பெரிய ஜன்னலை ஒட்டிய ஸன் மைக்கா டைனிங் டேபிள்.

அதைச் சுற்றிலும் நால்வரும் உட்கார்ந்து கொண்டனர். தேவகி ஸ்டெல்லாவுடன் ஒட்டியபடி நாற்காலியில் உட்கார்ந்து கொண்டாள்.

மேஜையில் பளபளவென்று பீங்கான்கள் ஒளிர்ந்தன. அவற்றைச் சுற்றி பிரெட் ஸாண்ட்விச், வெண்ணெய், ஜாம், வெள்ளிக் கிண்ணத்தில் ஐஸ் கட்டிகளில் புதைந்த ஒரு பாட்டில். சிறிதும் பெரிதுமாக ஒயின் கிளாஸ்கள்

''ஷாம்பேய்ன்! நீங்க வர்றதா ராஜ் போன் பண்ணதும் இதை எடுத்துக்கிட்டு வந்தேன். கம் ஆன் லெட் அஸ் ஸெலிபிரேட்!'' சின்னதுரை பாட்டில் சார்க்கை 'ப்ளக்' என்று குதிக்க வைத்து நுரை வழிய வழிய மதுக் கோப்பைகளில் ஊற்றினான்.

''வாட் எ ஃபீஸ்ட் மேன்!'' என்று ஸ்டெல்லா ஒரு கிளாஸை எடுத்து மடக்கென்று குடித்தாள். இன்னொரு கையில் கேக்கை எடுத்து வாயில் திணித்து விழுங்கினாள்.

''கம் ஆன் தேவகி... கூச்சப் படாதே'' என்று முழங்கையால் தேவகியை இடித்தாள்.

''எனக்கு வேண்டாம். யூ வில் பாய்ஸன் மீ!'' என்று மறுத்தாள் தேவகி.

''பயப்படாதீங்க ஸிஸ்டர் நாங்க சாப்பிடறதைத் தான் உங்களுக்கும் தருகிறோம்'' என்றான் சின்னதுரை.

தேவகி அவனை வெறுப்புடன் பார்த்துவிட்டு முகத்தை திருப்பிக் கொண்டாள்.

ராஜ் சின்னதுரையை ஜாடையாகப் பார்த்தான்.

''ஓகே! உங்க இஷ்டம் நாங்களாவது ஃப்ரீயா சாப்பிடறோம். நீங்க அங்கே பெட் ரூம் இருக்கு பாத் அட்டாச்ட். போய் ரெஸ்ட் எடுத்துக்குங்க'' என்றான் சின்னதுரை.

''ஸ்டெல்லா.. நீ அந்த சாம்பிளைத் தந்தா இப்பவே போயிடறேன். ஐ டோண்ட் வாண்ட் டு ஸ்டே வித் தீஸ் க்ருக்ஸ்'' என்றாள் தேவகி உஷ்ணமாக.

''ஹஹா! அவ்ளோ சீக்கிரம் போயிட முடியாது. லிஸன் மிஸ் தேவகி, நீங்க இப்போ எங்களுடைய ஆள். எங்களோட கண்காணிப்பிலே பாதுகாப்பிலே தான் இனிமே இருக்க போறீங்க. ராஜ் உங்கள் வசதிகளை கவனிச்சுக்குவான்.''

''வாட் டு யூ மீன்!'' என்று வெடித்தாள் தேவகி. ''என்னை இங்கே சிறை வைக்கப் போறீங்களா? மிஸ்டர் சின்னதுரை ஐ'ம் வார்னிங் யூ...!''

''என்னம்மா ஒரேயடியா அலட்டிக்கிறீங்க! நான் என்ன சொல்லிட்டேன். கொஞ்ச நேரம் ரெஸ்ட் எடுத்துக்குங்க.. அப்புறம் உங்களை நானே டிராப் பண்ணிடறேன்.''

''நீ ஒண்ணும் என்னை அழைத்துப் போகவேணும் நானே போய்க்கிறேன்,''

தேவகி வேகமாக கதவுப் பக்கம் ஓடினாள். திறக்க முடியவில்லை.

''ஹாஹா!'' என்று சிரித்தான் சின்னதுரை. ''டேக் ஹர் டு பெட் ராஜ்!'' என்றான்.

துச்சாதனனின் சுறுசுறுப்புடன் ராஜ் பாய்ந்து சென்று தேவகியின் கையைப் பற்றினான்,

''டோன்ட் டச் மீ! ஐ வில் கில் யூ!'' புலியாகச் சீறினாள் தேவகி. ராஜ் விடவில்லை. அவளைக் கட்டிப் பிடிக்க முயன்றான்.

தேவகி பளாரென்று அவன் கன்னத்தில் அறைந்தாள். ராஜ் முரட்டுத் தனமாக அவள் தலையைப் பற்றி சுவரில் மோதினான்,

தேவகி அப்படியே சரிந்து விழுந்தாள்,



''யூ பாஸ்டர்ட்ஸ்! வாட் ஹாவ் யூ டன் டு ஹர்!'' என்று கிறீச்சிட்டபடி ஓடிவந்தாள் ஸ்டெல்லா.

ராஜ் புறங்கையால் அவளை அடித்தான். ஸ்டெல்லா தடுமாறியபடி உட்கார்ந்து விட்டாள்,

''லீவ் ஹர் அலோன் ராஜ்!'' என்று தானே எழுந்து வந்தான் சின்னதுரை,

ஸ்டெல்லா பயந்து பதுங்கினாள்.

''குட்., என்னுடைய குணம் தெரிஞ்சிருக்கு, வீணா முரண்டு பண்ணாதே!'' என்று அவளது தோள்களைப் பற்றித் தூக்கினான்.

''எங்களை விட்டுடு சின்னதுரை. உன் வழிக்கே வரமாட்டோம். ப்ளீஸ்' என்று கெஞ்சினாள் ஸ்டெல்லா.

''அதெப்படி! ரொம்ப நாள் எதிர்பார்த்து காத்திருந்த சான்ஸை விட்டுடுவனா. ஸ்டெல்லா, எத்தனை முறை உன்னை கெஞ்சியிருப்பேன்.. என்னைத் தூக்கி யெறிந்தே பேசினாய். அந்த நின் ாப்பூப் தேவ்பன் பின்னால் அலைந்தாய். இ[illegible]னிக்கு நீ என்னிடம் வந்து விட்டாய். யூ வில் ஆல்வேஸ் ஸ்டே வித் மீ!''

அவளை இறுக அணைத்துக்கொண்டான் முத்தமிட முயன்றான். ஸ்டெல்லா முகத்தைத் திருப்பிக்கொண்டாள்.

சின்னதுரை அவளை உதறித் தள்ளியபடி ''ஆல்ரைட்... நான் உன்னைப் பலவந்தப்படுத்த மாட்டேன். நீயா இணங்கற வரைக்கும் காத்திருப்பேன். அதுவரை இங்கே தான் நீ இருக்கணும்'' என்றான்.

''தேவகியை என்ன பண்ணப் போறே. அவளைப் போகவிடு சின்னதுரை. இல்லேன்னா அவளைத் தேடி போலீஸ் இங்கேயே வந்திடும்!'' என்றாள் ஸ்டெல்லா.

''போலீஸ்... ஹும். அவங்களாலே என்ன முடியும்? அஞ்சு வருஷமா இந்த டிரக்-டிராபிக் செஞ்சிட்டு வந்திருக்குமே. ஏதாவது கண்டுபிடிக்க முடிஞ்சுதா? ஹேவ் நோ ஃபியர்ஸ் ஸ்டெல்லா! ஐ'ல் கெட் யுவர் பிரதர் ஆல்ஸோ அவுட்.....''

''தேவகியை என்ன செய்யப் போறே?''

''அதைப்பத்தி யோசிக்கணும். அவளை இங்கிருந்து விட முடியாது. தட் வில் பீ அவர் எண்ட். ராஜ் நீ என்ன சொல்றே!'' என்று கேட்டபடி திரும்பவும் மேஜைக்கு நடந்தான்.

''தொர! ஐ ஹாவ் ஆன் ஐடியா!'' என்றான் ராஜ்.

''சொல்லு!''

''லெட்ஸ் கிவ் தெம் ஏ ஷாட் ஆஃப் ஸ்மாக்! பூனைக்குட்டிமாதிரி நம்ம மடியிலேயே கிடப்பாங்க.....''

''ஹெராயின் ஊசி போடலாம் கிறியா? நல்ல யோசனைதான். ஆனா தினம் தினம் இவங்களுக்கு கொடுத்துகிட்டே இருக்கணும்.... கையிலே சரக்கு இருக்கா?''

''நான் வெச்சிருக்கேன் தொர... நேத்துதான் ஒரு கன்ஸைன்மெண்ட் வந்தது. கார்ல இருக்கு....''

''குட், அப்ப போட்டுடலாம்... இவங்களை ரொம்பநாள் இங்கேயே வச்சிருக்க முடியாது. வேற இடம் தயார் பண்ணணும்!''

''அதுக்கும் ஐடியா வச்சிருக்கேன்'' என்றான் ராஜ்.

''சொல்லு!'' என்றான் கோப்பையில் ஒயினை சுவைத்துக்கொண்டே.

''தேவகியை அழைச்சுக்கிட்டு நான் வடக்கே எங்காவது போயிடறேன். கொஞ்சநாள் நான் மறைவாயிருந்தா நல்லது. அந்தப் பொண்ணும் நான் இழுத்த இழுப்புக்கு வர்ர மாதிரி நான் தயார் பண்ணிடுவேன்... என்ன சொல்ற தொரை?''

''யூ ஸ்கீமிங் பாஸ்டர்ட்.....யூ வான்ட் தட் கர்ல், இல்லையா.... சரி எடுத்துக்க!'' என்று அட்டகாசமாகச் சிரித்தான் சின்னதுரை.

''கம் ஆன் ஸ்டெல்லா! ஜாயின் அஸ்... என்ஜாய் என்ஜாய்!'' என்று ஸ்டெல்லாவை அழைத்தான்.

ஸ்டெல்லா எழுந்தாள். தேவகி முனகினாள். அவளைப் பற்றித் தூக்கி அருகே இருந்த படுக்கையறைக்குள் சென்றாள். இரண்டு நிமிடங்களுக்குப் பிறகு வெளியே வந்தாள். சின்னதுரையைப் பார்த்து கவர்ச்சியாகச் சிரித்தாள், சின்னத்துரையின் மடியில் வந்து உட்கார்ந்தாள். அவன் கன்னத்தில் அவள் மார்புகள் அழுந்தின.

''தட்ஸ் தி ஸ்பிரிட், மை லவ்!'' மகிழ்ச்சி வெறியில் சின்னதுரை அவள் இடையை கையால் வளைத்து அணைத்துக்கொண்டான். ஷாம்

பெயினை சோப்பையில் நிரப்பி அவள் உதட்டில் வைத்தான்.

''தொர நான் போய் சரக்கை எடுத்து வர்றேன்'' என்று எழுந்தான் ராஜ்.

''இந்தா சாவி.. உள்ளே பூட்டியிருக்கு... திரும்பி வந்ததும் பூட்டிடு என்ன? பெட்ரூம் கதவையும் வெளியே பூட்டிடு. இல்லாட்டி பட்சிங்க பறந்திடும்!'' என்று கால் சராயிலிருந்து ஒரு சாவிக்கொத்தை எடுத்துக் கொடுத்தான். ராஜ் வெளியேறியதும் ஸ்டெல்லா குனிந்து சின்ன துரையை முத்தமிட்டாள்.

''டார்லிங்... எனக்காக நான் சொல்றதைக் கேப்பியா?'' என்று கொஞ்சினாள்.

''கேளு என் காதலியே!''

''தேவகியை அனுப்பிடு.... உன் தலைக்கு தீம்பை தேடிக்காதே!'' என்றாள்.

''பி ஸென்ஸிபிள் ஸ்டெல்லா. அவளை வெளியே விட்டா நேரே போலீசைக் கூட்டிக்கிட்டு வருவா... நம்ம கும்பலைப் பிடிச்சுக் கொடுத்திடுவா.... ராஜ் சொன்ன யோசனைதான் சரி!''

''அவன் ஒரு மோசமான மிருகம் தொரை! தேவகி பாவம் ஒண்ணும் தெரியாத சின்னப் பொண்ணு!''

''உனக்கு அவமேல என்ன அக்கறை? உன் லவ்வரை அவ திருடிக்கிட்டா இல்லையா?''

''உக்கும்... எனக்கு யாரும் லவ்வர் இல்லை... இப்போ நீதான்!'' என்று அவன் கழுத்தைக் கட்டிக்கொண்டாள்.

ராஜ் பெட்டியுடன் உள்ளே வந்தான். ''எங்கே வைக்கட்டும் தொர?''

''பேஸ்மென்ட்... வேறெங்க.....''

ஸ்டெல்லா கிறங்குவதுபோல அரைக் கண்ணோடு கவனித்தாள். சுவரோரமாக நின்ற பிரிஜ்ஜைத் தொட்டு தள்ளினான் ராஜ். அது சின்ன சக்கரங்களின் மீது நாலடி நகர்ந்தது. கீழே குனிந்து ஒரு சிட்டிக் கதவை இழுத்தான். பாதாளப் படிகள் தெரிந்தன.

ராஜ் குனிந்தபடி பெட்டியைஎடுத்துக்கொண்டு இறங்கினான்.

''உன் ஸீக்ரெட் பாக்டரி இங்கதான் இருக்குதா. நான் பார்க்க வேணுமா?'' என்று குழைந்தாள் ஸ்டெல்லா.

''ஓய் நாட்.. வா!''

சின்னதுரை அவள் கையைப் பற்றியபடி படிகளில் இறங்கினான்.

மங்கலான விளக்கு ஒளி இருந்தும் கூட குறுகலான படிகளில் தட்டித் தடுமாறிபடி தான் இறங்க முடிந்தது. 15 படிகள் இருந்தன. அதன் முடிவில் நீண்ட விசாலமான ஹால். ஒரு ஒரு கோடியில் கண்ணாடிக் குடுவைகள் டியூபுகள் இணைத்த ஒரு டிஸ்டிலரி. கந்தகம் போல ஏதோ நெடி......

சுவரோரமாக நிறையப் பெட்டிகள். ஒரு அலமாரி நிறைய மருந்துக் குப்பிகள்.

ராஜ் பெட்டியை ஓர் ஓரத்தில் வைத்து விட்டு வந்தான்.

'இப்பவே ஊசி போட்டுடலாமா?' என்று கேட்டான்.

சின்னதுரை ஸ்டெல்லாவை ஆதரவாக அணைத்துக் கொண்டான்..

''இந்தக் குட்டிக்குத் தேவையில்லை அவளுக்குத் தான் வேணும். இப்ப

---



ரசிகர்களுக்கு ஒரு வேண்டுகோள்

புதுக்கோட்டை ஸ்ரீ பிரகதாம்பாள் தியேட்டரில் ''தீர்ப்புகள் திருத்தப்படலாம்'' என்ற படத்தின் இடையில் கீழ்க்கண்டவாறு ஒரு ஸ்லைடு போடுகிறார்கள்: ''ரசிகர்களுக்கு ஒரு வேண்டுகோள்- இந்தப் படத்தின் முடிவை தயவு செய்து யாரிடமும் சொல்ல வேண்டாம்.''

-வேதை சிவா.



'நிம்மி ஏன் விம்மி விம்மி அழுகிறாள்?'
'அவ வீட்டு ஜிம்மி காணாமல் போய்விட்டதாம்!'

- ப்ரியாபாலு

வேணும் மயக்கம் தெளிஞ்சு எழுந்திருக்கட்டும்'' என்றான்.

'இவ்ளோ தானா பாக்டரியா என்று கேட்டாள் ஸ்டெல்லா.

'போருதா அந்த மேஜை மேல இருக்கறது தான் உற்பத்தி சாலை.. தினம் பத்து கிலோ தயாராயிடும்.'

'எது? ஏஞ்சல் டஸ்டா?'

'ஆமா டென் தௌஸண்ட் ருபீஸ்'

''நீயேவா தயார் பண்றே!''

''அதுக்கு ஒரு ஸயன்டிஸ்ட் இருக்கான். அவனும் டிரக் அடிக்ட் ஹாஸ் மேட். பட் ஹி இஸ் குட் இன் ஹிஸ் வொர்க்!'

''அவன் எங்கே?'

'வருவான். வாரம் ஒரு முறை வெளியே போவான். ரா மெடீரியல் வாங்கிட்டு வருவான் இன்னிக்கும் போயிருக்கான்.''

அந்த ஹாலின் கோடியில் ஒரு வென்டிலேடர் மட்டும்தான். வெளியே போக டைனிங் ரூம் படிகள் தான் ஒரேவழி என்பதைக் கவனித்துக் கொண்டாள்.

ஸ்டெல்லா யோசித்தாள். வீட்டில் ராஜ் கொடுத்த எல்.எஸ்.டி. துளிகள் அடுத்து ஷாம்பேய்ன் எல்லாம் மூளையை ஆக்ரமித்திருந்தன அவளுக்கு வேண்டியது ஒரு திட்டம்.

தப்பிக்கும் திட்டம். இந்தத் தடியன்கள் இருவரையும் இந்தக் கிடங்கிலேயே பூட்டி விட்டு தேவகியையும் அழைத்துக்கொண்டு ஓடிவிட வேண்டும், எப்படி?

முதலில் வாசற்கதவின் சாவி.... காரின் சாவி கிடைத்தாலும் நல்லது, இரண்டுமே சண்முகசுந்தரம் சின்னதுரை விரல் நுனியில் சுழற்றிக் கொண்டிருக்கும் சாவிக் கொத்தில் இருந்தன.

ஸ்டெல்லா தலையை அழுத்திப் பிடித்துக் கொண்டாள்.

''தொர எனக்குத் தலைவலிக்குது நா தூங்கவேணும்'' என்றாள்.

''ஷ்யூர் நான் மேலே போறேன் ராஜ்..வேணுங்கற சரக்கு எடுத்துகிட்டு பின்னாலே வா' என்று ஸ்டெல்லாவுடன் நடந்தான்.

படிகளை நெருங்கும் போது ஸ்டெல்லா தடுமாறி சின்னதுரையின் கையைப் பற்றிக் கொண்டாள். அவள் கையில் சாவிக் கொத்து மாறியது.

'பாத்து! தடுக்கிடும்' என்று அவளைத் தாங்கிக் கொண்டான் சின்னதுரை.

'மேலே கதவு இருக்குதே அதை எப்படி மூடறது.'

''திறக்கறதும், மூடறதும் அந்த பிரிஜ்லே இருக்குது சூட்சுமம்..'' என்றான் பெருமையாக.

'இங்கிருந்து திறக்க முடியாதா?'

''ஊஹூம். ஒன்வே ஒன்லி. நீ தகராறு பண்ணே. இங்கே போட்டு மூடிடுவேன். உன்னாலே தப்பவே முடியாது!'

''ஹௌ கிளவர்! தொரே, நீ ஒரு ஜீனியஸ்'' என்று அவனைக் கட்டி முத்தமிட்டாள்.

முன்னே படிகளில் ஏறி மேலே வந்தாள்.

''தொர கையைக் கொடு. தூக்கி விடறேன்'' என்றாள்.

சின்னதுரை கையை நீட்டினான். ஸ்டெல்லா அவன் முகத்தைக் குறி பார்த்து காலால் ஓர் உதை விட்டாள். அவளது ஷூவின் கூரிய முனை சின்னதுரையின் கண்ணில் தாக்கியது.

'ஐயோ' என்று அலறி பின்னே விழுந்தான்.

ஸ்டெல்லா ஒரே எட்டில் ஃப்ரிஜ்ஜைப் பற்றி திட்டிக் கதவை மூடி அதன்மேல் நகர்த்தி வைத்தாள்.

ஸ்டெல்லா தேவகி படுத்திருந்த அறைக்கு ஓடினாள்.

(தொடரும்)

# உங்கள் வருங்காலம்

(உங்களது ஆங்கிலப் பிறந்த மாதம் தேதியைக் கொண்டு பலன் பார்த்துக் கொள்ளவும்.)

**வார பலன்** (டிசம்பர் 12 முதல் 18 முடிய)

## மார்ச் 22 - ஏப்ரல் 20

இனிய, ஆச்சரியமான செய்திகள். தொலை தூரத்திலிருந்து ஒரு விருந்தினர் வரலாம். நல்ல முறையில் தொடங்குகிற இந்த வாரத்தில் புதன் கிழமையன்று சில விசேஷச் சாதனைகள். வாரக் கடைசிக்கான ஏற்பாடுகளை மற்ற நண்பர்கள் விரும்பலாம் அல்லது ஒரு ஆச்சரியத்தைத் தரலாம்.

## ஏப்ரல் 21 - மே 21

வார நடுவில் ஒரு புதிய பார்ட்னர் ஷிப்புக்கு ஒப்புக் கொள்வீர்கள் அல்லது ஒரு கூட்டாளி சம்பந்தமாய்ச் சாதகமான செய்தி கிட்டும். சொந்த வியாபாரத்தை கவனிக்கச் சனிக்கிழமை காலை மிகவும் ஏற்றது. அன்று துடிப்புடன் செயலாற்றலாம்.

## மே 22 - ஜூன் 21

பார்ட்னர் ஷிப்புகள் நன்றாக இருக்கும். குழுவாகச் செயல்படுவது நல்லது. உற்சாகம் அளித்தீர்களேயானால், உங்கள் காதலர் அல்லது துணைவர் பெருஞ்சாதனைகளைப்புரிவர். பிறர் உங்களோடு அனுசரித்துப் போகும் முயற்சியில் ஈடுபடுவர்; அதற்கான கேளிக்கை விருந்தொன்றையும் ஏற்பாடு செய்வர்.

## ஜூன் 22 - ஜூலை 23

மறதியும், கவனக் குறைவும் ஏற்பட்டு தடைகளும் சலனங்களும் உருவாகி வாழ்க்கையை அனாவசியக் குழப்பத்தில் ஆழ்த்தும். உங்களது இயல்பான மனோ உறுதியைப் பயன் படுத்துங்கள். கூட்டாளிகள் செய்யும் பயணம் உங்களைத் தடுமாறச் செய்யும்; அவர் கொண்டுவரும் செய்தி பாதகமானதாகவே இருக்கும்.

## ஜூலை 24 - ஆகஸ்டு 23

வீண் ரிஸ்க்குகள் வேண்டாம். மார்ச் மாதத் தொடக்கம் வரை, அதிர்ஷ்டம் உங்களுக்குச் சாதகமாயில்லை. பண விஷயத்தில் கண்டிப்பு தேவை. வீண் செலவுகள் தவிர்க்கப்படுதல் வேண்டும். சொந்தப் பிரச்னைகளை அமைதியாக அணுகுங்கள், ஏனெனில் டிசம்பர், ஜனவரி மாதங்களில் உணர்ச்சி மோதல்கள் உருவாகவிருக்கின்றன.

## ஆகஸ்டு 24 - செப். 23

வீட்டைச் சுற்றிச் செய்யவிருக்கும் வேலைகளை இப்பொழுதே ஆரம்பித்து விடுஙகள். ஏனெனில் மாதக் கடைசியில் உங்களுக்கு ஓய்வு மிகவும்தேவை. புதன் கிழமையன்று பொருட்கள் வாங்க விசேஷமான நாள். வியாழன் இரவு நெடு நேரம் கண் விழிக்க நல்லது. சனிக்கிழமையன்று ஏதேனும் புதுமையை நாடுவது நன்மை தரும்.

## செப் 24 - அக் 23

கூட்டாளிகள் அதிகம் பேசுவார்கள். புதன் காலை இனியதாய் ஒன்று உஙகளுக்குத் தரப்படலாம். வார நடுவில் உறவினர்களால் சில உதவிகள் கிட்டும். நிறையப் பேர் உங்களைத் தேடி வருவார்கள். சிறு பயணங்கள் நிகழலாம். பிறரோடு தொடர்பு கொண்டு விஷயப் பரிவர்த்தனை செய்து கொள்வதில் ஆர்வம் அதிகமிருக்கும்.

**பீட்டர் விடால்**



## 19. ஒரு விபத்து

தோற்றுப் போனவளாக மேற்கூரையை வெறித்துப் பார்த்தபடி சோர்வுடன் படுத்திருந்தாள் தேவகி. இந்த அறையில் அவளை அடைத்துப் போட்டு விட்டார்கள். ஹால்கதவைத் தவிர வேறு வழியே இல்லை. ஜன்னல் கூட உயரமாக பெரிதாக கம்பிகள் தைத்திருந்தன.

இந்தப் பழிகாரக் கும்பலில் ஸ்டெல்லா ஒருத்தி தான் அவளுக்குத் துணை. அவள் குணமோ நிலையா இல்லை.

''பயப்படாம படுத்திருங்க. நான் வர்ற வரைக்கும் கண்ணைத் திறக்காதீங்க,'' என்று சொல்லி விட்டுப் போனாள் ஸ்டெல்லா. அதன் பிறகு கதவு வெளியே தாளிட்டுப் பூட்டப்பட்டு விட்டது. திடீர் திடீரென்று சின்ன துரையுடன் ஸ்டெல்லா சேர்ந்து அட்டகாசமாகச் சிரிக்கும் ஒலி ஊருடுவி வந்தது.: என்ன இருந்தாலும் ஸ்டெல்லா அவர்களுடைய ஆள்தான்!

தேவ்வின் முடிவுக்கு ஸ்டெல்லா தான் காரணம். அவளாலேயே என் முடிவும் இந்த அறைக்குள்ளேயே நிகழப் போகிறது.

அடுத்து என்ன நடக்கப் போகிறது என்பதை ஊகித்துப் பயந்தாள் தேவகி. சின்னதுரை அல்லது ராஜ் அல்லது இருவரின் காமத்திற்கு அவள் இரையாக்கப்படுவாள். அதை எதிர்பார்த்து காத்திருக்க வேண்டுமா என்ன?

மேலே மின் விசிறி மூன்று கைகளையும்விரித்து''பாவம் உன் வாழ்வு அவ்வளவுதான்!'' என்றது.

கட்டியிருந்த நைலான் புடவையை விசிறியில் மாட்டி சுருக்குப் போட்டு விடலாம். ''தப்பிப்பதற்கு இது ஒன்று தான் வழி.. தற்கொலை!'' தேவகி விரக்தியாகச் சிரித்துக் கொண்டாள்.

மெல்ல எழுந்து கதவருகே சென்று காதை வைத்துக் கேட்டாள். சத்தமே இல்லை. எல்லாம் திடீரென்று எங்கே போய் விட்டார்கள்.

தடதடவென்று தட்டினாள். பதில் இல்லை. பிடியைப் பற்றி உலுக்கினாள். கதவு அசைந்து கொடுக்கவில்லை.

அறையை ஒட்டியிருந்த குளியலறை மிகவும் நவீனமாக இருந்தது. அங்கேயும் உயரத்தில் கம்பி தைத்த வென்டிலேட்டர்.'' சுருக்குப் போட்டுக் கொள்வதைத் தவிரவேறு நல்ல வழியில்லையா?''

வெளிரென்று ஆழ்ந்து அகன்ற நீண்ட குளியல் தொட்டி அவளை வா என்றழைத்தது. தலைமாட்டில் இரண்டு எவர்சில்வர் குழாய்கள். திருகினாள். ஒன்றில் வென்னீர் இன்னொன்றில் குளிர்நீர்.

தேவகி தொட்டியில் படுத்துக் கொண்டாள். இரண்டு குழாய்களையும் முழுதாகத் திறந்து விட்டாள். இதமான சூடான தண்ணீர் முதுகில் பட்டுச் சிலிர்த்தது. இடுப்பும் மார்பும் முழுதாக நனையும் வரை காத்திருந்தாள்.

வலது கையில் கண்ணாடி வளையல் ஒன்றை உடைத்தாள். இடது மணிக்கட்டில் தமனிக் குழாயைத் தேடி கூரான நுனியால் சுருக்கென்று குத்தி அறுத்தாள். பொட்டுப்போல சிவப்புத் துளி தலைகாட்டியது. அதைத் தள்ளிக் கொண்டு மேலும் மேலும் ரத்தத் துளிகள். வென்னீருடன் கலந்து நீரெல்லாம் சிவப்பாயிற்று.

தேவகி சாவின் சுகமான அரவணைப்பை எதிர்நோக்கி நீரில் அமிழ்ந்த படியே கண்களை மூடிக்கொண்டாள். சளசளவென்று கொட்டும் நீர் ஓசை தாலாட்டுப் போல இருந்தது. பயமும் கவலையும் குறைந்தது. மனம் லேசாகியது. சூழ்நிலை நினைவில் தேய்ந்து மங்கலாயிற்று.

''யூ ஸ்டுப்பிட் திங்! செத்துப் போறதுக்கு என்ன அவசரம்!'' என்று

# குள்ள டாக்டர்...!

வயது 37, உயரம் 3 அடி 9 அங்குலம்: தொழில் மருத்துவம். டாக்டர் லூயுல் கரோல்ஸ் டிரிண்டாட் என்பவர் தான் உலகிலேயே மிகச் சிறியவர்.

69 ராத்தல் எடையுள்ள அவர் சாதாரண டாக்டரல்ல, ஆப்பரேஷன் டாக்டர் நோயாளிகளுக்கு ஆபரேஷன் செய்ய கட்டில் உயர்த்தில் இருக்கிறதே என்ற கவலை இவருக்கில்லை. பெஞ்சைப் போட்டு அதில் நின்று கொண்டே எத்தனையோ ஆபரேஷன்களைச் செய்திருக்கிறார். இவர் குழந்தைகள் வார்டுக்கு போகும் போது இவரை அந்தக் குழந்தைகள் டாக்டர் என்று நினைச்காதாம். தங்களைப் போல் இவரையும் ஒரு நோயாளியென்று நினைக்குமாம்.

4 வயதிலேயே இவருடைய வளர்ச்சி நின்று விட்டது

உயரத்தில் குறைவான இவர் வாழ்க்கையில் குறையில்லை. 5 அடி 4 அங்குல உயரப் பெண்ணை மணந்து இல்வாழ்வில் மகிழ்ச்சியோடு உள்ளார். அவர் மனைவியும் மகிழ்ச்சியுடன் தான் வாழ்கிறார். ''என் கணவர் உடல் குறை கொண்டவர். ஆனாலும் மனம் தளராமல் டாக்டராகியுள்ளார். அவர் எப்போதும் தான் ஒரு குறை கொண்டவர் என்று எண்ணியதே இல்லை.''

படமும் தகவலும் மாத்தளை சோமு



ஸ்டெல்லாவின் குரல் தேவகியை எழுப்பியது. குளியல் தொட்டியிலிருந்து அவளை வெளியே இழுத்துக் கொண்டிருந்தாள் ஸ்டெல்லா. தேவகி தடுமாறியடி எழுந்தாள். ஸ்டெல்லா அவளைத் தாங்கிக் கொண்டு படுக்கையறைக்கு நடத்திச் சென்றாள். மணிக்கட்டிலிருந்து ரத்தம் இன்னும் கசிந்து கொண்டிருந்தது.

ஸ்டெல்லா பரக்கென்று தலைகாணி உறையைக் கிழித்து கட்டுப் போட்டாள்.

''தேவகி, நல்ல தைரியசாலின்னு உங்களை நெனச்சேன்....''

ஸ்டெல்லா தேவகியின் தெப்பல் புடவையையும் பிளவுஸையும் உள்பாவாடையையும் களைந்தெறிந்தாள். ஈரத் தலையை ஒரு டவலால் துடைத்து விட்டாள்.

ஜன்னலை அலங்கரித்த கர்ட்டன்களைப் பிரித்து வந்தாள்.

''இப்ப இதுதான் இருக்கு. கட்டிக்குங்க.... அந்தத் தடியன்களை பேஸ்மெண்டிலே போட்டு மூடி வச்சிருக்கேன். கதவை உடைச்சு வெளியே வந்தாலும் வந்திடுவாங்க. அதுக்குள்ளே நாம ஓடிடுவோம்'' என்று தேவகியைப் பற்றி துரிதப்படுத்தினாள்.

ஸ்டெல்லாவைப் பற்றித் தவறாக நினைத்துவிட்டோமே என்று கூச்சப் பட்டாள் தேவகி. மேலுக்கும் கீழுக்குமாக இரண்டு கர்ட்டன்களை சுற்றிக் கொண்டாள். ஸ்டெல்லா அவசரப் பட்டாள்.

பிரிஜ்ஜின் கீழே தடதடவென்று திட்டிக் கதவு அதிர்ந்தது.

''சீக்கிரம்'' என்று ஸ்டெல்லா விரைந்தாள். தேவகியின் கால்கள் துவண்டன. சமாளித்துக்கொண்டு ஸ்டெல்லாவின் பின்னே ஓடினாள்.

வெளியே மாலை நேரம். பொழுது சாய்ந்துவிட்டது. அரை மணியில் இருட்டிவிடும்.

ஹெரால்டு கார் பூட்டியிருக்கவில்லை. ஸ்டெல்லா டிரைவர் இடத்திலும் அருகில் தேவகியும் உட்கார்ந்து கொண்டனர்.

''இதிலேஇருக்கிறசாவி சரியாயிருக்கும்னு நெனைக்கிறேன்'' என்று ஸ்டெல்லா மாற்றி மாற்றி சாவிகளை இக்னைஷில் பொருத்தி திருகினாள். மூன்றாவது முயற்சியில் கார் உயிர் பெற்று விட்டது.

''கெட்டியா பிடிச்சுக்குங்க!''

ஸ்டெல்லா காரை சீறிய பாய்ச்சலுடன் செலுத்தினாள்.

பாக்டரியிலிருந்து மகாபலிபுரம் சாலையை இணைக்கும் ரஸ்தா ஒரு கிலோமீட்டர் இருந்தது. கப்பிக்கல் பரப்பிய மேடு பள்ளமான சாலை.

''தேவகி தூங்கிடாதீங்க. எங்கே போவணுமோ வழி சொல்லுங்க!'' என்றாள் ஸ்டெல்லா.

''இது என்ன இடம்?'' என்று ஈனஸ்வரத்தில் கேட்டாள் தேவகி.

''திருவான்மியூருக்கு வெளியேன்னு நினைக்கிறேன். அடையார் வழியா சிடிக்குப் போகலாம்.''

''வழியிலே எங்க வீடு முதல்லெ வரும். அங்கே போய் டெலிபோன் செய்யலாம்'' என்றாள் தேவகி.

''வழியப் பாத்துக்குங்க.''

கப்பி ரஸ்தாவின் கோடியில் ஒரு வான் திரும்பி பாக்டரியைநோக்கி

# பாரீசில் ஒரு சுதந்தலை

மேடம் எடிக் ரீபிட் என்ற பாரீஸ் நகரத்துப் பெண்மணிக்கு கனவிலும் நடக்காத நிகழ்ச்சி நடந்துள்ளது. சாலை சமையல் செய்யும் பொழுது அவரது மோதிரம் எங்கோ வழுந்து விட்டது. அது சாக்கடையில் அடித்துச் செல்லப் பட்டு பக்கத்திலிருக்கும் பெரிய நதியில் சாக்கடை நீருடன் கலந்துவிட்டது. சிறிது நாளில் அப் பெண் மார்க்கெட்டில் வாங்கிய ஒரு மீனின் வயிற்றை அறுத்தபோது மீனின் வயிற்றில் அவரது மோதிரம் அப்படியே பத்திரமாக இருந்ததாம்.

-ஏ.வி. தேவன்.

வந்தது. ஹெரால்டின் பாய்ச்சலைக் கண்டு பயந்து நின்றது.

''ஷிட்!'' என்று வெடித்தாள் ஸ்டெல்லா. பிரேக்கைப் போட்டு மோதலைத் தவிர்த்தாள்.

வேனிலிருந்து டிரைவர் எட்டிப் பார்த்தான். தெரிந்த முகமாய் இருந்தது.

''ஸ்டெல்லாம்மாவா? காரை இவ்வளோ வேகமா ஓட்டிக்கிட்டு எங்கே போறீங்க?'' என்று கேட்டான்.

சின்னதுரையின் டிரைவர் முனுசாமி!

''அவசரமாப் போறோம்முனுஸாமி. வண்டியை ஒதுக்கு. உள்ளே யாரு?'' என்றாள்ஸ்டெல்லாசகஜபாவத்துடன்.

''ஸையன்டிஸ்டு... டௌன்வரை போயிட்டு வர்ரம் தொர இருக்காரா பாக்டரியிலே!''

''இருக்காரு. ராஜ் தடியன்கூட இருக்கான். நீ ஒதுங்கு!'' என்றாள் ஸ்டெல்லா.

முனுசாமி வேனை ஓரமாக ஒதுக்கினான். வேனின்வயிற்றில் ''ட்விலைட் பார்மஸுடிகல்ஸ்'' என்று பச்சை எழுத்தில் எழுதியிருந்தது. கொஞ்சம் மங்கிப்போயிருந்தது. பின்னால் ஸீட்டில் முக்கால் வழுக்கைத் தலையில் பெரிய சோடா கண்ணாடி ஏறியிருந்தது. ஸயன்டிஸ்ட் உட்கார்ந்திருந்தார். கண்கள் மூடியிருந்தன. வாயில் ஒரு சிகரெட். எதையுமே கவனிக்காதவராய் புகை மண்டலத்தில் மோனத் தவத்தில் ஆழ்ந்திருந்தார்.

''சரியான பேக்கு!'' என்றாள் ஸ்டெல்லா. ''இந்த டிரைவர் போய் அவங்களை வெளியே விட்டுடுவான். தொரத்தி வருவாங்க. அதுக்குள்ளே ஓடிடலாம்'' என்று ஸ்டெல்லா ஆக்ஸிலரேட்டரை மிதித்தாள்.

ஐந்து நிமிடத்தில் மகாபலிபுரம் ரோடு திருவான்மியூர் பாலத்தில் முடிந்தது. பாலத்தைத் தவிர்த்து இடது பக்கமாக ஒடித்து வி எச் எஸ் சாலையில் விரைந்தது ஹெரால்ட்.

''ஸ்டெல்லா.... அடையார் அந்தப் பக்கம்.'' என்றாள் தேவகி.

ஸ்டெல்லாவிடமிருந்துபதில்இல்லை. அவள் ஓட்டுவதில் முழுக் கவனம் செலுத்த முயன்றாள்.. உள்ளே சென்றிருந்த சரக்குகள் புலன்களை பேதலிக்கச் செய்யலாயின..

எதிரே ஒரு பஸ் வந்தது. பூதாகாரமாக சாலை முழுவதையும் அடைத்தாற் போல் வந்தது. ஸ்டெல்லா அதைத் தவிர்க்கும் முயற்சியில் தடுமாறினாள்.

பயந்து போன சைக்கிள்காரர் ஒருவர் சாலையை விட்டு இறங்கி டிச்சில் போய் விழுந்தார். சாலை முடிவில்லாமல் வளர்ந்து கொண்டிருப்பது போல் தோன்றியது.

''கார் ஓட்டுவீங்களா?'' என்று ஸ்டெல்லா கேட்டாள்.

''கத்துக்கிட்டிருந்தேன்.... டிராபிக்லே ஓட்டத் தெரியாது!'' என்றாள் தேவகி.

''சரித்தான்! அப்போ கடவுளை வேண்டிக்குங்க!'' என்று சிரித்தாள் ஸ்டெல்லா. அவள் சிரிப்பு ஒரு மாதிரியாக இருந்தது.

''மெள்ள ஓட்டு ஸ்டெல்லா..... இனிமே பயமில்லை!'' என்றாள் தேவகி.

''சின்னதுரை விட மாட்டான்.... எங்க போனாலும் தேடி வந்துருவான்'' என்றாள் ஸ்டெல்லா.... அடையார் சாலை முனை வந்துவிட்டது.

''லெப்டா, ரைட்டா?'' என்றாள் ஸ்டெல்லா.



ஒருவன்: காதலிச்ச பெண்ணை கல்யாணம் செய்து கொள்ளப் போறதுலே எனக்கும் என் அப்பாவுக்கும் பெரிய சண்டை!

மற்றவன்: ஏன் அவருக்குக் காதல் கல்யாணம் பிடிக்காதா?

ஒருவன்: இல்லை எனக்குப் பிடிக்காது. அவர் பண்ணிப்பேன் என்கிறார்.

எஸ். சந்திரசேகர்.

''வலது பக்கம்.... அதிக தூர மில்லே. போயிடலாம்!''

ஒரு அம்பாஸடர் சடன் பிரேக்குப் போட்டு நின்றது. இடது பக்கத்திலிருந்து வந்த பல்லவன் ஸ்தம்பித்துநின்றுன்.

சில பாதசாரிகளே சிதற அடித்தபடி ஸ்டெல்லா ஹெரால்டை வாகன ஓட்டத்தில் நுழைத்து முன்னேறிஞள்.

அடையார் பஸ் டெர்மினலைத் தாண்டி நில்லென்று எச்சரித்த சிவப்பு விளக்கைத் தாண்டி அடையார் பாலம் வரை வந்தாகி விட்டது. பின்னுல் போலீஸ் விசில் கேட்டது.

தேவகி திரும்பிப் பார்த்தாள்.

''டிராபிக் போலீஸ். நிறுத்தச் சொல்ருங்க!''

''டு ஹெல் வித் த போலீஸ்! சின்னதுை வர்ராரு பாருங்க.அந்த வேன்ல வருவான்!'' என்ருள் ஸ்டெல்லா.

''மஞ்சள் டாப் போட்ட ஒரு வேன் வருது!''

''அதான். வண்டியை நிறுத்திரு மாட்டிக்குவோம்.....''

ஸ்டெல்லா வேகத்தைக் கூட்டிஞள். இடது பக்கம் ஒடித்து சி.பி. ராமஸ்வாமி சாலே முனையை எட்டிய போது அந்த மஞ்சள் டாப்வேன் வேகமாக முன்னேறி ஸ்டெல்லாவின் காரைக் கடக்க முற்பட்டது.

ஹெரால்டின் வலது பக்கக் கதவை மோதித்த வேனின் ஹெட்லேட் அழுத்தமாகப் பதித்த முத்தம் காரை அப்பளமாக நொறுக்கி விட்டது.

'ஐயோ'என்ற அலறலுடன் தேவகி மறுகதவு பிளந்து தூக்கி எறியப்பட்டாள். ஆறடி தள்ளி பிளாட்பாரத்தில் விழுந்து நினேவிழந்தாள்.

ஸ்டெல்லாவின் உடல் ஸ்டீயரிங்கில் சிக்கித் துடித்தது. சுற்றிலும் ரத்தம் தெறித்து உறைந்தது. அவள் தலேயிலிருந்து மார்பிலிருந்தும் வாயிலிருந்தும் பெருகிய ரத்தம் காரின் சீட்டை நனேத்து, தரையில் வழிந்து, சொட்டுச் சொட்டாக விழுந்து, குழம்பி, மண்ணே நனேத்துப் படர்ந்தது.

(தொடரும்)

---

# அதே காரணங்களுக்காக



'ஆக்டபஸி' என்ற ஆங்கிலப்படத்தின் படப்பிடிப்பு அண்மையில் உதய்பூரில் நடந்தது. இதில் கதாநாயகஞக நடிக்கும் ரோஜர்மூர் பதினெரு மணி படப்பிடிப்புக்கு எட்டு மணிக்கே மேக்கப்புடன் ரெடியாகி விட்டார். படப்பிடிப்பின் போது குடிக்கத் தண்ணீர் தேவைப்பட்ட போது அவர் யாரையும் தண்ணீர் கொண்டு வரச் சொல்லவில்லே. தானே போய் தண்ணீர் எடுத்துக் குடித்தார். (இப்போது நமது ஹீரோக்களின் நினேவு வருகிறது) 'ஆக்டபஸி' படத்துக்காக உதய்பூரில் எடுக்கப்பட்ட காட்சிகள் படத்தில் இருபது அல்லது முப்பது நிமிஷங்கள் தான் வரும். அதற்காக இங்கே செலவிடப்பட்ட தொகை: இருபத்திரண்டரை கோடி ரூபாய். ஹீரோ ரோஜர்மூரிடம் ஒரு நிருபர் ''நீங்கள் பணத்துக்காகத்தான் ஜேம்ஸ்பாண்ட் படங்களில் நடிக்கிறீர்களா?'' என்று கேட்ட போது அவர் சொன்னது: ''ஜேம்ஸ் பாண்ட் கதைகளே எழுதின 'ஐயான் ஃப்ளமிங்' பணத்துக்காகவும் மக்களின் பொழுது போக்குக்காகவும்தான் எழுதிஞர். அதே இரண்டு காரணங்களுக்குக்காகத்தான் நானும் ஜேம்ஸ் பாண்ட் படங்களில் நடிக்கிறேன்.''

அனிதா ராமச்சந்திரன்

பூர்ணிமா ஜெயராமுடன் ஒரு பேட்டி



# பரங்யாளே ஆச்சரியப்பட்டார்!

'ஆல்வாய் பேலஸிற்குப் பின்புறம் தான் அவுட்டோர் லொகேஷன். அங்கே வந்து விடுங்களேன்' என்ருர் பூர்ணிமா ஜெயராம்.

நான் லொகேஷனுக்குச் சென்ற போது, ஆச்சரியத்தை அதிசயத்தை கண்களில் விசிறிக் கொண்டு சிறுமிகளிலிருந்து இளம் பெண்கள் (சும்மா சொல்லக்கூடாது நல்ல அழகு) வரை முடிச்சுப் போட்டு நிற்க, நடுவில் பூர்ணிமா மேக்கப் செய்து கொண்டிருந்தார்.

போலீஸ் ஆண்கள் கூட்டத்தை விலக்கிக் கொண்டிருந்தது. மேக்கப் போட்டு முடிக்கட்டும் என்று காத்திருந்த என்னையும் போலீஸ் தோளில் கை வைத்து 'மாறு' என்ருர். விஷயத்தை மெதுவாகச் சொன்னதும் 'ஸாரி' என்றவாறே அகன்ருர்.

பூர்ணிமா தயாராகி விட்டார். கேள்வி கேட்டுக் கொண்டே இருக்கலாம் என்று நினைக்கச் செய்யும் விதமாகஃபிரண்ட்லியாகப்பேசுகிருர்.

பூர்ணிமா மாடல் அழகியாக இருந்தபோதிலும் எந்த அழகுப் போட்டியிலும் கலந்து கொள்ளவில்லையாம்!

அவுட்டோர் ஷூட்டிங் போனதில் பூர்ணிமாவுக்கு வெகுவாகப் பிடித்துப் போன இடம் கொடைக்கானல். படங்களில் நடிக்கும் போது முன்பெல்லாம் தயாரிப்பாளர் தரும் காஸ்டியூம்களை அணிந்து நடிப்பாராம். சில படங்களில் பூர்ணிமாவைப் பார்க்க அவருக்கே சகிக்கவில்லையாம் விளைவு? காஸ்டியூம் டிஸைனரை வைத்துக் கொண்டிருக்கிருர். வீட்

அந்த நாளில் சிறிய கிராமங்களில் பரத்தையர் தங்கள் தொழிலை நடத்த முயன்றதில்லை. மேலும் அவர்களில் பெரும்பான்மையோரும் ஆடவரோடு உறவாடி, நயவஞ்சகமாக நடப்பதை தங்கள் தொழிலாகக் கொள்ளவில்லை. அப்படி ஆடவரை தங்களுடைய அழகு, இசை, பேச்சுத்திறன், ஒப்பனை முதலியவற்றால் மயக்கி, தம் வசப்படுத்த முயன்றவர்கள், சற்றே பெரிய ஊர்களிலும், நகர்களிலும் மட்டுமே வாழ்ந்து வந்தார்கள். அவர்களும் அந்த அந்த ஊர்க் கோயில்களில், தெய்வத்தின் அடியார் என்று பொருள்படும் 'தேவதாசிகள்' என்று கூறப்பட்டு வந்தார்கள். அவர்கள் அனேகமாக, கோவிலை அடுத்த மாடத் தெருக்களில் தங்கள் தங்கள் வீடுகளில் வாழ்ந்து வந்தார்கள். 'விறலி விடு தூது' என்னும் பிற்கால நூல் ஒன்றில் இவற்றைப் பற்றிய விவரங்களைக் காணலாம். பெருங்குளத்திலோ, பத்தமடையிலோ, அத்தகைய 'தாசி பெண்கள்' இல்லை. பெருங்குளத்திலிருந்து பத்து கிலோ மீட்டர் தொலைவில் உள்ள ஸ்ரீ வைகுண்டத்திலும், இன்னும் வேறொரு திசையில் பதினைந்து கிலோ மீட்டருக்கு மேலுள்ள திருச்செந்தூரிலும், அத்தகையவர் சிலர் அங்குள்ள தெய்வத்தின் அடியார்களாகவும் தினந்தோறும் தங்கள் நாட்டியக் கலையைத் தங்கள் வழிபாடாக தெய்வத்துக்கு அளித்தும் வந்தார்கள். திருநெல்வேலியில், அத்தகையவர்கள் பலர் வாழ்ந்து வந்த தெரு ஒன்றுக்கு மாடத் தெரு என்று பெயர். செல்வமும், இளமையும் மிகுந்தும், ஒழுக்கக்கட்டுப்பாட்டின் வலிமை குறைந்தும், உள்ள ஆடவர்களில் சிலர் அவர்களை நாடிச் செல்வார்கள். அந்நாளில் அது ஓர் இழுக்கு என்பதாக அதிகம் கருதப்படவில்லை. மாறாக, ஒருவருக்கு - அவருக்கே உரியவர்களான - ஒருத்திக்கு மேற்பட்ட தாசிகள்" இருந்தால், அது அவருடைய உயர்வைக் காட்டுவதாக எழுபது ஆண்டுகளுக்கு முன் வரையில் கூடக் கருதப்பட்டது. அதைப் போலவே, இன்னாள் இன்ன பெருமகனுடைய தாசி என்று ஒரு பரத்தையைப் புகழ்ந்து கூறுவதும் அந்நாளைய வழக்கமாக இருந்து வந்தது.

இப்பொழுது காலம் மாறிவிட்டது. ஒழுக்க நடத்தைகளும் கருத்தளவில் பெரும்பான்மையும் மாறிவிட்டன. ஆயினும், முற்றும் மாறவில்லை என்பதற்குச் சான்றுகள் கூற வேண்டியதில்லை.

இவற்றைப் பற்றி இங்கே சொல்லியதற்குக் காரணம் எங்கள் குடும்பத்தினர் சிலரும் பரத்தையோடு உறவு கொண்டிருந்தனர் என்று குறிப்பிடுவதற்காகத்தான். அவர்கள் செய்தது தவறு என்று நான் அவர்களைக் குறை கூறவில்லை. அந்த நாளில் அவர்கள் எப்படி நடந்து வந்தார்கள் என்பதைக் கூறுவதே என் நோக்கம். என் தந்தை வழிப் பாட்டனாரும் என் தாய் வழிப் பாட்டியாரின் தம்பியும் (இவர் திருச்செந்தூரில் வாழ்ந்தவர்), பரத்தையரோடு உறவு கொண்டிருந்தார்கள் என்று கேட்டிருக்கிறேன். என் தாய் வழிப் பாட்டனாரோ அவருடைய நெருங்கிய உறவினர் எவருமோ, அவ்வாறு உறவு கொண்டதில்லை. அவர்களுக்கு அடுத்த தலைமுறையினர் அனைவருமே தூய நன்னடத்தை உடையவர்கள். இப்போது தேவதாசிகள் என்று வழங்கப்பட்ட அந்த இனமே அடியோடு நீக்கப்பட்டு விட்டது. இது கழகச் சீர்திருத்தத்தின் விளைவுகளுள் ஒன்று.

---

## அதிகநாள் அரசாண்டவர்



உலகத்திலேயே இதுவரை அரசாண்ட மன்னர்களில் மிக அதிக நாட்கள் அரசோச்சியது இரண்டாவது பெபி என்ற மன்னர். இவர் பண்டைக் காலத்தில் எகிப்தை அரசாண்ட பாரோ மன்னர்களின் வம்சத்தைச் சேர்ந்தவர். நூறாண்டுகள் வாழ்ந்த இவர் தனது ஆறாவது வயதில் அரியணை ஏறி 94 ஆண்டுகள் அரசாண்டார்.

பி. எம். முகமது கவுஸ்

# ஏஞ்சல் டஸ்ட்

கி. கஸ்தூரி ரங்கன்

## 20. போலீஸ் கமிஷனர்

பிற்பகல் முழுதும் போலீஸ் கமிஷனரின் அலுவலகம் அல்லோல கல்லோலப்பட்டுக் கொண்டிருந்தது.

கமிஷனரின் முகம் ஜிவுஜிவு என்றிருந்தது. அவரது 30 ஆண்டு போலீஸ் சர்வீஸில் இது போன்ற பிரச்னையை அவர் சந்தித்ததே இல்லை.

'எங்கள் பெண் எங்கே?' என்ற கேள்வியுடன் எதிரே தேவகியின் பெற்றோர் உட்கார்ந்திருந்தனர்.

மியூஸிகல் ஷாப்பில் தேவகியைத் தனியாக விட்டு விட்டு வந்தது எத்தனை முட்டாள்தனம் என்பதைக் கமிஷனர் உணர்ந்து தவித்தார்.

''டாக்டர், ஐ'ம் ரியலி பெர்ப்ளெக்ஸ்ட்.. இப்படி ஆகுமென்று நான் நினைக்கவே இல்லை. ஆனா தேவகியைக் கடத்திக் கொண்டு போனவங்க எங்க போனாலும் விட மாட்டோம். பிடிச்சிடுவோம்!'' என்றார் உறுதியாக.

''அதுவரைக்கும் எம் பொண்ணு உயிரோட இருக்கணுமே ஸார். ஏதாவது மானக் கேடாகப் போச்சுன்னா அவ உசிரையே விட்டுடுவாளே!'' என்று புலம்பினாள் மங்கையர்க்கரசி.

''பதட்டப்படாதே மங்கா.... அப்படி ஒண்ணும் ஆயிடாது....'' என்று அவளைத் தேற்றினார் டாக்டர் பூஷணம். ஆனால் அவருடைய மனதிலும் அதே அச்சம் மண்டியிருந்தது.

எதிரே விறைப்பாக, ஆனால் முகத்தில் வினயபாவத்துடன் நின்றிருந்த சி ஐ டி இன்ஸ்பெக்டர் பாண்டியனைக் கமிஷ்னர் கூர்ந்து பார்த்தார்.



பாண்டியன் குற்ற உணர்வுடன் சிலிர்த்துக் கொண்டார்.

''சரி.... நீங்க போய் எந்தெந்த ரூட்லே போயிருப்பான்னு யோசிச்சு ஸர்ச் பண்ணுங்க. ட்ராபிக் போஸ்ட் எல்லாத்தையும் அலெர்ட் பண்ணியிருக்கேன்..... அங்கிருந்து தகவல் வந்துதான்னு அப்பப்போ கேட்டுக்குங்க.. நீங்க போகலாம்'' என்றார் கமிஷனர்.

''எஸ் சார்!'' என்று சல்யூட் அடித்து விட்டு வெளியேறினார் சி ஐ டி. பாண்டியன்.

''ஹி இஸ் ஒன் ஆப் அவர் பெஸ்ட் ஆபீஸர்ஸ். அவருக்கே டிமிக்கி கொடுத்துட்டான் அந்த ஸ்கௌண்ட்ரல் !'' என்று பல்லைக் கடித்தார்.

''கடத்திக் கொண்டு போனவன் ராஜ் என்று இவர் சொன்னாரே. அவனைப் பத்தி பெர்னிக்குத் தெரிந்திருக்குமல்லவா..?'' என்றார் டாக்டர் பூஷணம்.



''ரைட்.... அவனை மறுபடி கூப்பிட்டனுப்பறேன். காலையிலே விசாரிச்சவரை எனக்கு ஒண்ணுமே தெரியாதுன்னு சாதிச்சுட்டான்.. விட்டுப் பிடிக்சலாம்னு இன்டராகேஷனை ஒத்திப் போட்டிருந்தேன்....'' என்றார்.

இன்டர்காமில் பெர்னியை அழைத்து வரும்படி உத்தர விட்டார்.

''நீங்க வேணும்னா வீட்டுக்குப் போயிருக்கலாம்.... இங்கேயே இருக்கிறதிலும் எனக்கு ஆட்சேபமில்லை!'' என்றார் கமிஷனர்.

''வீட்டுக்குப் போனா மனசு கிடந்து தவிக்கும்.... இங்கியே இருக்கோம்!'' என்றாள் மங்கையர்க்கரசி.

''வாட் எக்ஸாக்ட்லி ஹாப்பன்ட்?'' என்று கேட்டார் டாக்டர் பூஷணம்.

''நேத்து மாலைலேருந்து இப்பவரைக்கும் அதாவது 24 மணி நேரத்துக்குள்ளே மல்டிபிள்- கிரைம் நடந்துட்டுது....டிரக்-டிராபிக், பாய்ஸனிங், அடெம்ப்டட் மர்டர்; அப்டக்ஷன், ..இதோட லிஸ்ட் முடியணும்...''

''குற்றவாளிங்க யார்னு தெரிஞ்சிட்டது இல்லையா?''

''ஸஸ்பெக்ட்ஸ் ஒன்லி. புரூவ் பண்ணணும்.. பெர்னியும் ஸ்டெல்லாவும்.. டிரக் டிராபிக்லே இன்வால்வ் ஆயிருக்காங்கன்னு சஸ்பிஷன் இருக்கு. எவிடன்ஸ் இல்லை. இவங்கதான் தேவ்வை நேற்று மாலை போதை மருந்து ரொடுத்து பாய்ஸன் பண்ணியிருக்காங்கன்னு ஊகிக்கிறோம்....எஸ்டாபிளிஷ் ஆகலை.. தேவகியை ஸ்டெல்லாவும் ராஜ் என்கிறவனும் கடத்திக்கிட்டு போயி





''ஹோல்டான் ஹோல்டான்! கூட்ட நெரிசலில் என்னையே கிழே தள்ளிட்டானுகளே!

ருக்காங்கன்னு தெரியுறது.. ஆனா தேவகி வாலன்டியரா.. தானாகவே போயிருக்கலாம்.. அது அப்டக்ஷன் இல்லே....''

''தென் யூ ஹாவ் நோ கேஸ்....''

''அப்படியானா சந்தோஷப்படுவேன்.... ஆனா இதிலே சம்பந்தப்பட்டிருக்கிற ஆட்களைப் பார்க்கும் போது பெரிய கிரைம் நடந்திருக்குன்னுதான் எனக்குப் படுது..தென், மினிஸ்டர்ஸ் ஸன், சின்னதுரை, அவன் எவ்வளவு தூரம் இன்வால்வாயிருக்கான்னு பார்க்கணும்.... ஆல் டுகதர் எ பிக் ரேக்கெட் வித் ஹை கனெக்ஷன்ஸ்....''

இன்டர்காம் பஸ்ஸர் ஒலித்தது. பட்டனை அழுத்தி, ''எஸ்!'' என்றார் கமிஷனர். ''உள்ளே கொண்டு வாங்க?'' என்று உத்திரவிட்டார்.

ஹால் போன்ற அந்தப் பெரிய அறையின் கோடியில் ஒரு கதவு திறந்தது. இரண்டு போலீஸ்காரர்கள் ஒரு ஸப்-இன்ஸ்பெக்டர் சூழ பெர்னி எனப்படும் பெர்னார்ட் ஜோஸப் உள்ளே வந்தான். தலை கலைந்திருந்தது. முகத்தில் சோகமும் கோபமும் நிரம்பியிருந்தன. கமிஷனரை கீழ்ப் பார்வையால் பார்த்தபடி வந்து நின்றான்.

''ஏதாவது சாப்பிடக் கொடுத்தீங்களா?'' என்று கேட்டார் கமிஷனர்.

''லஞ்ச்'' கொடுத்தோம். தூக்கி எறிஞ்சுட்டான் ஸார்'' என்றார் இன்ஸ்பெக்டர்.

''ஐஸீ, ஸ்டில் ஸ்டப்பர்ன்!. ஓகே. நீங்க போங்க.. ஐ வில் டாக் டு ஹிம்!'' என்று போலீஸ்காரர்களை வெளியே அனுப்பினார். கமிஷனரும் டாக்டரும் அவரது மனைவியும் பெர்னியை உற்றுப் பார்த்தனர். அவனோ கமிஷனரின் தலைக்குமேல் பார்த்தபடிக் கொண்டு ... நின்றான்.

''மிஸ்டர் ஜோஸப்! யூ மே ஸிட் டௌன்!'' என்றார் கமிஷனர்.

பெர்னி இந்த மரியாதையை எதிர்பார்க்கவில்லை. கொஞ்சம் தயக்கத்துடன் நாற்காலியில் உட்கார்ந்து கொண்டான்.

''ராஜ் என்பவனைத் தெரியுமா உங்களுக்கு?'' என்றுநேரடியாகவேதாக்குதலை ஆரம்பித்தார் கமிஷனர். பெர்னி பதில் சொல்லவில்லை. ''ஏன்?'' என்ற கேள்விக் குறி கண்ணில் தெரிந்தது.

''அவனும் உங்க ஸிஸ்டர் ஸ்டெல்லாவும் இவரோட மகளை கடத்திக்கிட்டுப் போயிருக்காங்க!'' என்றார் கமிஷனர்.

''பொய்!'' என்று பெர்னி பதட்டத்துடன் எழுந்தான். ''ஸ்டெல்லா அப்படி எதுவும் செய்திருக்கமாட்டாள்!''

''தென், ராஜ் டிட் இட்! ஸ்டெல்லாவையும் சேர்த்து கடத்திக்கிட்டுப் போயிருக்கிறான்!''

பெர்னியின் உதடுகள் துடித்தன. பேச்சு வரவில்லை. எச்சிலைக் கூட்டி விழுங்கினான்.

''மிஸ்டர் ஜோஸப்! பதட்டப்படாமே உக்காந்து நான் சொல்றதைக் கேளுங்க.. நீங்களும் உங்க ஸிஸ்டரும் பெரிய குற்றத்திலே சம்பந்தப்பட்டிருக்கீங்க...''

''நாங்க எதிலும் சம்பந்தப்படலே. வி ஆர் இன்னொஸண்ட்...'' என்றான் பெர்னி.

''தென் ப்ரூவ் இட்! எங்களோட ஒத்துழைச்சு உண்மையான குற்றவாளி யார்ன்னு கண்டுபிடிக்க உதவினீங்கன்னா உங்களுக்குப் பிரச்னையே இல்லே.. ராஜ் பற்றி உங்களுக்குத் தெரிஞ்சதைச் சொல்லுங்க...''

''எங்க ஷாப்புக்குவந்து போறவன், ஒரு லாயர். அவ்வளவுதான் எனக்குத் தெரியும்...''

''அவர் வீடு எங்கே?''

''எனக்குத் தெரியாது!''

''ஆல்ரைட்...இன்னிக்கு என்ன நடந்தது? இந்த ராஜ் என்ன செய்தான்னு உங்களிடம் சொல்றேன்.. அப்புறம் உங்க ஸிஸ்டரையும் இவரோட மகளையும் நீங்க காப்பாத்தணும்னு நினைக்கிறீங்களா பார்ப்போம்.. காலேலே உங்களை நான் அழைச்சிக்கிட்டு வந்தப்புறம் உங்க ஷாப்புக்கு ராஜ் வந்திருக்கான்... ஸ்டெல்லாவையும் தேவகியையும் தன்காரிலே கூட்டிகிட்டு உங்க வீட்டுக்குப் போய் லெசாமான்களை எடுத்துக்கிட்டு அதே காரில் ஸௌத் மெட்ரூஸிலே எங்கேயோ போயிட்டான். அந்த கார்லே தேவகியும் ஸ்டெல்லாவும் இருந்திருக்காங்க. வாலன்டரியா போறாங்களா இல்லே, கட்டாயத்தின் பேரில் போறாங்களான்னு தெரியவில்லே.. அது முக்கியமில்லே. எங்கே போயிருப்பாங்கன்னு தெரியணும்.. உங்களுக்குத் தெரிஞ்சா சொல்லுங்க.''

''எனக்குத் தெரியாது'', என்றான் பெர்னி.

கமிஷனர் பெருமூச்சு விட்டார். உள்ளே தள்ளி நாலு தட்டு தட்டிக் கேட்டால் தான் பதில் சொல்லும் கேஸ். பிடித்து வந்தது முதல் 'எனக்குத்தெரியாது', 'தெரியாது' பாட்டுத்தான்.

''மிஸ்டர் ஜோஸப்! உங்க தங்கையின் ஸேப்டி பத்தி உங்களுக்குக் கவலையில்லையா?''

''ஷி கான் டேக் கேர் ஆஃப் ஹர்ஸெல்ப்...''

''ஐ நோ, ஐ நோ. சரி உங்க விவகாரததுக்கு வருவோம். தேவ்வை பாய்ஸன் பண்ணி அவர் வீட்லே கொண்டு போட்டது பத்தி...''

''எனக்கு ஒண்ணும் தெரியாது!''

''மிஸ்டர் ஜோஸப்!'' என்று சீறினார். கமிஷனர். ''இதுவரை நயமாகக் கேட்டுப் பார்த்தோம்..இனி விசாரிக்கிற முறையிலே விசாரிக்க வேண்டிவரும்.. உங்க உடம்பு தாங்காது?''

பெர்னி பதிலே சொல்லவில்லே. கமிஷனர் இண்டர்காமில், ''டி. எஸ். பி. ராமநாதனை வரச்சொல்!'' என்றார். பிறகு,

''மிஸ்டர் ஜோஸப்! நீங்க பேச மறுத்துவிட்டால் தப்பிச்சுக்க முடியும்னு கணக்குப் போடாதீங்க. உங்களுக்கு எதிராக சில எவிடென்ஸ் கிடைச்சிருக்கு. முதலில் நேற்று இரவு மோட்டார் பைக்கிலே தேவ்வை உக்கார வச்சுப் போனீங்க. எங்க இன்ஸ்பெக்டர் பார்த்திருக்கார். சின்னதுரை பேரைச் சொல்லி தப்பிச்சுக்கிட்டீங்க... இரண்டாவது சற்று முன்னேதான் கிடைச்சுது... உங்க வீட்டை ஸர்ச் பண்ணபோது...''

''என் வீட்டை சோதனை போட்டீங்களா? எதுக்கு? ஏன்? நாங்க இல்லாத சமயத்திலே....'' என்று கத்தினான் பெர்னி. அவன் குரலிலே பீதி கலந்து தொனித்தது.

''ஸம்படி வாஸ் தேர்.... உங்க வீட்டு ஸெர்வன்டாக்கூட இருக்கலாம்.... தட் வாஸ் இனஃப் விட்னஸ் ஃபார் அஸ்.... அங்கே கிடைச்சுது தேவ்வின் மாரேஜ் இன்விடேஷன்...''

இண்டர்காம் பஸ்ஸர் ஒலித்தது. கமிஷனர் ''எஸ்'' என்றார். ''ஸெண்ட் ஹிம் இன்!'' என்றார்.

---



''அந்தக் கடைக்கு மட்டும் போய் சாராயம் குடிக்காதே. கிக்கே இருக்காது'

''ஏன்?''

'வாசலில் போர்டைப் பார். சரயக் கடை என்று எழுதியிருக்கிறான். இரண்டு காலும் இல்லே.

ஆர்.ராமு



''பம்மலுக்கு 'கம்மல்' வாங்கப் போனீங்களே என்னாச்சு?''

''கம்மல் வாங்கும் போது என் மனைவி 'தும்மல்' போட்டதால் வாங்காமல் வந்து விட்டேன்''

ஏ. வி. தேவன்

டி.எஸ்.பி. ராமநாதன் வந்தார்.

''வாங்க ராமநாதன். பி ஸிட்டட். பிங்கர் பிரிண்ட் கம்பேர் பண்ணிட்டீங்களா?'' என்று கேட்டார் கமிஷனர்.

''எஸ் சார்... இவருடைய கை ரேகை கிளியரா பதிஞ்சிருக்கு... வேற ரேகையும் இருக்கு...''

''தட் மஸ்ட் பி தேவ்ஸ். தேவ்வினுடைய ரேகையா இருக்கும்....''

''யூ வான்ட்டட் டு லுக் ஃபார் நார்சோடிக்ஸ். இந்த ஒரு பாக்கெட்தான் ஸார் கிடைச்சுது. ஏதோ கெமிக்கல் மாதிரி தோணுது. கிச்சன்ல இருந்தது.....''

டி.எஸ்.பி, ஒரு வெள்ளை பிளாஸ்டிக் பாக்கெட்டை மேஜையில் வைத்தார்.

''தட் மஸ்ட் பி பி.ஸி.பி. ஏஞ்சல் டஸ்ட்!'' என்றார் டாக்டர் பூஷணம்,

''ஸோ, மிஸ்டர் ஜோஸப்! இதைத்தானே தேவ்வுக்குக் கொடுத்தீங்க?''

பெர்னி அகப்பட்டுக்கொண்ட எலி போல் தவித்தான். முகத்தைக் கைகளில் புதைத்துக்கொண்டான்.

''இப்பவாவது உண்மையை சொல்லிடுங்க. வி நீட் யுவர் கோ ஆபரேஷன்!'' என்றார் கமிஷனர்.

''சொல்லிடறேன் சார்!'' என்று பெர்னி மெல்லிய குரலில் ஆரம்பித்தான்.

முதல் நாள் மாலை தேவ் கல்யாண அழைப்பிதழோடு வந்தது, கேக்கும் டீயும் சாப்பிட்டது, மயக்கமானது, பயந்து போய் மோட்டார் சைக்கிளில் வைத்து தேவ்வின் வீட்டில் சேர்த்தது எல்லாவற்றையும் சொன்னான்.

அவன் செத்துவிடுவான் என்று பயந்து தன்மேல் பழி வராமலிருப்பதற்காக அப்படிச் செய்ததாகச் சொன்னான்.

''நான்தான் ஸார் தேவ்வை பாய்ஸன் செஞ்சேன். மை ஸிஸ்டர் இஸ் இன்னொஸண்ட்.... அவளை விட்டுடுங்க ஸார்!'' என்றான்.

''உங்க ஸிஸ்டரைப் பத்தி நாங்க ஒண்ணும் சொல்லலியே!'' என்றார் கமிஷனர்.

பெர்னி விழித்தான்.

''புரிந்தது மிஸ்டர் ஜோஸப்... யு ஆர் நாட் கில்டி ஆஃப் எனிதிங். எக்ஸெப்ட் ஆஸ் ஆன் அகாம்பிளிஸ்... சரி.....ராஜ்ஜைப் பத்தி சொல்லுங்க!'' என்றார்.

''அவனும் தேவ்மாதிரி வந்து போகிறவன்தான்.....''

''அவனும் ஒரு டிரக் அடிக்டா?''

''ஹி நெவர் டுக் எனிதிங் வித் அஸ். அவனைப் பத்தி எனக்கு அதிகம் தெரியாது சார்... என் ஸிஸ்டருக்குத்தெரியும். அவளைக் கேட்டுக்குங்க....''

''அவளைக் கண்டுபிடிக்கத்தான் ராஜ்ஜை தேடறோம்... எங்கே போயிருப்பாள்?'' என்றார் கமிஷனர்.

''எனக்குத் தெரியாது ஸார்... ஹானஸ்ட்!'' என்றான் பெர்னி.

பெர்னியிடமிருந்து அதற்கு மேல் தகவல் ஏதும் கிடைக்காது என்று கமிஷனர் முடிவு செய்தார்.

''ஆல்ரைட் மிஸ்டர் ஜோஸப்.... இன்னிக்கு ஒரு நைட் எங்க கஸ்டடியிலேதான் நீங்க இருக்கணும்....'' என்றார்.

வெளியே காத்திருந்த போலீஸ் குழு அறைக்குள் வந்து பெர்னியை அழைத்துச் சென்றது.

''ராமநாதன். உங்க ரிப்போர்ட் இன்வென்டரி லிஸ்ட் இரண்டையும் தயார் பண்ணிடுங்க....இந்தப் பையனை இனிமே ஒண்ணும் கேக்கவேணாம்.... லாக் அப்பிலே வசதியா தூங்கட்டும்'' என்று டி.எஸ்.பி.யை அனுப்பிவைத்தார்.

''அந்த கெமிக்கல் ஸாம்பிள் கொஞ்சம் தரமுடியுமா? தேவ்வின் ட்ரீட்மெண்டுக்கு உபயோகமா இருக்கும்'' என்றார் டாக்டர் பூஷணம்.

''பை ஆல் மீன்ஸ்...இது ஹெராயின் ஜாதியைச் சேர்ந்ததா?'' என்று கேட்டார் கமிஷனர்.

டாக்டர் பூஷணம் பிளாஸ்டிக் பையைத் திறந்து ஒரு அவுன்ஸ் அளவு பவுடரை கவனமாக எடுத்து ஒரு காகிதத்தில் மடித்து சட்டைப் பைக்குள் வைத்துக்கொண்டார்.

''இது பவர்ஃபுல் ஸெடடிவ்...... மிருகங்களுக்குத் தர்ற தூக்க மருந்து. ...... இதை ஹஷிஷ்.... ஓபியம் இத்தோட கலந்தா தனியாகவோ டிரக் அடிக்குகளுக்கு வித்துடறாங்க....''

''வில் இட் நாட் கில் பீபிள்..''

''ஓவர் டோஸ் கொன்று விடும்'' ஆனா டிரக்கோட எபெக்ட்.. கிக்.. கனவு அனுபவம் எல்லாம் தருகிறதாம்.. மத்த டிரக்கை விட இது மலிவு..''

''இதை அனலைஸ் பண்ணி பாக்கப் போகிறீங்களா?..''

''ஆமா.. வேறு ஏதாவது கெமிக்கல் அல்லது விஷம் ..ஸயனைட் கூட கலக்கறாங்களாம். அதைக் கண்டு பிடிச்சுட்டா தேவ் வுக்கு சரியான ஆன்டிடோட் தந்து பிழைக்க வச்சுடலாம்.''

''குட்... அப்ப நீங்க அதை கவனியுங்க.. உங்க டாட்டரைப் பத்தித் தகவல் கிடைச்சவுடனே கான்டாக்ட் பண்றேன்.'' என்றார் கமிஷனர்.

''எப்பங்க தகவல் கிடைக்கும்?'' என்று அழுதாள் மங்கையர்க்கரசி.

''சீக்கிரமே கிடைச்சுடும்.. தி ஹோல் போலீஸ் போர்ஸ் இஸ் ஆன் த ஜாப்!'' என்றார் கமிஷனர்.

டாக்டர் பூஷணம் மனைவியை அழைத்துக் கொண்டு வெளியேறினார்.

சோர்வு மேலிட்டவராய் கமிஷனர் சுழல் நாற்காலியில் சாய்ந்து தலைக்குப் பின்னால் கைகளைக் கட்டிக் கொண்டு யோசித்தார். பிறகு எழுந்து பைலிங் காபினெட்டை அனுகி திறந்து மெல்லிய அந்தக்கோப்பை எடுத்தார்.

சின்னதுரை பற்றிய குறிப்புகள் அடங்கிய கோப்பு....

ஒன்றரை பக்கத்துக்குத் தான் தகவல் இருந்தது. எல்லாம் முன்பே படித்துத் தெரிந்து கொண்ட தகவல் தான்.

ஆனால் ஒரே ஒரு வரி மணி அடித்தாற் போல் புதிய செய்தியை தெரிவித்தது;

''சின்னதுரை: ஆல்ஸோ ஓன்ஸ் எ ஃபார்மாஸூடிகல்ஸ் பாக்டரி லொகேடட் அட் மகாபலிபுரம் ரோடு அவுட்ஸைட் திருவான்மியூர். இட் இஸ் கால்ட் ட்விலைட் பார்மாஸூடிகல்ஸ். ..''

சின்னதுரை மருந்து தயாரிக்கும் பாக்டரியின் சொந்தக்காரன்.. போதை மருந்து தயாரிக்கும் பாக்டரியா..?

கமிஷனர் தன் இருக்கையில் மீண்டும் அமர்ந்து கொண்டார். அவர் கூப்பிட நினைத்த போதே இண்டர்



செயற்குழு உறுப்பினர்கள் கூட்டம் என்பது தனித்தனியாக ஒன்றும் செய்ய இயலாதவர்கள், ஒன்றாக இணைந்தும் எதுவுமே செய்ய இயலாது என்று முடிவெடுக்கும் ஒரு அமைப்பு.

சங்கர்

''இவர் தான் காதலித்த பெண்ணை மணந்து கொள்ள முடியாமல் போய்ப் பைத்திய மானவர். அந்தப் பெண் இவரை ஏமாற்றி விட்டு வேறொருத் தரைத் திருமணம் செய்து கொண்டதால் இவர் இப்படி ஆகி விட்டார்.

''அங்கே சுவரை ஓங்கி ஓங்கி அறைந்து கொண்டிருக்கும் பைத்தியம் யார்?'

'வேறொருத்தர் - அவளைத் திருமணம் செய்து கொண்ட வர்"

ஆர்.ராமு





இங்கே இதோ பக்கத்திலேயே

கசாங்காடு கிராமத்தில் 950 குடும்பங்கள் உள்ளன. அங்கே கடந்த முப்பது வருடங்க ளாய், பீடி, சிகரெட் விற்பனை செய்யப்பட்டது கிடையாது. சாராய கள்ளுக்கடைகள் கிடை யாது. ஆயிரக் கணக்கான தென்னை மரங்கள் இருந்தும் கள் இறக்குவது இல்லை.

கசாங்காடு, இங்கே, நம் புதுக்கோட்டைக்குப் பக்கத் திலிருக்கும் ஒரு கிராமம்தான்.

--சன்டே--ராமுசாமி

ஙாம் பஸ்ஸர் ஒலித்தது. டி எஸ் பி ராமநாதன்பேசினார்.

''கண்ட்ரோல் ரூமிலிருந்து மெஸேஜ் வந்திருக்கு சார். அந்த ஹெரால்டு கார் ஒருவேனுடன் மோதி டுச்சாம். ஆனா காரில் ஒரு பெண்மட் டுமே டிரைவர் சீட்டில் அடிபட்டுக் கிடக்கிறாளாம்....''

''வாட்?.. எந்த இடத்திலே..?''

''சி.பி.ராமஸ்வாமி ரோடு முனை யிலே சார். கிரீன்வேஸ் ரோடு திருப் பம்....''

''ராஜ் கார்லே இருந்தானா?''

''தெரியலை சார். வி பெட்டர் கோ டு த ஸ்பாட்..,'' என்றார் ராம நாதன்.

கமிஷனரும் டி எஸ் பி யும் விபத்து நடந்த இடத்தை அடைந்த போது இரவு கவிழ்ந்து விட்டது. ஹெரால்டு கார் வேனுடன் மோதிய நிலையில் அப்படியே இருந்தது. ஸ்டாண்டர்டு வான்.. முகப்பில் கவர்மெண்ட் ஆஃப் தமிழ்நாடு.. என்று எழுதியிருந்தது.

காரை ஓட்டி வந்த பெண்ணை ஆம் புலன்ஸில் ஏற்றிக் கொண்டிருந்தார் கள்.... ஸர்ச் லைட் வெளிச்சத்தில் கூட்டம் அலை மோதியது. போலீ ஸார் தடிகளைக் கழற்றி விரட் டிக் கொண்டிருந்தார்கள்.. போலீஸ் சூபரிண்டன்ட் ஒருவர் கமிஷனரை வரவேற்றார்,

'ஆக்ஸிடெண்ட் எப்ப நடந்தது'

"ஆறு மணியிருக்கும் சார். எங்களுக்கு மெஸேஜ் கிடைச்சு ஐந்து நிமிடத்திலே வந்துட் டோம்?''

கமிஷனர் ஆம்புலன்ஸை அணுகி அடிபட்ட பெண்ணைப் பார்த்தார்,

''இந்தப் பெண் ஸ்டெல்லா!. காரில் இவரோட இருந்தவங்க? ராஜ்? தேவகி?''

''யாரையும் காணோம் சார்... வேன் டிரைவரை பிடிச்சு வச்சிருக் கோம். ஸ்டேட் கவர்மென்ட் வேன்... கார்லே இந்தப் பெண் அருகில் இன் னொரு பெண் இருந்ததாம்.... அவ வெளியே விழுந்திட் டாளாம். பின்னாடி ஒரு மட்டாடார் வேன் வந்து அந்தப் பெண்ணை மட்டும் தூக்கிட்டு போயிட்டுதாம்!''

''வாட்?.... கூப்பிடு அந்த ஆளை!" என்றார் கமிஷனர்.

(தொடரும்)



# ஏஞ்சல் டஸ்ட்

கி. கஸ்தூரிரங்கன்

## 21. கோன்ஸால்வேஸ்

சரவணன் கவர்ன்மெண்ட் டிரைவர். ஹைவேஸ் டிபார்ட்மெண்ட். சாந்தோமிலிருந்து சைதாப்பேட்டைக்குப்போய்க் கொண்டிருந்தான். கிரீன்வேஸ் ரோடில் முன்னே போய்க் கொண்டிருந்த ஹெரால்டு சிக்னல் தராமல் சரேலென்று வலது பக்கம் சி. பி. ராமஸ்வாமி ரோடில் திரும்பியதால் 'விபத்து ஏற்பட்டுவிட்டது.

மற்ற டிரைவர்களானால் ஓடியிருப்பார்கள். சரவணன் 20வருடம் சர்வீஸ் போட்ட பொறுப்பான அரசாங்க சிப்பந்தி. விபத்து ஏற்பட்டதும் முதல் கடமையாக அடிபட்டவர்களை ஆஸ்பத்திரியில் சேர்ப்பது தன் பொறுப்பு என்று செயல்பட்டான்.

வேனுக்கு அதிக சேதம் இல்லை. ஆனால் ஹெரால்டு ஒரு பக்கம் நொறுங்கி டிரைவர் சீட்டில் இருந்த அந்த 'சட்டைக்காரப்' பெண் அதிகம் ரத்தம் சிந்திக் கொண்டிருந்தாள். மயக்கமாகியிருந்தாள். ஸ்டீயரிங் கீழே சிக்கிக் கொண்டிருந்தாள்.

மறுபக்கம் பிளாட்பாரத்தில் இன்னொரு பெண் 'ஒரு தினுசாக' புடவை கட்டிய நிலையில் விழுந்திருந்தாள்.

விபத்தைப் பார்த்து வழக்கமாகச் சேர்ந்துவிடும் கூட்டம் சளசளவென்று பேசிக் கொண்டு ஒதுங்கியே நின்றது. யாரும் உதவ முன் வரவில்லை.

அப்போது அந்த மாட்டாடர்வேன் விரைவாக வந்தது. சரவணன் கையசைத்து நிறுத்த நினைக்கும்போதே நின்றது.

உயரமாக ஒல்லியாக அரும்பு மீசை வைத்த இளைஞன் பதறிக் கொண்டு வந்தான்.

''ஏன்யா மசமசன்னு நிக்கிறே. ஒரு கைபிடி. இந்தப் பெண்ணை ஆஸ்பத்திரியிலே சேர்க்கணும்?'' என்று அவனாகவே முன் வந்தான்.

இருவருமாக வேனில் அந்தப் பெண்ணைக் கிடத்தினார்கள்.

''டிரைவர் பெண்ணுக்கு அடிபட்டிருக்கு. அவுங்களையும் எடுத்துப்போணும்'' என்று சரவணன் சொன்னபோது அந்த இளைஞன் காருக்குள் புகுந்து அந்தப் பெண்ணை வெளியே இழுக்க முயன்றான். முடியவில்லை.

இதற்குள் போலீஸ் வண்டிகளின் சைரன் ஒலி கேட்டது.

''போலீஸ் வந்துதான் இவளை எடுக்கமுடியும். முதல்லே அந்தப் பெண்ணை ஆஸ்பத்திரியிலே சேர்த்திட்டு வந்திடறேன்'' என்று சொல்லிவிட்டு பதிலுக்குக் காத்திராமல் வேனைத் திருப்பிக் கொண்டு போய்விட்டான் அந்த இளைஞன்.

இந்த விவரங்களை நூறு கேள்விகள் கேட்டு சரவணனிடமிருந்துதெரிந்து கொண்டார் கமிஷனர்.

''எந்த ஆஸ்பத்திரியிலேன்னு சொன்னுை?'' என்று கேட்டார்.

''வி. எச். எஸ். அடையாறுன்னு சொன்ஞரு. இந்தப் பெண்ணையும் அங்கியே கொண்டு வரச் சொன்ருரு'' என்ருன் சரவணன் வெகுளித் தனமாக.

கமிஷனர் பல்லைக் கடித்தார்.

ஆம்புலன்ஸ் சார்ஜென்ட் ''எங்கே போகட்டும்'' என்று கேட்டார்.

''ஜி. எச்.சுக்குப் போங்க. டி. எஸ். பி. ராமநாதன் கூடவரார். அந்தப் பெண்ணை எப்படியாவது பிழைக்க வச்சுடணும்னு சொல்லுங்க....''

''எஸ் சார்'' என்றனர் போலீஸ் அதிகாரிகள்.

''இன்ஞெரு விஷயம்.. இந்தப் பெண்ணுக்கு பிளட் டிரான்ஸ்ஃப்யூஷன் தேவைப்படலாம்.. இவளுடைய அண்ணன் பெர்னியையும் அழைச்சிட்டுப் போஙக'' என்ருர்.

வேனையும் காரையும் சுற்றி இரண்டு போலீஸ்காரர், போலீஸ் புகைப்படக்காரர் தவிர எல்லோருமே கலைந்து போஞர்கள். தடைப்பட்ட டிராபிக் விபத்துக்குட்பட்ட வண்டிகளைத் தவிர்த்து ஒருக்களித்த பாட்டையில் தம் இயக்கத்தை தொடர்ந்தன.

கமிஷனர் போலீஸ் ஜீப்பிலிருந்தபடியே கன்ட்ரோல் மூலம் தொடர்பு கொண்டு தேவகியைத் தூக்கிச் சென்ற வண்டியைத் தேடிப்பிடிக்குமாறு நகரெங்கும் உள்ள காவல் நிலையங்களுக்குச் செய்தி அனுப்பச்சொன்ஞர்.

பிறகு வண்டியை வி. எச். எஸ். ஆஸ்பத்திரிக்குச் செலுத்தச் சொன்ஞர். அவர் எதிர்பார்த்தபடியே அங்கே தேவகி கொண்டு வரப்படவில்லை.

''ராஜ் என்பவன் தான் தேவகியைத் தூக்கிப் போயிருப்பான்.. அடையாறு பக்கம் போனதாக அந்த டிரைவர் சொன்ஞன். தட் மீன்ஸ்.. சின்னதுரையின் பாக்டரிக்குப் போயிருக்கலாம்.''

''வாட் பாக்டரி?'' என்ருர் உடன் இருந்த சூப்பரின்டென்ட்.

''மினிஸ்டரின் ஸன் சின்னதுரை ஒரு பார்மஸூடிக்கல்ஸ் பாக்டரி வச்சிருக்கான். மகாபலிபுரம் ரோடு. அவுட்ஸைட் திருவான்மியூர் ..இந்த ராஜீக்கும் அவனுக்கும் தொடர்பு இருக்குன்னு தெரியுது. 'போத் ஆர் இன்வால்வ்ட் இன் டிரக் டிராஃபிக்''

''பாக்டரி பேர் தெரிஞ்சா கண்டு பிடிக்கலாம்'' என்ருர் எஸ்பி.

''ட்விலைட். ஃபார்மஸூடிகல்ஸ். திருவான்மியூர் போலீஸ் ஸ்டேஷனைக் கூப்பிட்டுக் கேளுங்க..''

சூபரின்டெண்ட் வயர்லெஸ் டெலிபோனில் பேசினர்.

''இப்படியே மேற்கே போஞ அந்த பிரிட்ஜ் தாண்டி இருக்குதாம். ஆன் ஐஸலேடட் பில்டிங்.. ரோடிலிருந்து ஒரு கிலோ மீட்டர்..!'' என்ருர் எஸ்பி.

இருட்டில் அந்தக் கப்பி ராஸ்தா இருந்த இடமே தெரியவில்லை. ஒரு மைல் தாண்டிப் போய் பிறகு திரும்பி வந்து கண்டுபிடித்தார்கள். இருட்டு முனையில் வெளிச்சம் தெரிந்தது.

ஃ ஃ ஃ

போலீஸ் வரும் என்று சின்னதுரை எதிர்பார்த்திருந்தான். இத்தனை சீக்கிரம் மோப்பம் பிடித்து வந்து விட்டதைப் பற்றி ஆச்சரியப்பட்டான்.

---




விமானி: பிரயாணிகளுக்கு ஓர் அறிவிப்பு: ''இயந்திரக் கோளாறு காரணமாக இனி விமானம் மேலும் பறக்காது. தயவு செய்து எல்லோரும் இறங்கி விடவும்....



''நல்லவேளை. இன்னும் கால் மணி முன்னாடி வந்திருந்தாங்கன்னா நல்லா மாட்டிகிட்டிருப்பேன்'' என்று சந்தோஷப்பட்டான்.

அவனுடைய டிரைவர் முனுசாமி வந்து விடுவித்தபோது ஸ்டெல்லாவைக் கண்டுபிடித்து அவளைக்கொல்ல வேண்டும் என்ற வெறி எழுந்தது. அவனது வலது கண்ணில் வலி விண் விண் என்று தெறித்தது.

''போலீசிடம் நேரே போயிருப்பா. அதுக்குள்ள அவளை மடக்கிடணும்''

''நான பிடிச்சிட்டு வந்திடறேன் தொர'' என்று ராஜ் வேனை எடுத்துக் கொண்டு புறப்பட்டான்.

''போலீஸிடம் மட்டும் மாட்டிக் காதே...'' என்று எச்சரித்து அனுப்பினான் சின்னதுரை.

அவன போன பிறகு சுறுசுறுப்பாக செயல்பட்டான். போலீஸ் எந்த சமயத்திலும் வரலாம். அதற்குள் தடையங்களை அழித்துவிடவேண்டும்.

ஸயன்டிஸ்ட் கோன்ஸால்வேஸைக் கூப்பிட்டான்.

''ஹலோ, டாக்! நீங்க கோவாவுக்குப் போகணும்னு ரொம்ப நாளாச் சொல்லிக் கிட்டிருந்தீங்களே!'' என்று ஆரம்பித்தான்.

''எஸ், எஸ்!'' என்முர் டாக்டர் கோன்ஸால்வேஸ்.

கோன்ஸால்வேஸ் கோவாவில் பிறந்தவர். பம்பாயில் மூன்று வருடம் பார்மஸி படித்தவர். படிக்கும்போதே பெதடின் ஊசி போட்டுக்கொள்ளும் பழக்கம் ஏற்பட்டுவிட்டது.

அதன் பிறகு டிரக் அடிக்டுகளின் தொடர்பு. நிறையப் பேருக்கு போதை மருந்து ஊசி போட்டார். சினிமா நட்சத்திரங்கள், பெரிய இடத்துப் பெண்கள், மாணவர், ஹிப்பிகள் என்று பலதரப்பட்ட போதை-அடிமைகள் அவரை நாடி வந்தார்கள். அவர்கள் தாம் அவருக்கு டாக்டர் பட்டம் கொடுத்திருந்தனர்.

வரவர டாக்டர் நிதானத்தில் இருக்கும் நேரம் குறையலாயிற்று. பிஸினெஸ் படுத்துவிட்டது. இடையில் ஒரு போலீஸ் ரெய்டு நடந்தது. அவரைக் கண்காணிக்க ஆரம்பித்தனர்.

டாக்டர் சென்னைக்கு ஓடி வந்து விட்டார். சின்னதுரையின் அறிமுகம் கிடைத்தது. அவருடைய யோசனையின் பேரில் தான் 'ட்விலைட் பார்மஸுடிகல்ஸ்' உருவாயிற்று.

டாக்டருக்கு இருப்பிடமும் உணவும் பெதடின் சப்ளையும் தொடர்ந்து கிடைத்து வந்தது.

ஃபாக்டரியில் உற்பத்தி தடை யில்லாமல் நடந்தது. ராஜ் விநியோகத்தைக் கவனித்துக் கொண்டான்.

எல்லா செலவும் போக மாதம் ரூ 20,000க்கு குறையாமல் வருமானம் கிடைத்துவந்தது. சின்னதுரை அமோகமாக இருந்தான். அவனுடைய தந்தை தேர்தலில் நின்ற போது ஐந்து லட்சம் வரை கறுப்புப் பணமாகவே தந்துதவினன். பையனின் பார்மஸுடிகல்ஸ் பாக்டரி இத்தனை லாபகரமாக நடந்துவருவது பற்றி அப்பாவுக்கு சந்தோஷம். போதை மருந்து உற்பத்திக் கிடங்காக அது இயங்கிவருவது பற்றி அவருக்குத் தெரியாது.

ஐந்து வருடங்களாக கொழித்துக் கொண்டிருந்த ஒரு வசதியான வியாபாரத்துக்கு இப்போது ஆபத்து வந்து விட்டது.

சின்னதுரை பாக்டரியை வேறு இடத்திற்கு மாற்றிவிடுவது என்ற முடிவுக்கு வந்தான். கோவா நல்ல இடம். டாக்டருக்கு அங்கே ஒரு வீடு இருந்தது. அதையே பயன்படுத்திக் கொள்ளலாம் என்று அவரிடம் சொன்னன்.

''பன்டாஸ்டிக் ஐடியா! நானே எல்லா ஏற்பாடுகளையும் செய்து தரேன்'' என்றார் டாக்டர் உற்சாகமாக.

''இங்கே இருக்கிற சரக்கு டிஸ்டலரி எல்லாத்தையும் வேனிலே வச்சு எடுத்துப் போயிடுங்க. ராஜ் உங்களை கொண்டு சேர்த்திடுவான்.!''

''எப்போ புறப்படறோம்'' என்றார் டாக்டர்.

''இப்பவே, ராஜ் வெளியே போயிருக்கிறன். திரும்பி வந்தவுடனேயே கிளம்பணும்.''

பாதாளக் கிடங்கிலிருந்து எல்லா சரக்கையும் எடுத்து வெளியே கொண்டு வைத்தார்கள். கண்ணாடி சாமான்களை அட்டைப் பெட்டிகளில் அடுக்கி பாதுகாப்பாகஎடுத்து வைத்தார்கள்.

அந்த வேலை முடிந்த சமயம் ராஜ் புயலாக வந்தான்.

''ஒரு சிக்கல் நேர்ந்திடுச்சு தொரெ'' என்றபடியே வேனிலிருந்து குதித்தான்.

''என்ன ஆயிட்டுது. பொண்ணுங்க ரெண்டும் எங்கே!''

---



''பிரேக் பிடிக்காத நம்ப பஸ் சென்ட்ரல் உள்ளே பத்தாவது பிளாட்பாரத்துக்குள் நுழைந்து விட்டது. பிரயாணிகள் அனைவரும் ஐம்பது காசு தாங்க. உங்களுக்குப் பிளாட்பாரம் டிக்கெட் வாங்கித் தரேன்,''

''ஆக்ஸிடென்டிலே மாட்டி கிட்டாங்க ஸ்டெல்லாவுக்கு நல்ல அடி. காரிலேந்து எடுக்க முடியலே. தேவகி கீழே விழுந்திருந்தா...இவளே மட்டும் தூக்கிட்டு வந்திட்டேன்.'' என்று வேனில் மயங்கிக் கிடந்த தேவகியைக் காட்டினன் ராஜ்.

''ஸ்டெல்லா....செத்துட்டாளா?''

''நாட் எட்...போன மாதிரிதான். அவளேயும். தூக்கி வரலாம்னு முயற்சி பண்ணேன் தொர. அதுக்குள்ள போலீஸ் வந்திடுச்சு.....''

''ஆல்ரைட்...தேவகி வண்டியிலே யே இருக்கட்டும். ரொம்ப அடிபட்டி ருக்குதா?''

''தெரியல தொர. பட் ஷி இஸ் அலேவ் மண்டையில் அடிபட்டிருக்க லாம். ஆனு ரத்த காயம் இல்லே!''

''சரி இப்ப இவளே இங்கவச்சுக்க முடியாது. நான் ஒரு ஐடியா பண்ணி யிருக்கேன்....

''இவளே எங்கேகொண்டுபோறது?''

''அதான் சொல்றேன்... சரக்கு எல்லாம் வேனிலே ஏத்தி கிட்டு ஸயன்டிஸ்டையும் அழைச்சுகிட்டு போ.. தேவகி வண்டியிலேயேஇருக் கட்டும்... நேரே கோவாவுக்குப் போறீங்க. இவர் வீடு அங்கே இருக்கு ஹி வில் டேக் கேர் ஆஃப் யூ'' என்ருன் சின்னதுரை.

''ரியலி... ரொம்ப தேங்ஸ் தொர.. எப்ப கிளம்பணும்.''

''இந்த நிமிஷமே... போலீஸ் தேடிகிட்டு இங்கே வரலாம்.... அதற்குள்ளே நீ சிடிய் விட்டே போயிடணும்.. டேக் திஸ்''.

ராஜ் கையில் ஒரு கத்தை ரூபாய் நோட்டுக்களே திணித்தான் சின்ன துரை.

''இந்தப் பணம், 2 லட்ச ரூபாய் பெறுமானமுள்ள சரக்கு... தேவகி. இட் இஸ் ஆல் யுவர்ஸ்!... ஒரு வார த்துக்குப் பிறகு நான் கோவா வர் ரேன். பஞ்சிம்லே ஸயன்டிஸ்டு அட் ரஸ் எங்கிட்ட இருக்கு. அங்கே மறுபடியும் பிஸினெஸ் ஆரம்பிக் கிருேம்....''

''பிரமாதம் தொர. எல்லாத்தை யும் யோசிச்சு வச்சிட்டீங்க....''

''சீக்கிரம்..டோன்ட்வேஸ்ட்டைம். போ!'' என்று துரிதப்படுத்தினன்



விமானி (பிரயாணிகளிடம்): ஏனய்யா,சொன்னுத்தெரியாது. இதென்ன பஸ்ன்னு நினேப்பா? படிக்கட்டிலும், இறக்கையிலும் தொத்திக்கிட்டு.... இறங்குங் கய்யா!''

சின்னதுரை. அட்டைப் பெட்டிகள் ஒரு டஜனுக்கு மேல் இருந்தன. அறைபோல் இருந்த வேனின் இரு ஓரத்திலும் அடுக்கினர்கள். நடுவே நீளவாட்டில் தேவகி குப்புறப்படுத் திருந்தாள். அசையவே இல்லே.

அவளேப் பார்க்க பரிதாபமாக இருந்தது.

''ஸ்டுப்பிட் கர்ல்... அநாவசியமா தலேயைக் கொடுத்து ஆபத்திலே மாட்டிகிட்டா...'' என்ருன்.

''ஷி வில் பி ஸேஃப் வித் மீ தொர. நான் அவளே ஆயுசுக்கும் காப்பாத்து வேன்!'' என்ருன் ராஜ் உணர்ச்சி யுடன்.

''அவளிடம் எச்சரிக்கையா இரு. ஸ்டெல்லாவிடம் நான் ஏமாந்தது மாதிரி நீயும் ஏமாந்திடாதே!'' என்ருன் சின்னதுரை.

பின் கதவை தாளிட்டு பூட்டிய பின் ராஜ்வேனில் ஏறிக் கொண்டான். அவன் பக்கத்தில் கோன்ஸால்வேஸ் ஏறி உட்கார்ந்து கொண்டார்.

''போய் வரோம் தொர. தாங்க் யூ!''

''மெயின்ரோடை விட்டுடு.. சித்தூர் ரோடைப் பிடிச்சா சீக்கிரம் ஸ்டேட் பார்டரைத்தாண்டி விடலாம்....அப்புறம் போலீஸ் பயமில்லே!'' என்று விடை கொடுத் தனுப்பினன் சின்னதுரை. ராஜ் போன பத்து நிமிடத்திற்குள் பாக் டரியை நோக்கி கார் ஹெட்லேட் வெளிச்சம் விரைந்து வருவதைக் கவனித்தான்.

(தொடரும்)

# தாய்வழிப் பாட்டி

நினைவுப்பாலங்கள்

பெ. நா. அப்புஸ்வாமி

என் தாய்வழிப் பாட்டி - என்னுடைய தாயின் தாய்-செந்நிறமான மேனியும், உடல் அழகும், நீண்ட கூந்தலும் உடையவள்; சிரித்த முகத்தினள்; தம் கணவன் மீது மிக்க அன்பு உடையவள். செல்வம் மிக்க குடும்பத்தில் பெண் வாரிசாகப்பிறந்தவள். அவளுக்கு, நான் அறிய, இரண்டு பெண் குழந்தைகளும், மூன்று ஆண் குழந்தைகளும் இருந்தார்கள். இரண்டொருவர் பிறந்து இறந்ததாகக் கேட்டிருக்கிறேன். அவளுடைய குழந்தைகளுள் என் தாயாரே மூத்தவள். அவளும் என் பாட்டியார் பாட்டனும், திருநெல்வேலி நகருக்கு மேற்கே தாமிரபருணி ஆற்றின் வலது கரையில் அந்த ஆற்றிலிருந்து ஒன்றே கால் ஒன்றரை மைல் தொலைவுக்கு அப்பால் உள்ள பத்தமடை என்னும் கிராமத்தில், பிறந்தவர்கள்.

அந்த ஊர் சிறிய ஊர்; ஆனாலும், புகழ்பெற்ற ஊர். கோயிலாலோ தெய்வத்தாலோ அன்று. அந்த ஊரில் மேலைத் தெரு, கீழைத்தெரு என்று இரண்டு தெருக்கள் - பார்ப்பனர் வாழும் பகுதியில் இருந்தன. அந்த இரண்டு தெருக்களின் மேற்குக் கோடியில் கிழக்கு நோக்கிய விஷ்ணு கோயில் ஒன்று இருக்கிறது.

இந்த இரண்டு கோயில்களைத் தவிர, சிவன் கோவில் ஒன்றும், அந்த ஊரில் இருந்தது. அந்தக் கோயிலின் பக்கத்தில் ஒரு குளமும் இருந்தது. பார்ப்பனர் தெருக்கள் இரண்டுக்கும் இடையே அந்த ஊரில் வாய்க்கால் ஒன்று ஓடிவருகிறது. அந்த வாய்க்காலைக் கடப்பதற்கு பாலமும் இருக்கிறது. அந்த வாய்க்கால் சில மாத காலம் நீர் நிரம்பி, சலசலத்து ஓடும். வேனிற் காலத்தில் ஒரு சொட்டு நீர் கூட இல்லாதபடி வறண்டு போகும். அப்போது மேலைத்தெரு மக்கள் தங்கள் தெருவின் மேற்கு ஓரத்தில் உள்ள குளத்தையும், கிழக்கு ஓரத்தில் உள்ள பெரிய பொதுக் கிணற்றையுமே, பயன்படுத்துவார்கள்.

அந்த ஊரில் இருந்த உயர் நிலைப் பள்ளி புகழ் பெற்றது. அக்கம் பக்கத்து ஊர்களிலிருந்து பல மாணவர்கள் அந்தப் பள்ளியில் படித்துச் சிறப்புடையவர்கள் ஆனார்கள். அங்கே படித்த இருவர் ஐ. சி. எஸ். தேர்வில் தேறி, சென்னை மாநிலத்தில் மிக மிக உயர்ந்த பதவிகளைப் பெற்றார்கள். இன்னும் ஒருவர் பம்பாய் மாநிலத்தில் உயர்ந்த பதவியைப் பெற்றார். இன்னும் ஒருவர் பர்மாவில் பேராசிரியர் பதவியை ஏற்று, இரசாயனத் துறை நிபுணர் ஆனார்.

அந்தப் பள்ளிக்கூடத்தின் வரலாறு சிறப்புடையது. தமிழர்களே வாழ்ந்து வந்த அந்த ஊரில் குடியேறியதும்; கன்னடமும், மகாராஷ்டிரமும் பேசியதுமான பிறமொழிக் குடும்பம் தமிழ் மக்களோடு இனிதாக வாழ்ந்து வந்தனர்.

ஆங்கில மொழியின் அடிப்படையில் பாடங்களைக் கற்பிக்கும் பள்ளிக்கூடம் ஒன்றை அந்தக்குடும்பத்தலைவர் தொடங்கி நடத்தி வந்தார். பிறகு அவ் ஊரில் செல்வம் மிக்க குடும்பம் ஒன்றைச் சேர்ந்த இராமசேஷ ஐயர் என்பவர் அந்தப் பள்ளிக்கூடத்தை அந்தக் குடும்பத்தினரிடமிருந்து விலை கொடுத்து வாங்கி, வளர்த்து, பேரும் புகழும் உடைய உயர்நிலைப் பள்ளியாக உருப்பெறச் செய்தார். இப்பொழுது அது அவருடைய பெயரால் ராம சேஷ ஐயர் ஹைஸ்கூல் என்று வழங்கி வருகிறது. அந்தப் பகுதியிலே, ஆங்கில முறைக் கல்வியின் வித்தை விதைத்துப் பேணி வளர்த்து, பலர்க்கும் அறிவு என்னும்



# ஏஞ்சல் டஸ்ட்

கி.கஸ்தூரிரங்கன்

## 22. கமிஷனர் & சின்னதுரை

'பாக்டரி'யின் வாசல் கதவு திறந்து இருந்தது கண்டு கமிஷனர் ஆச்சரியப்பட்டார். உள்ளே கால் வைத்தும் இன்னும் ஆச்சரியப்பட்டார். நியான் விளக்குகளின் வெண்ணொளியில் குளித்துக் கொண்டிருந்தது வரவேற்பறை. கார்ப்பெட்டும், சோபாக்களும் கண்ணாடி அலமாரிகளும் இருந்தன. ஹாலில் யாரையும் காணோம். ..

''யார் உள்ளே?' என்று குரல் கொடுத்தார் கமிஷனர். பக்கத்து அறைக் கதவு திறந்து சின்னதுரை வெளிப்பட்டான். போலீஸ் அதிகாரிகள் நிற்பதைக் கண்டு கண்களை அகல விரித்தான்.

'வாட் ஏ ஸர்ப்ரைஸ்! கமிஷனர் ஸார் எங்கே இவ்வளவு தூரம்?'' என்று கேட்டான்.

''மிஸ்டர் சின்னதுரை... உங்களை இந்த நேரத்தில் இங்கே டிஸ்டர்ப் செய்ய வேண்டியிருக்கு... சில கேள்விகளுக்கு நீங்கதான் பதில் சொல்ல முடியும்.'

''நானு? கேள்விகள் எதைப் பத்தின்னு தெரிஞ்சுக்கலாமா?'

''ராஜ், ஸ்டெல்லா, தேவகி..... இந்த மூணு பேரும் இங்கே வந்ததாக தகவல் கிடைச்சுது..'

''என்ன கேட்டீங்க?..... புரியும்படியா இப்படி உக்காந்துகிட்டு கேளுங்க''. என்று சோபாவைகாட்டினான் சின்னதுரை. கமிஷனரும் எஸ்.பி.யும் அருகருகே சோபாவில் அமர்ந்தனர். சின்னதுரை வாசலைப்பார்த்திருந்த சோபா ஒன்றில் அமர்ந்து கொண்டான். வெளியே போலீஸ் ஜீப்பும் அதனருகில் இரு போலீஸ்காரர்களும் நின்று கொண்டிருந்ததைக் கவனித்தான் உள்ளுக்குள் வியர்த்தது. பயத்தை வெளியே காட்டிக் கொள்ளாமல் புன்னகை செய்தான்.

'இது பாக்டரி ப்ரமிஸஸ் . மாதிரி இல்லையே. சோபா.. கார்ப்பட்டுன்னு பங்களா மாதிரியில்ல இருக்கு?'' என்றார் கமிஷனர்.

'வரவேற்பறை அலங்காரமா இருந்தாத்தான் கஸ்டமரை இம்பரஸ் பண்ண முடியும்? பின்னாலே வொர்க் ஷாப் இருக்கு அங்கேதான் பாக்டரி சூழ்நிலை இருக்கும்.''

'ஐஸீ.. என்ன ப்ராடக்ட் செய் றீங்க...''

''புரோட்டீன் பில்ஸ்... ட்விலைட் புரோட்டீன் டானிக்.'

''ம்.. ரொம்ப நேரம் வேலை செய்யறீங்க போலிருக்கு..''

''நாட் அட் ஆல்... இன்னிக்கு பாக்டரி லீவு. நான் மட்டும் ரிலாக்ஸ் பண்ணிக்கலாம்னு வந்தேன்... ஏதாவது சாப்டுகிட்டே பேசுவமே. வாட் வில்யு ஹாவ்.. ஸ்காட்ச்.பீர்?'

'வாட்?'

''நத்திங் ராங் இன் தட். எங்கிட்ட பர்மிட் இருக்கு நீங்களும் ரொம்ப நேரம் டியூடியிலே இருந்திருப்பீங்க?'

'மிஸ்டர் சின்னதுரை.. நான் வந்தது சோஷல் கால் இல்லை... ஐ ஹாவ் நோ டைம் டு வேஸ்ட். நான் கேட்கிற கேள்விகளுக்கு ஒளிவு மறைவு இல்லாம பதில் சொல் வீங்கன்னு எதிர்பார்க்கிறேன்.'

சின்னதுரை தோள்களைக் குலுக் கினான்..

'ராஜ், ஸ்டெல்லா. தேவகி.... மூணு பேரும் ஒரு ஹெரால்ட் கார்லே இங்கே வந்தாங்க' என்றார் கமிஷனர்.

'ஹெரால்ட் கார்? ராஜ், தேவகி, ஸ்டெல்லா கேள்விப்பட்ட பேர் களாகத்தான் இருக்கு. ஆனால் அவங்க யாரும் இங்கே வரலே'

'உடனே இல்லேன்னு சொன்னா எப்படி மிஸ்டர் சின்னதுரை! அந்தப் பெண்கள் ரெண்டு பேரும் அதே கார்லே திரும்பிப் போகும் போது ஒரு விபத்திலே சிக்கிகிட்டாங்க..'

'விபத்தா? மைகாட்! எங்கே, எப்ப?

''ஒன் அவர் முன்னாடி... அடை யாறு கார்னரிலே... ஸ்டெல்லாங் கற பெண்ணுக்குப் பலமா அடி.. தேவகி காருக்கு வெளியே விழுந் திட்டா.. அவளை யாரோ உங்க கம்பனி வேன்ல வச்சு தூக்கிட்டுப் போயிருக்காங்க..

'அப்படியா? பட் ஹௌ இஸிட் பாஸிபிள்? என்னோட வேன் டெலி வரிக்காக ஆந்திராவுக்கு காலையிலே யே போயிட்டுதே.. திரும்பி வர இரண்டு நாளாகும்!'

''அப்படின்னா நீங்க எல்லாத்தை யுமே மறுக்கிறீங்க இல்லையா.....'

'அந்த மூணு பேரும் இங்கே வந்தது, உங்க வேன் விபத்து நடந்த இடத்துக்குப் போனது...'

''நான் பகல் 12 மணியிலேந்து இங்கதான் இருக்கேன்.. யாரும் இங்க வரல்லே கமிஷனர் ஸார்!'

''அவங்களைப் பத்தி உங்களுக்கு ஒன்றும் தெரியாது இல்லையா?'

'எவங்களைப் பத்தி!'

'ராஜ், தேவகி, ஸ்டெல்லா!'

சின்னதுரை நெற்றியை விரல் களால் அழுத்தி யோசித்தான்..

'அந்தப் பெண்கள் பேர் கேள் விப்பட்ட மாதிரி இருக்கு.. பிராட் வே மியூஸிக் ஷாப்புக்கு நான் போற போது ஸ்டெல்லாங்கற பொண்ணு



அங்கே இருந்துருக்கு. ஹி ஹாஸ் குட் நாலெட்ஜ் ஆப் பாப் மியூசிக்! அவளுடைய ப்ரதர் கூட ஒத்தன்'

'பெர்னி, பெர்னாட் ஜோஸப்!'

'எஸ். அதுவேதான் அந்தப் பொண்ணை அங்கே பார்த்திருக்கேன் அவ்வளவு தான்.. அவ இங்கே.. வர சந்தர்ப்பமே இல்லியே.

அப்புறம் இன்னொரு பொண்ணு பேர் தேவகி. பேரு கேள்விப்பட்டது தான். ஆனா அவளை நான் பார்த்த தேயில்லே!'

''உங்க பிரண்டு தேவ்... ஆட்டமோ பைல்ஸ் கம்பெனி சிவபாத சுந்தரத் தின் மகன். அவனுக்காக நிச்சயிக்கப் பட்ட பெண் தேவகி....''

''ரைட் யு ஆர்!... ஸண்டே அன்னிக்கு அவங்க மாரேஜ் இல்லே?..இன் விடேஷன் வந்திருக்கு....''

''தட் மாரேஜ் இஸ் போஸ்ட் போன்ட்... ஸ்டெல்லாவும் பெர்னி யும் சேர்ந்து தேவ்வுக்கு டிரக் ஒவர் டோஸ் கொடுத்து அவன் கோமா



விலே கிடக்கிறுல்... தேவகி ம்யூஸிக் ஷாப் போல போது ராஜ் அங்கே போயிருக்கான். அவனும் ஸ்டெல்லாவும் சேர்ந்து தேவகியைக் கடத்திக் கிட்டு இங்கே வந்தாங்க....''

''கமிஷனர் ஸார்.... பெரிய பெரிய வார்த்தையெல்லாம் பேசறீங்க... ஐ'ம் ஸாரி ஃபர் தேவ். பட் ஐ டோண்ட் நோ எனிதிங் அபௌட் இட். நீங்க இங்கே வந்து இப்படி அபாண்டமா பேசறதே என்னை இன்ஸல்ட் செய்யிற மாதிரி இருக்கு'' என்றுன் சின்னதுரை கோபத்துடன்.

''ஆல் ரைட் மிஸ்டர் சின்ன துரை. என் கடமையை நான் செய்ய வேண்டியிருக்கு.... இந்த பாக்டரியைச் சுற்றிப் பார்க்கலாமா?'' என்று எழுந்தார் கமிஷனர்.

''பை ஆல் மீன்ஸ்.... இடம் கொஞ்சம்தான்..... இந்த ஹால், பக்கத்திலே ஒரு படுக்கை அறை... நான் ரிலாக்ஸ் பண்ணிக்க இங்க தான் வருவேன்.... யு நோ.... வீட்லே அப்பாவைப் பார்க்க வர்ர கூட்டம் எந்நேரமும் கஜகஜன்னு இருந்து கிட்டே இருக்கும்......''

'நீ மந்திரியின் பிள்ளை என்று எனக்குத் தெரியும்'' என்று கமிஷனர் மனதில் சொல்லிக் கொண்டார். அருகே கதவைத் திறந்து படுக்கை யறைக்குள் எட்டிப் பார்த்தார்.

நுரை மெத்தை பரப்பிய ஒற்றைக் கட்டில். அருகே ஸைட் டேபிளில் ரேடியோவும் - கடிகாரமும். சுவரோரமாக வார்ட்ரோப் ஆளுயரத்துக்கு நின்றது. எல்லாம் நவீனமாக பளபளவென்றிருந்தன.... பெரிய ஜன்னல்கள்.. ஒன்றில் கர்ட்டன்களைக் காணோம்...இன்னொன்றில் பாதி கர்ட்டன். கீழ்ப் பாதியை ஒரு ஏர் கண்டிஷனர் அடைத்திருந்தது..

கமிஷனர் உள்ளே சென்று சுற்றிப் பார்த்தார். ஒரு தலைகாணி உறை கிழிந்திருந்தது. அலமாரியைத் திறந்தார். சில பெட்ஷீட்டுகள். இரண்டு தலைகாணிகள்.... ஹாங்கரில் நைட் கோட்டு ஒன்று. சின்னதுரை உபயோகிப்பதாக இருக்கும்... சில டவல்கள்..

கமிஷனர் பாத்ருமைத் திறந்தார். யாரோ குளித்து விட்டுப் போன மாதிரி நீர் இறைந்திருந்தது.

மார்பிள் தொட்டி காலியாக இருந்தது. கீழே ஒரு மூலையில் புடவை ஒன்று சுருட்டிக் கிடந்தது.

கமிஷனர் அதை எடுத்துப் பார்த்தார். ஈரம் சொட்டியது. காலையில் தேவகி அவரைப் பார்க்க வந்தபோது, இதே மாதிரிதான் ஒரு புடவை கட்டியிருந்தாள்.

சின்னதுரை பின்னுல் வந்து நின்றுன்.

''கமிஷனர் ஸார் என்ன தேடறீங்க? புடவை? ஓ ஹெவ ஸ்டுப்பிட ஆஃப் ஹர்?'' என்றுன் அவசரமாக.

''இது யாருடைய புடவை மிஸ்டர் சின்னதுரை?'' என்று கேட்டார் கமிஷனர்.

''மை ஒய்ப்.... என் பெண்டாட்டி என்னுடை வந்திருந்தாள். குளிச்சா.... இப்படியே போட்டுட்டு போயிட்டா.... ஷி ஆல்வேஸ் டஸ் தட்!''

கமிஷனர் புடவையைக் கீழே போட்டார். சின்னதுரையுடன் வெளியே வந்தார்.

''உங்க பாக்டரியைக் காமிக்கிறீங்களா?''

''அது பின்னுலே இருக்கு... இங்க எல்லாம பாதத்திட்டீங்களா.....''

''பார்த்த வரை போதும்... பாக்டரிக்கு வழி எப்படி.....'

சின்னதுரை ஹாலின் பின் கோடிக்குச் சென்றிருந்த கதவைத் திறந்தான். அது சுவரின் பின் மறைந்தது. பின்னுல ஆஸ்பெஸ்டாஸ் கூரையின் கீழே ஒரு ஷெட்... ஒரே ஒரு மெஷின்.......

''டாய்லெட்ஸ் பண்ற மெஷின். இப்போ வேலை செய்யலே....''

''ஸ்டாக் ஒண்ணும் காணுமே....'

''நோ புரொடக்ஷன். ரா மெடீரியல்..... ஆட்டிமறச்சி ஸெக்ஸ் பங்ளூரிலிருந்து வரணும்.... பதினைந்து நாளா வரலே... எங்கிட்டே இருந்த கடைசி ஸ்டாக்கையும் காலையிலே தான் ஆந்திராவுக்கு அனுப்பிச்சேன்.....'' என்றுன் சின்னதுரை.

எவ்வளவு இயல்பாகப் புளுகுகிறுன் என்று நினைத்துக் கொண்டார் கமிஷனர்.

''சரி. போகலாம்'' என்று திரும்பினார்கள். ஹாலில் வரும் போது படுக்கை அறைக்கு எதிர் சோடியிலிருந்த சமையல் அறை கண்ணில்பட்டது. அங்கே நுழைந்து பார்த்தார்.. காஸ் அடுப்பு ஒன்று... ஒரு அலமாரியில் பிஸ்கெட் பாக்கெட்டுகள்... விஸ்கி பாட்டில் ஒன்று... வேறொன்றும.. இல்லை.

கிச்சனின் இன்னொரு கதவு டைனிங் ஹாலில் திறந்தது..... டைனிங் டேபிளுக்குப் பக்கத்தில் உயரமாக நின்ற பிரிஜ்ஜைப் பார்த்தார் கமிஷனர்..

அருகே சென்று திறந்தார். அரை டஜன் பீர் பாட்டில்கள், ஷாம்பேயின் பாட்டில் ஒன்று, பழ வகைகள் வெண்ணெய், பிரெட்....

கதவை மூடினார். பிரிஜ் ஒரு இஞ்ச் நகர்ந்தது.

''எ ஃபிரிஜ் ஆன் வீல்ஸ்!'' என்று அதிசயித்தார்.

''அதைத் தள்ளுங்க... ஒரு அதிசயம் காத்திருக்கு!'' என்றான் சின்னதுரை.

கமிஷனர் பிரிஜ்ஜைத் தள்ளினார். நாலடி நகர்ந்தது.

சின்னதுரை குனிந்து ஒரு பிடியைத் தூக்கி இழுத்தான். திட்டிக் கதவு மேலே வந்தது. படிகள் தெரிந்தன.

''இது என் ஸீக்ரெட் கோடவுன்... பாதுகாப்புக்காக... கொஞ்சம் முன்னாடி வந்திருந்தீங்கன்னா.... அதாவது ஒரு மாதத்துக்கு முன்னே வந்திருந்தா ஒரு பொக்கிஷம் மாதிரி வேல்யு பின் சரக்கு பார்த்திருப்பீங்க. இப்ப எல்லாமே காலி. நோ ஸ்டாக்!'' என்று பெருமூச்செறிந்தான் சின்னதுரை.

கமிஷனர் வியப்பு மேலிட்டவராய் படிகளில் இறங்கினார். பளீரென்று விளக்கொளி பாதாள அறையை நிரப்பி உள்ளே ஒன்றுமில்லை என்று காட்டியது.

ஏதோ மருந்தின் நெடி மட்டும் தங்கி இருந்தது. நார்க்கோடிக்ஸ் போதை மருந்துதான். சந்தேகமில்லை. சின்னதுரை எல்லாவற்றையும் அப்புறப்பட்டுத்திவிட்டான்.... ஆளவர் பாஸ்டர்ட்!

கமிஷனர் ஏமாற்றத்துடன்மேல் ஏறி வந்தார்.



''இதென்னப்பா பஸ் இஞ்சின் உள்ளே இருந்துகுறட்டை ஒலி கேட்குது?''

''அது ஸ்லீப்பர் பஸ் ஆச்சே சார்!''

---

''புரொடக்ஷன் இல்லாம உங்க பிஸினஸ் எப்படி நடக்கும் மிஸ்டர் சின்னதுரை?'' என்று கேட்டார்.

''இப்பதான் இரண்டு வாரமா இல்லே. ரா மெடீரியல் வந்தவுடனே ஆரம்பிச்சுடுவேன்.... நம்ம சரக்குக்கு டிமாண்ட் ஆல் ஓவர் இண்டியா!'' என்றான் சின்னதுரை பெருமையாக.

''நைட்லகூட இங்கதான் இருப்பீங்களா?''

''நோ நோ. கொஞ்ச நேரத்திலே வீட்லேந்து வண்டி வந்துடும்... நோ நைட் ஹால்ட் ஹியர்.''

''தனியா இருக்கிங்க.... பயமா இல்லே?...''

''என்ன பயம்? அதுவும் போலீஸ் அதிகாரிங்க ஸர்ப்பிரைஸ் விஸிட் தர்றபோது?'' என்று கண்களைச் சிமிட்டினான் சின்னதுரை.

என்ன தைரியம், என்ன திமிர் என்று மனதிற்குள் பொருமினார் கமிஷனர்.

''தேங்க்யூ மிஸ்டர் சின்னதுரை. ஸாரி டு ஹாவ் டிஸ்டர்ப்ட் யு அட் திஸ் டைம்!'' என்று விடை பெற்றுக் கொண்டார்.

''யு ஆர் வெல்கம் எனிடைம்!'' என்று சிரித்தான் சின்னதுரை.

போலீஸ் ஜீப்பிலிருந்த போலீஸ்காரர் வேகமாக வந்தார்.

''ஸார்... ரேடியோ கண்ட்ரோலிலேந்து கூப்பிடறுங்க'' என்றார்.

கமிஷனர் சூபரின்டெண்டைக் கேள்விக்குறியுடன் பார்த்துவிட்டு, ஜீப்பை அணுகினார். போனில் பேசினார். அதே வேகத்தில் திரும்பிவந்தார்.

''மிஸ்டர் சின்னதுரை யு ஆர் அண்டர் அரஸ்ட். உங்களைக் கைது செய்கிறேன்'' என்றார் கமிஷ்னர் அமைதியாக.

-(தொடரும்)

# துளஸாவின் கண்ணீர்க் கதை

துளஸாவின் கண்ணீர்க் கதை துளஸா என்ற பதின்மூன்று வயதுப் பெண் நேபாள நாட்டில் காட்மாண்டுக்குப் பக்கத்திலுள்ள ஒரு சிறிய கிராமத்தைச் சேர்ந்தவள். ஒருநாள் சில ஈவிரக்கமற்ற பாவிகளால் பம்பாய்க்குக் கடத்தப்பட்டு, இரண்டு நாளாக ஒரு பங்களாவில் பூட்டி வைக்கப்பெற்றிருந்தாள். பின்னர் அந்தப்பாவிகள் துலி என்னும் பெயர் கொண்ட ஒரு மாதிற்கு அவளை விற்றுவிட்டனர். இந்தத் 'துலி' என்பவள் ஒரு விபசார விடுதித் தலைவி. தினம் குறைந்தது 10 வாடிக்கையாளர்களையாவது திருப்திப்படுத்துமாறு துளஸாவைப் பணித்தாள்.

பின்னர் 'ரீடா' என்ற பெண்ணிடம் 'துளஸா'வை ரூ. 7500-க்கு விற்றுவிட்டாள். அங்கு அன்றாடம் ரூபாய் 35-லிருந்து 50 வரை வாடிக்கையாளர்களிடமிருந்து சம்பாதித்துக் கொடுத்தாள் துளஸா. இருந்தும் அவளுக்கு கிடைத்த சாப்பாடோ மதியம் கொஞ்சம் நீர்த்த பருப்பும், சாதமும் இரவில் சிறு துண்டு ரொட்டியும் தான். சிலநாளில் ரீடா துளஸாவை ரூ. 7000-க்கு கௌரி என்பவளிடம் விற்றுவிட்டாள்.

இந்த கௌரியும் ஒரு விபசார விடுதித் தலைவிதான். இவளின் வாடிக்கையாளர்கள் பெரும்பாலும் அராபியர்கள். இவள் ஒரு இரவுக்கு சுமார் 150 ரூபாய்வரை துளஸாமூலம் பெற்றுக் கொண்டிருந்தாள். துளஸாவை ஒருபோதும் கௌரி தனித்து விடுவதேயில்லை. அவளின் ஆட்கள் துளஸாவை எந்நேரமும் கண்காணித்துக்கொண்டிருந்தனர். கடைசியாக வந்த ஒரு அராபிய வாடிக்கையாளன் துளஸாவுக்கு பரிசாகத் தந்த கைக்கடிகாரத்தைக் கூட கௌரி பிடுங்கிக்கொண்டாள்.



பின்னர் துளஸாவை நோய்வாய்ப்பட்ட நிலையில் தனியார் ஆஸ்பத்திரி ஒன்றில் கௌரி சேர்த்துவிட்டாள். அந்தமருத்துவ மனையின் டாக்டர் நல்ல மனதோடு அவளை பம்பாயிலுள்ள பெரிய ஆஸ்பத்திரியில் சேர்த்துவிட்டார்.

தன்னை எப்படியாவது தன் பெற்றோர்களிடம் அனுப்பி வைக்குமாறு துளஸா டாக்டர்களிடம் கெஞ்சி கேட்டுக்கொண்டிருக்கிறாள். தன் தாய் தன்னை நிச்சயம் வரவேற்பாள் என்றும் நம்புகிறாள்.

நன்றி: டெக்கான் ஹெரால்டு

- ஜானகி பாண்டியன்.

விடப் பத்திரிகைகளுக்குப் படங்கள் வரைந்து கொடுக்கலாம் என்று முதலில் ஆலோசனை கூறியவரே இவரது தந்தை தான்.

10-10-1958. குமுதம் இதழில் இவர் வரைந்த முதல் படம் வெளி வந்தது.

1964-ம் ஆண்டில் ஜெயராஜ் நகைச்சுவை துணுக்குகளை எழுத ஆரம்பித்தார், குமுதம்' வார இதழில் இவருடைய துணுக்குகள் ஏராள மாக வெளியாயின. இவர் கதை களுக்கு நகைச்சுவையுடன் படங்களைப் போட ஆரம்பித்ததும் இதற்குப் பிறகு தான். முதன் முதலில் சற்று மாறுத லான பாணியில் நகைச்சுவையாகப் படங்கள் வரைந்தது 'அப்புசாமியும் சீதாப்பாட்டியும்' என்ற கதைக்கு. இதே பாணியில் 'காதல் காவலர் அப்புசாமி' என்ற முழுநீள சித்திரத் தொடரும் இவருடைய படங்களு டன் குமுதம் இதழில் பிரசுரமாகியது.

1980-ல் சாவி வார இதழின் ஆசிரி யர் சாவியுடன் ஐரோப்பிய நாடுகள், அமெரிக்கா, இங்கிலாந்து, ஆகியநாடு களில் ஐந்து வாரங்கள் சுற்றுப் பயணம் மேற்கொண்டார்.

காதல் காவலர் அப்புசாமி என் றால் ஜெயராஜுக்கு கொள்ளை ஆசை போலும். இவருடைய லெட்டர் ஹெட்டிலும் அப்புசாமி தான் பிர மாதமாகக் காட்சி அளிக்கிறார்.



ஒருத்தி: இப்போதெல்லாம் தாராளமாய் செலவழிக்கிறாயே? எப்படி பணம்கிடைக்கிறது?

மற்றொருத்தி: (கண்ணடித்து விட்டு) அவருக்கு ஓவர் டைம் அதான்.



பெரிய பாராட்டு விழா. மூன்று மாதத் துக்கு முன், நீரில் மூழ்கிய பெண்ணைக் காப்பாற்றிய தற்காகப் பதக்கம் கொடுத்தார்கள். விழா முடிந்தது. வெளியில் வரும் போது ''கங்கிராஜுலேஷன்ஸ்'' சொன்னார் பெண்ணின் அப்பா, ''நீங்க அப்பாவாகப்போறீங்க.''

•●•



பணக்காரப் பெண்ணுடன் ஓட்டல் அறையில் உறவில் இருந்தான் ஒருவன். திடீரென போலீஸ் வந்து கதவைத் தட்டியது.

''வெளியே போய் விடுங்கள்.''

''வெளியில் போலீஸ் இருக்கிறது.''

''சரி, ஜன்னலை த்திறந்து குதியுங்கள்.''

''நாம் இருப்பது பதிமூனாவது மாடி.''

''மூட நம்பிக்கைகளுக்கெல்லாம் இதுவல்ல நேரம். குதியுங்கள் சீக்கிரம்.''

•●•



''நீ கர்ப்பமாகி விட்டாயாமே! அதற்குக் காரணம் நானாக இருந்தால், என்னை மன்னித்து விடு'' என போன் வந்தது. அவளோ அலுத்துக் கொண்டாள். ''சே! காலையிலிருந்து இது முப்பத் தெட்டாவது ஆள்! ஒருத்தராவது பேரைச் சொல்ல மாட்டேன் -என்கிறார்கள்.''

தொகுப்பு: எஸ். சந்திரமௌளி



# ஏஞ்சல் டஸ்ட்

கி.கஸ்தூரிரங்கன்

## 23. சி. ஐ. டி. பாண்டியன்

பாண்டியன் பிராட்வேயில் லாட்டரி டிக்கெட்டுகளை மூன்று மாதங்களாக விற்றுக் கொண்டிருந்தான். சி.ஐ.டி. டிபார்ட்மெண்டில் அவனைப்போல பொறுப்பும் திறமையும் உள்ளவர்கள் யாருமில்லை என்று அவன் பெயரெடுத்திருந்தான்.

மியூசிக் ஷாப்பை கண்காணிக்கும் பொறுப்பு அவனிடம் ஒப்படைக்கப் பட்டபோது பெரிய அளவில்போதை மருந்து கடத்தல் இங்கே நடப்பதாகச் சொன்னார்கள், போகிறவர் வருகிறவர்களைப்பற்றி விசாரித்து நார்கோடிக்ஸுக்கு தெரிவிப்பது அவன் வேலை.

கொஞ்சம் கொஞ்சமாக சந்தேகத்தை ஊர்ஜிதம் செய்யும் விவரங்கள் அவனுக்குக் கிடைத்து வந்தன. வருபவர்களில் கேஸட், ரிகார்டு, இன்ஸ்ட்ருமெண்ட் என்று கேட்டு வருபவர்கள் அதிகம் பேர் இல்லை. முகம் ஒட்டி, கண்கள் பளபளத்த போதைமருந்து அடிமைகள் பலர் உள்ளே போய் வந்தார்கள்.

மியூசிக் கிளப்பை நடத்தும் ஸ்டெல்லா என்ற பெண்ணை நிதானத்தில் இல்லாத சமயங்களில் பார்த்திருக்கிறான். சில பெரிய இடத்துப் புள்ளிகள் வந்து போவதையும் அவன் கணக்கெடுத்து வைத்திருந்தான். அவன் சேகரித்த தகவல்களை வைத்து இரண்டு நாளில் ரெய்டு நடத்தப் போவதாகச் சொன்னார்கள்.

அதற்குள் ஒரு புதிய விளைவு. கமிஷனரே நேரில் வந்து விசாரிக்கும் அளவுக்கு பெரிய விஷயமாகப் போய்விட்டது.

கூப்பிட்டால் உள்ளே போகலாம் என்று வாசலிலேயே காத்திருந்தான். பதினைந்து நிமிஷத்தில் அவரே பெர்னியைத் தள்ளிக் கொண்டு வெளியே வந்தார். அவரோடு வந்த டெண்டைப் பார்த்துக் கொள்ளும்படி ஜாடையாகச் சொல்லிவிட்டுப் போனது முதல் கண்குத்திப் பாம்பானான்.

சற்று நேரத்தில் அந்தச் சிவப்பு-வெள்ளை ஸ்டாண்டர்ட் ஹெரால்டில் ராஜ் வந்தான். அவன் இங்கே அடிக்கடி வந்து போவதைக் கவனித்திருக்கிறான். கடைக்கு போதை மருந்துகளை சப்ளை செய்கிறவன் இவன்தான் என்று அனுமானித்து வைத்திருந்தான்.

களும் ...

காரில் ஏறுவதைப் பார்த்தான். வெங்காளி பாணியில் காதில் வளையம் மாட்டியிருந்த அந்த அழகான பெண்ணுக்கு இவர்களுடன் என்ன சகவாசம்? அவள் வலுக்கட்டாயமில்லாமல் தானே அவர்களுடன் சென்றதாக அவனுக்குத் தோன்றியது.

காரைத் தொடர்ந்து செல்வதும் கஷ்டமாக இல்லை. தூரத்திலிருந்தே வா-வா என்று கூப்பிடும் பளீர் சிவப்பு-வெள்ளை அது போய் நின்ற அந்த புரசவாக்கம் வீடும் அவனுக்குத் தெரியும். ஸ்டெல்லாவையும் பெர்னியையும் தொடர்ந்து ஒருமுறை வந்திருக்கிறார். வார இறுதியில் அங்கே மாமூலாக சில பேர் கூடி ஆடுவதையும் குறிப்பெடுத்திருக்கிறான்.

ராஜ்ஜும் ஸ்டெல்லாவும் உள்ளே போனபோது இந்தப் புதுப்பெண் அவள் பெயர் தேவகி என்று பின்னால் தான் தெரிந்தது. காரிலேயே குடித்து மீண்டும் தூங்கிப்போனாள். என்ன அசதியோ?

இந்தப் பெண்ணுக்கு நான் தான் பொறுப்பு என்று அப்போதே முடிவு செய்து கொண்டான். இவள் ஏதோ ஆபத்தில் மாட்டிக் கொள்ளப்போகிறாள் என்று உள்ளுணர்வு எச்சரித்தது.

ராஜ் என்னும் அந்த அயோக்கியன் அவளைப் பார்த்த பார்வையே சரியில்லை. "நான் இருக்கிறேன், பயப்படாதே!" என்று அந்தப் பெண்ணிடம் போய் சொல்ல வேண்டும் என்று தோன்றியது. லாட்டரி டிக்கெட்டை எடுத்துக்கொண்டு காரிடம்போனான். அப்போதும் அந்தப் பெண் தூங்கிக் கொண்டுதான் இருந்தாள். அவன்மீது எறிந்து விழுந்த ராஜ்ஜிடம் தன்னைக் காட்டிக் கொடுத்துக் கொண்டது தான் மிச்சம்.

அதனால்தானோ என்னவோ காரை முன்னைவிட வேகமாக அதிகம் வளைத்து ஓட்டினான் ராஜ். காலேஜ் ரோடு வரை தூரத்தி வந்தவன் ஒரு திடீர்



வளைவில் கார் காணுது போய்விட்டது கண்டு திடுக்கிட்டான்

இப்படிப் போயிருக்கக் கூடும் என்று அனுமானித்து ஹாடோஸ் ரோட்டிலிருந்து ஜெமினி வரை தேடிப்பார்த்துவிட்டான் கிடைக்கவில்லை. தாஜ் ஜின் எதிரே நின்ற சி.ஐ.டி. சகாதேவலுவும் அந்த மாதிரி கார் அந்தப் பக்கம் வரவேயில்லை என்று சொன்ஞன்.

அப்புறம் கமிஷனரிடம் போய் தான் தோற்றுப்போனதைச் சொன்ன போது அவருக்கு பெரிய அதிர்ச்சியாகிப் போய்விட்டது.

'உன்னை நம்பி தந்தப் பெண்ணை ஒப்படைந்தேனே?' என்று அவர் சொல்லாமல் சொல்லியது அவனை மிகவும் உறுத்தியது.

ஒரே சீராக திறமையில்லாதவன் என்று பெயர் வாங்கியிருந்தால் பரவாயில்லை. திறமைசாலி என்று பெயர் வாங்கிவிட்டு ஒரு பெரிய விஷயத்தில் கோட்டை விட்டால் அவனைப் பற்றி எல்லோரும் என்ன நினைப்பார்கள்?

கமிஷனரின் உயர்ந்த மதிப்பிலிருந்து, நம்பிக்கையிலிருந்து விழுந்து விட்டேனே என்று நெஞ்சு விண்டு போனது.

எப்படியாவது அந்த ஹெரால்டை கண்டுபிடித்துவிடுவது என்று மோட்டார் சைக்கிளில் அலைந்தான் உஸ்மான்ரோடு முனையில் அந்த மாதிரி வண்டியை அந்த மாதிரி பிரயாணிகளுடன் சைதாப்பேட்டை பக்கம் போவதைப் பார்த்ததாக டிராபிக் சார்ஜெண்ட் தகவல் சொன்னதும் சைதாப்பேட்டை கிண்டி, மீனம்பாக்கம் வரை தேடினுன். ஏர்போர்ட்டிலும் புகுந்து விசாரித்தான். அவ்வப்போது கன்ட்ரோலுடன் போனில் தொடர்பு வைத்துக் கொண்டும் இருந்தான்.

பொழுது சாய்ந்துவிட்டது. இனி மேல் பிரயோசனமில்லை என்று நம்பிக்கையை இழந்துவிட்டு சுரத்தில்லாமல் திரும்பினுன். இன்னும் ஒரு முறை கன்ட்ரோலுக்கு டெலிபோன் செய்திருந்தால் ஹெரால்டு காருக்கு நேர்ந்த விபத்து பற்றியும் தேவகியைக் கடத்திச் செல்லும் வேன் பற்றியும் தகவல் கிடைத்திருக்கும். அவனுக்கிருந்த மனச் சோர்வில் எதுவும் தோன்றவில்லை.

ஸ்டெல்லாவின் வீட்டுக்குப் போய் இன்னொரு முறை அந்த ஆயாவை மிரட்டி விசாரிக்கலாம் என்று முடிவு செய்தான். முன்னே விசாரித்த போது அவருக்கு ஒன்றுமே தெரியாது என்று சாதித்து விட்டாள். இப்போது ஸ்டெல்லாவிடமிருந்து தகவல் வந்திருக்கலாம். அவள் திரும்பி வந்திருக்கக் கூடும். கொஞ்சம்நம்பிக்கையுடன் மோட்டார் சைக்கிள் வேகத்தைக் கூட்டினுன்.

தேவகிக்கு உணர்வு சீக்கிரமே வந்துவிட்டது. இடது மணிக்கட்டில் முறிவு ஏற்பட்டிருக்க வேண்டும். பொறுக்க முடியாத வலி. விறுவிறுவென்று வீக்கம்.

தேவகி சட்டென்று எழுந்து உட்கார்ந்து கொண்டாள். இதென்ன, இருட்டறை? இல்லை ஏதோ டெலிவரி வேன். சாமான்களுக்கிடையே கிடத்தப்பட்டிருந்தாள்.

பகீரென்று பயம் அடி வயிற்றைப் பற்றியது. காரில் ஸ்டெல்லாவுடன் போய்க் கொண்டிருந்தாள் இதில் எப்படி வந்தாள்? ஆ, அந்தப் பயங்கர விபத்து?

தேவகிக்கு தலை சுற்றியது

காலை வீட்டைவிட்டு வெளியேறியது முதல் விபத்து வரை அடுக்கடுக்காக நிகழ்ந்த சம்பவங்கள் நினைவுக்கு வந்தன. அதற்கு முத்தாய்ப்பாக இந்த வேனில் எங்கேயோ கொண்டு செல்லப்படுகிருள். இது யாருடைய வண்டி?



தலைவர்: 'பவர் கட்'டுன்னுலே எனக்கு 'திக்'குன்னு இருக்கு!

தொண்டர்: ஏங்க!

தலைவர்: மேலிடத்திலிருந்து வர ''பவர் கட்''டோன்னு!

ஸ்டெல்லாவுடன் வரும் போது ட்விலைட் பார்மாஸூடிகல் என்று எழுதியிருந்த ஒரு வேனைப்பார்த்தாள். அதுவாக இருக்கலாம். கார் விபத்துக்குள்ளான போது வெளியே விழுந்து விட்டாள். அதிகம் அடிபடவில்லை போலிருக்கிறது. கை மணிக்கட்டில்தான் ஏதோ சேதம்.

இப்படியே வலியுடன் எத்தனை நேரம் இங்கே அடைப்பட்டிருக்க முடியும்.

தேவகி எழுந்து உட்கார்ந்து கொண்டாள். வண்டி ஓட்டத்தில் ஏகமாய் குலுங்கியது. எழுந்து நிற்க முற்பட்டாள். தடுமாறியது.

திடீரென்று வேனின் வேகம் குறைந்தது. ஒதுங்கி நின்றது

தேவகி எழுந்தாள் முன்பக்கம் டிரைவர் சீட்டைப் பிரிக்கும் தடுப்பு முழுதும் அடைத்திருந்தது. சிறிய கம்பிதைத்த பலகண் மூடியிருந்தது.

பின்பக்கம் இரட்டைக் கதவுமேலே சிறிய கண்ணாடி ஜன்னல்கள். கதவு வெளிப்பக்கம் பூட்டியிருந்தது.

கண்ணாடி வழியாகப் பார்த்தாள். பெட்ரோல் பங்க் போல தெரிந்தது.

''கம் ஆன் க்விக். சீக்கிரம் நிரப்பு'' என்று அவசரப்பட்ட குரலை உடனே அடையாளம் கண்டு கொண்டுவிட்டாள். ராஜ் தடியன் மீண்டும் அவளை கடத்திக் கொண்டு போகிறான்!

கதவை அதிரத் தட்டி உதவிக்கு யாரையாவது வரவழைக்கலாம் என்று நினைத்தாள். ஆனால் பெட்ரோல் பங்க் ஆளைத் தவிர வேறு யாருமில்லை போல் தோன்றியது.

வேண்டாம், அவளுக்கு நினைவுவந்து விட்டது, என்று அறிந்தால் அவன் ஏதாவது மிருகத்தனமாக செய்து விடக்கூடும். கதவு திறக்கும் போது பார்த்துக் கொள்ளலாம் என்றுமுடிவு செய்தாள்.

வண்டிசடுதியில்புறப்பட்டுவிட்டது. தலை தெறிக்கும் வேகத்தில் ஓடியது.

தியாகராயநகர் வெங்கடநாராயணா ரோடு திரும்பிய போது சேமியர்ஸ் ரோடு பக்கத்திலிருந்து சரேலென்று பாய்ந்து வந்தது அந்த வேன். அவனை ஒரு நொடியில் கடந்து சென்றது.

அனுமதிக்கப்பட்ட வேகத்தைவிட அதிகமாக விரையும் அந்த வேனைப் பின் தொடர்ந்தான் பாண்டியன்.

நெரிசலான டிராபிக்கில் சுலபமாக முன்னேறுவதற்கு வேகமாகச் செல்லக் கூடிய பஸ் அல்லது வேறு பெரிய வாகனத்தைப் பின்பற்றுவது ஒரு நல்ல வழி.

அந்த வேனை ஓட்டிய டிரைவர் திறமைசாலியாக இருக்க வேண்டும். இருட்டில் முகம் தெரியவில்லை. லாகவமாக ஓடித்து வேகம் குறையாமல் சென்றான்.

மட்டடார் வேன் பின்பக்கம் இரட்டைக் கதவு பூட்டியிருந்தது. சிறு வெண்டிமலட்டர் மாதிரி கண்ணாடி ஜன்னல்கள் 'ட்விலைட் ஃபார்ம்..என்று பாதி எழுத்துக்கள் அழிந்திருந்தது. ஏதோ டெலிவரி வேன்...

தேவகியைப் புதிய கவலை சூழ்ந்து கொண்டது. வண்டி எங்கே போய் நிற்கப் போகிறதோ? அத்துவானமான இடத்தில் பழைய வீடு ஒன்றில் அவளை அடைத்து வைக்கலாம் அப்புறம் எப்படித் தப்பிப்பது!

தேவகி அருகிலிருந்த அட்டைப் பெட்டி ஒன்றைத் திறந்தாள். சிறு சிறு பாலிதீன் பைகள் அடுக்கியிருந்தன. கண்ணாடி வழியாக ஊடுருவிய சாலைவிளக்கு வெளிச்சத்தில் உள்ளே வெண்மையான பவுடர் இருப்பது தெரிந்தது. ஏஞ்சல்டஸ்ட்!

இதைத் தேடித்தானே இத்தனை தூரம் அலைந்தாள்

## வாசகர் குரல்

ஒரே ஒரு விளக்கம்

தினமணி கதிர் கிறிஸ்துமஸ் சிறப்பிதழில் 'வழி காட்டிகள்' என்ற தலைப்பில் என்னைப் பற்றி வெளியான கட்டுரையில் குறிப்பிட்டுள்ள திரு எம். அடைக்கலசாமி என்பவர் எனது மைத்துனர் மட்டுமல்ல. இவ்வளவு முன்னேற்றத்திற்கெல்லாம் அவர் தான் காரணம். தொழிலில் எனது வழிகாட்டி. தந்தையைப் போன்றவர் தத்துவஞானி தன்னுடைய கடும் உழைப்பால் முன்னுக்கு வந்தவர். அவருடைய ஊக்கத்திலும் ஆக்கத்திலும் துவக்கப்பட்ட எங்கள் நிறுவனங்கள் இன்று ஆல்போல் தழைத்து வளர்கின்றன.

ஏ. ஜமலி, திருச்சி.

தேடிவந்தது கைக்குக் கிடைத்த சூழ்நிலையை நினைத்து மனம் வெதும்பினாள்

தேவகி எழுந்து கண்ணாடி வழியாக சாலையைப் பார்த்தாள்

மோட்டார் சைக்கிளில் ஓர் மீசை வைத்த ஆள் தொடர்ந்து வந்து கொண்டிருந்தான். பிராட்வே முனையில் பார்த்த லாட்டரிடிக்கட் ஆள் போலத் தோன்றியது. நிச்சயமாகத் தெரியவில்லை.

வேன் பனகல் பூங்காவை பிரதட்சணம் செய்து கொண்டு முன்னேறியது. பாண்டியன் ஐந்தடி இடைவெளியில் தொடர்ந்தான். ஆர்காட் ரோடு முனைவந்து விட்டது. வேன் தயங்கி இடது பக்கம் திரும்பியது.

பாண்டியன் வலது பக்கம் திரும்பி வள்ளுவர் கோட்டம் வழியாகப் போய்விடலாம் என்று நினைத்தான்.

தேவகி தடதடவென்று கதவை அதிர்ந்து தட்டினாள். மோட்டார் சைக்கிள் இரைச்சலில் அவனுடைய காதுக்குக் கேட்கவில்லை. வேன் ஒரு சாலை முனையில் திரும்பியது.

தேவகி குனிந்து இன்னொருபெட்டியில் கைவிட்டாள். ஒரு கனமான கண்ணாடிக் குடுவை தட்டுப்பட்டது. அதை எடுத்து கண்ணாடி ஜன்னலில் அடித்தாள். சிலுங்கென்று உடைந்தது.

'சிலுங்' என்று கண்ணாடி உடையும் சத்தம் கேட்டு உஷாரானான்.

அந்த வேனின் கண்ணாடிக் கதவு உடைபடுவதைத் திரும்பிப் பார்த்தான்.

வண்டிக் குலுக்கலில் தெறித்து விட்டது போலும் என்று நினைத்தான்.

மறுபடியும் 'சிலுங்'... இரண்டாவது கண்ணாடியும் உடைந்து விழுந்தது.

பாண்டியன் மோட்டார் சைக்கிளைத் திருப்பி வேனின் பின்னால் விரைந்தான். பக்கவாட்டில் சென்று டிரைவரை நிறுத்தச் சொல்லி குரல் கொடுத்தான். அவன் காதில் வாங்கிக் கொள்ளவே இல்லை. மாறாக வண்டியின் வேகத்தை துரிதப்படுத்தினான்.

''சே, மடையன்! நிறுத்த மாட்டறேங்கறானே!'' என்று திட்டிக் கொண்ட பின் தங்கினான் பாண்டியன்.

வேன் அவனைக் கடந்து முன்னே சென்றது. பாண்டியன்மேல் பொத்தென்று ஏதோ விழுந்து ரோடில் உருண்டது.

துணுக்குற்றுப் பார்த்தான். ஒரு வெள்ளை பாலிதிலீன் பை. அரை லிட்டர் ஆவின் பால் அளவுப்பை. எடுத்தான். உள்ளே வெண்மையாகப் பவுடர்.

பாண்டியன் ஏறிட்டுப் பார்த்தான். வேன் முன்னே போய்க் கொண்டிருந்தது. உடைந்த கண்ணாடி ஜன்னல் வழியாக பாலிதீன் பைகள் வீசி எறியப்படுவது போல் விழுந்து கொண்டிருந்தன. ஒன்று இரண்டு மூன்று..

ஜன்னல் வழியாக ஒரு பெண்ணின் கை நீட்டி அலைத்து கூப்பிட்டது. 'காப்பாற்று சாப்பாற்று என்று குரல் கேட்டது.

பாண்டியனின் மோட்டார் சைக்கிள் உறுமிக் கொண்டு பாய்ந்தது. வேனின் முன்னே சென்று குறுக்கே மறித்தது.



வேன் நிடுக்கென கிறீச்சிட்டு நின்றது. தேவகி தடுமாறி விழுந்தாள்.

இடது கை மணிக்கட்டில் அடிபட்டு 'அம்மா' என்று அலறினாள்.

மறித்து நின்ற பாண்டியனைப் பார்த்து வேனிலிருந்து குதித்து சீறிக் கொண்டு வந்தான் ராஜன்.

''குறுக்கே விழுந்து சாகறத்துக்கு என் வண்டியைத் தானா பாத்தே?'' என்று வெடித்துக் கொண்டே வந்தான்.

பாண்டியன் ஹிப் பாக்கெட்டிலிருந்து பர்ஸை உருவினான். திறந்து அடையாளச் சீட்டை காண்பித்தான்.

''போலீஸ்! மரியாதையா நான் சொல்றபடி கேளு. இல்லாட்டி மூஞ்சி பேந்துடும்!'' என்றான்.

ராஜ் ஒரு கணம் தயங்கி பின் எதிர்பாராத விதமாக ஆக்ரோஷத்துடன் பாய்ந்தான். பாண்டியன்மீது மோதி அடித்து வீழ்த்தினான். மோட்டார் சைக்கிளைப் பற்றி ஓரமாகத் தள்ளிய கையோடு வேனுக்கு ஓடினான்.

பாண்டியன் அவசரமாகச் சுதாரித்துக் கொண்டான். சடுதியில் எழுந்து ராஜ் வேனைக் கிளப்பு முன்பே பிடித்து விட்டான். காலரைப்பற்றி வெளியே இழுத்தான்.

''வெளியே வாடா நாயே!'' திட்டிக் கொண்டே சரமாரியாக அடித்து நொறுக்கத் தொடங்கினன்.

ராஜ்ஜின் தைரியம் பறந்தோடி விட்டது. பாண்டியனின் பிடியிலிருந்து சரேலென்று விலகித் தப்பித்து ஓரமாகக் கிடந்த மோட்டார் சைக்கிளிடம் ஓடினன்.

படுத்த வாக்கிலேயே மோட்டார் சைக்கிள் படபடவென்று நியூட்ரலில் துடித்துக் கொண்டிருந்தது.

அதை எடுத்து நிறுத்தி ஒரு பாய்ச்சலில் ஏறி விரைவாகப் புறப்பட்டான். ஒரு நொடியில் இருட்டில் மறைந்து போனன்.

இத்தனையும் ஆற்றெழுக்குப் போல இருபக்கமும் வாகன ஓட்டத்திற்கிடையே இரு நிமிடத்தில் நிகழ்ந்து விட்டது. வாகனங்கள் நின்று கூட்டம் சேர ஆரம்பித்தது. ''என்ன,என்ன?'' என்று கேள்விகள்.

''திருட்டுப்பயல் ஓடிட்டான்!'' என்றபடி பாண்டியன் வேனில் ஏறினன்.

டாக்டர் கோன்ஸால்வேஸ் திருதிருவென்று விழித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார். பாண்டியனைப் பார்த்து, ''வாட்மேன், வாட்மேன்? ஹு ஆர் யூ?'' என்றார்.

''நான! உன் பிரண்டோட மச்சான். நீயும் ஓடிடாதே இரு'' என்று அவரை மிரட்டி விட்டு சாவியைப் பற்றி எடுத்துக் கொண்டு வேனின் பின்பக்கம் விரைந்தான்.

பூட்டைத் திறந்ததும் கதவை இழுத்தான். தேவகி சுருண்டு படுத்திருந்தாள். கதவு திறந்ததும் தலையைத் தூக்கிப் பார்த்தாள்.

''என்னம்மா, உன்னைக் கடத்திட்டு போருனு அந்த ஆள்?'' என்று கேட்டான்.

''ஆமா.. நீங்க போலீஸா?''

''சி.ஐ.டி. இன்ஸ்பெக்டர் பாண்டியன். உங்களைத் தான் தேடி அலஞ்சிக்கிட்டிருந்தேன்...''

தேவகி ரோடில் இறைந்து கிடந்த பாலிதின் பாக்கெட்டுகளை சுட்டிக் காட்டினள்.

''உங்களைக் கூப்பிடறதுக்குத்தான் அதை எறிஞ்சேன். போதை மருந்து விஷம் இங்கே நிறைய இருக்கு. அதை



எடுத்துடுங்க... ஜனங்க கையிலே போச்சுன்ன ஆபத்து...''

ஏற்கெனவே இரண்டொரு நபர் பாக்கெட்டுகளைப் பொறுக்க ஆரம்பித்தனர்.

''தொடாதீங்கய்யா.. இப்படிக் கொடுங்க!'' என்று பாண்டியன் அதட்டி அவற்றைப் பிடுங்கி வண்டிக்குள் போட்டான்.

''நீங்க சமயோசிதமா நடந்துக்கிட்டீங்கம்மா.. இல்லாட்டி வண்டியோட போயிருப்பீங்க...''

''இன்ஸ்பெக்டர், அவசரமா ஆஸ்பத்திரிக்கு ஓட்டுங்க.. கை எலும்பு முறிஞ்சிருக்கு போல் இருக்கு...''

''வண்டியை நானே ஓட்டிப் போறேன். என் மோட்டார் சைக்கிளிலே அந்த ஆள் ராஜ் ஓடிட்டான்!'' என்ருன்.

''அப்படியே கொஞ்ச நேரம் சாஞ்சுக்குங்க. பத்து நிமிஷத்திலே போயிரலாம்!''

''விஜயா ஆஸ்பத்திரி எங்கே இருக்கு?'' என்ருள் தேவகி.

''பக்கத்திலேதான் இருக்கு. அங்கேயே போகலாம்!'' என்று சொல்லிக் கதவை மூடினன். ''போங்கய்யா, இங்கே ஒண்ணும் சர்க்கஸ் நடக்கலே'' என்று கூட்டத்தை விரட்டி விட்டு முன்பக்கம் சென்று டிரைவர் சீட்டில் ஏறினன். கோன்ஸால்வேஸ் பழைய படியே திருதிருவென்று விழித்துக் கொண்டே உட்கார்ந்திருந்தார்.

''வாட் மேன்? வாட்மேன்?'' என்று கேட்டுக் கொண்டிருந்தார்.

பாண்டியன் அவரை லட்சியம் செய்யாமல் வண்டியைசெலுத்தினன். விஜயா ஆஸ்பத்திரி ஐந்து நிமிடத்தில் வந்து விட்டது. ரிசப்ஷனில் அவசரமாக ஸ்ட்ரெச்சருக்கு ஆர்டர் கொடுத்தான். டெலிபோனை எடுத்துக் கண்ட்ரோலைக் கூப்பிட்டான்.

(தொடரும்)

பாரதியார் பாஞ்சாலி சபதத்தில் [illegible] னார். இன்பமும் துன்பமும் அவரவர் வினைப் பயனாய் நேர்பவை. இறைவனின் துணையை நாடினால் துன்பத்தின் சுமையை எளிதாக்குவான். அதற்காக துன்பமே நேராமல் போகாது. பட்டம் வேண்டுவோர்க்கே பரீட்சை. ஆண்டவனையே அடைய விரும்பிய பாண்டவர்க்கு சோதனை இல்லாமல் போகுமா? எப்படி நோக்கினும் முரண்பாடு இல்லை.

எஸ். ராமகிருஷ்ணன் நெல்லூர்.

கண்ணன் கூறும் விளக்கம் ..

பாரதப் போர் முடிந்த பிறகு. கண்ணன், தன் தேரோட்டியைப் பார்த்து, ''என் வேலை முடிந்து விட்டது. நீ ஏதாவது வரம்கேள்'' என்றார். தேரோட்டி உத்தமன். பயந்து, ''எல்லாம் தெரிந்த நீங்கள், சூதாட்டத்தில் பாண்டவர்கள் தோற்பார்கள் என்று தெரிந்தும் தடுக்காது துன்பங்களை அனுபவிக்க விட்டு விட்டது ஏன்?'' என்றுகேட்டான். அதற்கு கண்ணன், ''உண்மைதான், சூதாட்ட நேரத்தில் வந்து விடக் கூடாது என்று நினைத்துதருமன் மனத்தால்கட்டுப்போட்டுவிட்டான். எல்லோரையும் இழந்த பிறகும் என்னை நினைக்கவில்லை. அது மட்டும் அல்ல திரௌபதியை மான பங்கம் செய்யும், நேரத்திலகூட நினைக்கவில்லை. முடியாத நேரத்தில் தான் திரௌபதி என்னைக் கூப்பிட்டாள். முதலில் என்னை தர்மன் நினைத்திருந்தால் துன்பத்திலிருந்து காப்பாற்றியிருப்பேன். என்னை அழைக்காமல் மனதால் கட்டுப்படுத்தி விட்ட பிறகு நான் எப்படி உதவி செய்ய முடியும்? நண்பர்கள் சூதாட்டத்தில் தோற்றதும் காட்டிற்குச் சென்று துன்பங்கள் அனுபவித்ததும் என்றால் அல்ல. அதற்கு நான் பொறுப்பு அல்ல. என்னை நினைப்பவர்களுக்கு அபயம் அளிப்பேன்'' என்று கூறினான், கண்ணன்.

தூத்துக்குடி டி. நடராஜன்.

விதியை வெல்ல முடியாது ..

விதியை வெல்ல ஒருவராலும் முடியாது. ராமர் காட்டுக்குப் போகவில்லையா? கிருஷ்ணன் யசோதையால், கட்டுப்படவில்லையா? விதியை மாற்ற **நம்மைப் படைத்த பிரும்மனாலும் முடியாது.**

**மாலூர், கேரளா. கனகவல்லி.**

# இறந்தவருக்கு இண்டர்வியூ...

பஞ்சாப் பப்ளிக் சர்வீஸ் கமிஷன் ஆகஸ்ட் 12-ம் தேதி இறந்தவருக்கு, ஆகஸ்ட் 17-ம் தேதி நேர்முகப் பேட்டி நடத்தி அவரைத் தலைமை ஆசிரியராகப் பதவி உயர்வும் அளித்து நியமனம் செய்துள்ளதாகத் தேர்வு உத்திரவு ஒன்றினை அனுப்பியுள்ளது! இந்த விநோதச் செயலுக்கு மற்ற ஆசிரியர்கள் கண்டனம் செய்து, இதுபற்றி நீதி விசாரணை நடத்தும்படிக் கோர்ட்டை அணுகியுள்ளனர்!

—ஐ. எஸ். ரமணி.

தோற்றவர் நிபந்தனை ஏற்றனர்.

தருமர் ராஜசூய யாகம் நடத்தி முடித்ததும் வியாசர் அவரிடம் ''பதின்மூன்று ஆண்டுகள் கஷ்டம். நேரிடும். உன்னைக் காரணமாக வைத்துக் குலநாசமே ஏற்படும்,'' என எச்சரித்தார். தன்னால் விபரீதம் விளைந்து விடக்கூடாது என அஞ்சிய தருமர் பின்னாளில் துரியோதனனால் அழைக்கப்பட்ட சூதாட்டத்திற்கு ஒப்புக் கொண்டார். நாட்டை, தம்பிகளை, மனைவியையும் இழந்தார். விதி வலிது- மீண்டும், 'பனிரண்டு ஆண்டுகள் வனவாசம் பதின்மூன்றாம் ஆண்டு அஞ்ஞாத வாசம்' என்ற நிபந்தனையிலும் கவறாடித் தோற்றார். தர்ம நியாயப்படி வனவாசத்தையும் அஞ்ஞாத வாசத்தையும்நிறைவேற்றினார்.

இதில் ஸ்ரீ கிருஷ்ண அனுக்ரஹம் என்ற பேச்சுக்கே இடமில்லை. தவிர, சூதாட்டக் காலத்தில் கிருஷ்ணன் சால்வ மன்னனை எதிர்த்துப் போராடிக் கொண்டிருந்தார். பிறகுதான் அவருக்கே இந்த விஷயம் தெரியும். தோற்றவர் நிபந்தனையை ஏற்றார். அவ்வளவே......

வில்லிவாக்கம் ஆர், ராதாலக்ஷ்மி.

# ஏஞ்சல் டஸ்ட்

## கி. கஸ்தூரிரங்கன்



### 24 ஒரு சதி

சின்னதுரையைக் கைது செய்து கொண்டு அலுவலகத்துக்குத் திரும்பிய கமிஷனருக்கு டெலிபோன் செய்தி காத்திருந்தது.

முதல்வர் கூப்பிட்டாராம்!

சி. எம். அந்த வேளையில் வழக்கமாகப் போய்த் தங்கும் வீட்டில் இருந்தார். அவரே போனை எடுத்தார். அவருடைய சகாவின் பிள்ளையைக் கைது செய்த விவரம் அவருக்குத் தெரிந்து விட்டது. பாக்டரியில் பதுங்கி இருந்த டிரைவர் முனுசாமி பிரபுவின் தந்தைக்குத் தகவல் கொடுக்க, அவர் சிஎம்மிடம் புகார் செய்து விட்டார்.

''உங்க இன்டெக்ரிடி பத்தி எனக்குத் தெரியும். தகுந்த ஆதாரத்தோடு தான் கைது செய்திருப்பீங்கன்னு நம்பறேன்'' என்று படபடப்பில்லாமல் அமைதியாகப் பேசினார் முதல்வர்.

''பெரிய டிரக்-ராக்கெட் ஸார். இவன் தான் அதில் கிங்-பின். சூத்திரதாரி. நாளைக்கு எப். ஐ. ஆரைக் காண்பிக்கிறேன் ஸார்!'' என்றார் கமிஷனர்.

''அவசரப்பட்டு எப்.ஐ.ஆர். எழுதி விடவேண்டாம். கட்சிப் பிரச்னையாயிடும்.''

''ஸார்...!''

''நான் சொல்றதைக் கேட்டுக்குங்க. உங்க கடமையில் நான் குறுக்கிடறதா நினைக்காதீங்க...''

எல்லா மந்திரிகளும் எம்.எல்.ஏக்களும் பேசுகிற பிடிகை தான் இது. சிஎம் இதுவரை நேரில் குறுக்கிட்டதில்லை. ஆனால் தினம் ஒ... ஆளும் கட்சியைச் சேர்ந்தவன் பெ... புள்ளியின் உறவினன் என்று பே... வரத்து குற்றம் முதல் கள்ளச் சா... யம் வரை அரசியல் தலையீட்ட... தப்பிவிடுகிறார்கள். செல்வாக்... லாத சாதாரண மக்கள் தாம் செ... செய்யாத குற்றங்களுக்கு தண்ட... அனுபவிக்கிறார்கள்.

கடமையுணர்ச்சியுடன் ஒருபோலீ... காரன் செயல்படக் கூடிய கா... மலையேறிவிட்டது. விஐபிகளை, ஆட்... பதவியிலுள்ளவரை, சமூகத்தில் பெ... புள்ளிகளை, அவர்கள் எத்தனை க... சமூகத் துரோகியானாலும் சரி அவ... களுக்கு பூரண பாதுகாப்புத் தருவ... தான் போலீஸின் இன்றைய முக்கிய... பொறுப்பு.

கமிஷனர் பெருமூச்செறிந்தா... சிஎம் போனில் தொடர்ந்தார்.

''இந்தப் பையனை இப்போ வி... டுடுங்க. எங்கேயும் ஓடிடமாட்ட... காலையில் அவனுக்கு எதிரான ஆத... ரங்களை எடுத்துக் கொண்டு என்னிட... வந்து நேரில் பேசுங்கள். புரிந்ததா?'' என்றார்.

''தயவு செய்து என்னை மன்னி... கணும் சார்'' என்றார் கமிஷனர் உறு... யாக.

இன்னும் ஒரு மாதத்தில் ரிடைய... ஆக வேண்டும். இப்போது விட்டு... கொடுத்தால் எக்ஸ்டென்ஷன் கிடை... கும். ஆனால் சமூகத்தையே நாசப... படுத்தி வரும் ஒரு குற்றவாளியை...

அரசியல் தாட்சண்யத்துக்காக விட்டு விட்டால் அவர் மனச்சாட்சி சும்மா விடாது.

"உங்க மந்திரியின் பிள்ளைன்னு நீங்க பாக்கறீங்க. என்னைப் பொறுத்தவரை அவன் போதை மருந்துக் கடத்தல் கும்பலின் தலைவன். பிடியில் டிரக்



அடிக்ஷன் பரவிகிட்டு சின்ன வயசுப் பசங்களை யெல்லாம் பலிவாங்கிட்டு வர்றது உங்களுக்குத் தெரியும். நீங்களே கடுமையான நடவடிக்கை எடுக்கணும்னு உத்தரவு போட்டிருக்கீங்க...''

''சரி சரி.. யார் இல்லேன்னு சொன்னது. நீங்க பிடிச்சிருக்கிற ஆள் என் கட்சியிலே முக்கிய தலைவரின் மகன். போதிய ஆதாரமில்லாமல் அவனை சிறையில் போட்டீங்கன்னு இவர் முறைச்சுக்குவார். எதிர்க் கட்சி இது மாதிரி சந்தர்ப்பத்துக்குத்தான் காத்திருக்காங்க...''

''ஆதாரத்துடன் தான் அவனைப் பிடிச்சிருக்கேன் ஸார். இவனுடைய கையாளை கையும் களவுமா பிடிச்சிருக்கோம். இரண்டு பெண்களை வேறு கடத்தி அடைச்சுப்போட்டிருக்காங்க. தப்பிச்சுப் போறப்போது அவங்க கார் விபத்திலே மாட்டி ஒரு பெண் செத்துப் போற நிலையில் இருக்கா..''

''ஆல் ரைட்.. அவன் அப்படிப் பட்ட குற்றவாளின்னு நீங்க நடவடிக்கை எடுக்கலாம். ஆனா உங்க குற்றச் சாட்டு கோர்ட்டுலே நிக்கணும. ஒருபழுதும்இருக்கக்கூடாது..!''

'' அந்த தைரியத்தில்தான் இவனை கைது செய்திருக்கேன். போதைமருந்து கடத்தல், காவல் குற்றத்துக்குச்சமானம்.''

''இப்போ அவனுடைய அப்பாவுக்கு நான்என்னபதில்சொல்லட்டும்!''

''அவரோட நானே பேசறேன் சார். அவர் பிள்ளை எப்படிப் பட்ட குற்றவாளின்னு அவருக்கே தெரியாமல் இருக்கலாம்.''

''சரி.. முதலில் அதைச் செய்யுங்க. ஆனா, நீங்க அந்தப் பையனை லாக்கப்பிலே வைக்க வேண்டிய அவசியமில்லே. பெயிலில் விடலாமல்லவா?

''புரவிஷன் இருந்தா செய்யறேன் சார்!

''இன்னொன்று' இந்தக் கைது விஷயம் பேப்பர்லே வரக் கூடாது. பாத்துக்குங்க'' என்று பட்டென்றுபோனை வைத்து விட்டார் முதல்வர்.

நெற்றியில் துளிர்தத வியர்வையை கைக் குட்டையால் ஒற்றிக்கொண்டு வெளியே வந்தார் கமிஷனர்.

போலீஸ் ஜீப்பில் சின்னதுரை அமர்த்தலாக உட்கார்ந்திருந்தான்.

''என்ன கமிஷனர் சார்! எனக்குப் பசிக்குது.. சாப்பாடு டைம் எப்ப? என்றான்.

''இனிமேத்தான்; நிறைய செமத்தியா போடறோம்!'' என்றார் கமிஷனர் அதே பாணியில்.

''இந்த ஆளை லாக்கப்பல வையுங்க-தனியா இருக்கட்டும்..'என்றுபோலீஸ் அதிகாரி ஒருவருக்குஉத்தரவிட்டார். அவர் சல்யூட் அடித்து விட்டு சின்னதுரையை அழைத்துச் சென்றார்.

அடுத்து பாண்டியனிடமிருந்து போன். விஜயா ஆஸ்பத்திரியிலிருந்து பேசினான்.

''ஆளைப் பிடிச்சு வச்சிருக்கேன்.. ஸார். வேன் நிறைய சரக்கு. எங்க கொண்டு வரட்டும் சார்!'' என்று கேட்டான்.

''போலீஸ் எஸ்கார்ட்இருக்கா??''

''இருக்கு ஸார். அனுப்பிச்சிருக்காங்க.....''

''சரி, இங்கேய என் ஆபீசுக்கு வேன்லியே வந்திருங்க. அந்தப் பெண் தேவகி எப்படி யிருக்கா?''

''உள்ளே அழைச்சுட்டுப்போயிருக்காங்க. அவளுடைய அப்பா டாக்டர் ஒத்தர்உங்களோடபேச வேணுமாம்''

''சரி'' என்றார் கமிஷனர்.

டாக்டர்பூஷணம் போனில்வந்தார்.

''தாங்க்யூ ஸோ மச். கமிஷனர் ஸார். என் பெண்ணைப் பாதுகாப்பா கொண்டு சேர்த்திட்டீங்க.!'' என்றார் நன்றியுடன.

'உங்க பெண் எப்படி இருக்கா?''

''மணிக்கட்டுலே ஸ்ப்ரெயின்...'' அவ்வளவுதான்.. பெயின் கில்லர் இஞ்சக்ஷன்போட்டோம். ஷி இஸ் ஓ.கே.''

''அப்ப அவளை இங்கே அனுப்ப முடியுமா? ஒரு ஸ்டேட்மெண்ட் வாங்கணும்.''

''பை ஆல்மீன்ஸ், நானே கார்லே அழைச்சுட்டு வர்றேன்'?''

''வேன் ஒண்ணு வரும். பின்னாலேயே வந்துடுங்க. அவரை பணிலே திரும்பிடலாம். பை தி பை மிஸ்டர் தேவ் எப்டி இருக்கார்?''

''இன்னும் கண் திறக்கலே. பட், தேர் ஆர் ஸைன்ஸ் ஆஃப் ரிகவரி... கிட்னி பங்க்ஷன் பண்ண ஆரம்பிச்சிட்டுது.''

''வெரிகுட். அப்ப சீக்கிரம் உங்க டாட்டரோட வந்திருங்க!'' என்று போனை வைத்தார் கமிஷனர்.

அடுத்து ஜெனரல் ஹாஸ்பிடலுடன் தொடர்பு கொண்டார். ஸ்டெல்லா இன்டென்ஸிவ் கேர் யூனிட்டில் இருப்பதாகத் தெரிந்து கொண்டார். அவள் அண்ணன் பெர்னியிடமிருந்து ரத்தப்பரிமாற்றம் நடந்து கொண்டிருக்கிறது.

ஸ்டெல்லா பிழைத்து விடுவாள் என்று டாக்டர்களுக்கு நம்பிக்கை இருக்கிறதாம். டி. எஸ். பி. ராமநாதன் சொன்னார்.

''பிழைக்க வச்சுடணும். குறைந்தது அவளுக்கு கான்ஷியன்ஸ் வரணும். ஐ நீட் ஹர் ஸ்டேட்மெண்ட்'' என்றார் கமிஷனர்.

''எஸ், ஸார்'' என்றார் டிஎஸ்பி. ''இங்கே கொஞ்சம் வேலையிருக்கு.. முடிச்சிட்டு நேரா அங்கே வரேன்.!'' என்று சமிஷனர் போனை வைத்தார்.

டிபுடி கமிஷனரைக் கூப்பிட்டு, சின்ன துரைமீதும் ராஜ் மீதும் குற்றப் பத்திரிகை தயாரிக்கச் சொல்லி உத்தரவிட்டார்.

''டிடெக்டிவ் இன்ஸ்பெக்டர் பாண்டியன் ராஜ்ஜை பிடிச்சு வச்சிருக்கான் வந்ததுமே லாக்கப்பிலே போட்டுடுங்க. அப்புறம் தேவகிங்கற பெண்ணை அழைத்து வரச் சொல்லியிருக்கேன். இவங்க செஞ்சது, சின்ன துரையின் பாக்டரியிலே நடந்தது. எல்லாத்தையும் பத்தி ஸ்டேட்மென்ட் வாங்கிடுங்க...'' என்று சொல்லி அனுப்பினார்.

இன்டர்காம் ஒலித்தது.

''மினிஸ்ட்டரின் பி. ஏ.வாம். உங்களைப் பார்க்க வந்திருக்கார்''

''வரச்சொல்லு''

மினிஸ்டரின் காரியதரிசி உள்ளே வந்து வணக்கம் தெரிவித்தார்.

''அந்தப் பிள்ளையை ஜாமீனில் அழைச்சுப்போக வந்திருக்கிறேன்!'' என்றார்.

''அவசரப்பட்டா எப்படி மிஸ்டர்...?''

''கமலக்கண்ணன்''.

''மிஸ்டர் கமலக்கண்ணன்! உங்க மந்திரிக்கு அவர் பிள்ளை ஈடுபட்டிருக்கிற பிஸினெஸ் பற்றி ஒண்ணும் தெரியாதுன்னு நினைக்கிறேன்.'' என்றார்.



இன்ஸ்பெக்டர்: விசாரணை நடத்தியதில் நீங்கள் பணத்தைக் கையாடல் பண்ணலேங்கற முடிவுக்கு வர வேண்டியிருக்கு..''

அவர்: அப்ப பணத்தையெல்லாம் நானே வச்சுக்கலாமா சார்!''

---

''அவருக்கு ஒண்ணும் தெரியாது ஸார்! ஆனால் உங்ககிட்ட பெர்ஸனலா வேண்டிகிட்டேன்னு சொல்லச் சொன்னார். விஷயம் வெளியே வந்தா அவருடைய பதவி, கட்சியோட பேர் எல்லாம் கெட்டுடும்னு சொல்லச் சொன்னார்.''

''அதுக்கு நான் என்ன பண்ண முடியும்? சின்னதுரை மந்திரியின் பிள்ளையாயிருக்கலாம். என்னைப் பொறுத்தவரை அவன் ஒரு கிரிமினல்...பெரிய குற்றவாளி!''

''குற்றவாளின்னு சொன்னா போதுமா? அதை நிரூபிக்கவேண்டாமா?''

''ஊம் கோயிங் டு! எல்லா சாட்சிகளும்..சின்னதுரையோட கூட்டாளி உட்பட பிடிச்சுவச்சிருக்கோம்...''

''சின்னதுரையை விட்டுடுங்க ஸார்!...அனாவசியமா விவகாரத்திலே மாட்டிக்காதீங்க!'' என்றார் கமலக்கண்ணன் நேரடியாக.

''என் கடமையை நான் செய்யறேன்.அதைத்தான் சீப் மினிஸ்டரிடம் சொன்னேன்...''

இன்டர்காம் பஸ்ஸர் ஒலித்தது.

பாண்டியன் வந்திருப்பதாகச் சொல்லிற்று.... ''ஸெண்ட் ஹிம் இன்!'' என்றார் கமிஷனர்.

''மிஸ்டர் கமலக்கண்ணன்... நீங்க போயிட்டு ஒரு மணி நேரத்துக்குப் பிறகு வாங்க...'' என்றார்.

''வெளியே காத்திருக்கேன்!'' என்று சொல்லிவிட்டு வெளியேறினார்.

பாண்டியன், இரு போலீஸ் துணையுடன் கோன்ஸால்வேஸ் உள்ளே வந்தனர்.

''ஹூ இஸ் திஸ் மேன்!'' என்று கேட்டார் கமிஷனர்.

''இவர் அவனோட கூட்டாளி ஸார். கோன்ஸால்வேஸ்னு பேராம்!'' என்றான் பாண்டியன்.

''வாட்..அப்ப ராஜ் என்னஆனான்?'

''அவன் தப்பி ஓடிட்டான் ஸார்... என் மோட்டார் ஸைக்கிளைத் தூக்கிட்டு போயிட்டான்!''

''வாட்'' என்று மேஜையில் குத்தினார் கமிஷனர். ''ராஜ் ஓடிட்டான்னு யாரும் என்னிடம் சொல்லலியே!''

''நான் சொன்னேன் ஸார். உங்க கிட்ட சொல்லலே போலிருக்கு...''

''ஆள் அகப்பட்டு கிட்டான்னு தான் நீங்க சொன்னதா மெஸேஜ்ல இருந்தது...''

''அது இந்த ஆள்தான் ஸார். ராஜ்ஜும் இவரும் போதை மருந்துகளையும் அந்தப் பெண்ணையும் கடத்திகிட்டு கோவாவுக்குப் போயிட்டிருந்தாங்களாம்!''

''வாட் எ மெஸ்!'' என்று தலையில் கை வைத்துக்கொண்டார் கமிஷனர்.

''ராஜ் பிடிபட்டுடுவான் ஸார். எல்லா ஹைவேஸ் போலீசுக்கும் மெஸேஜ் போயிருக்கு'' என்றான் பாண்டியன்.

''ஹூம் ... உங்களைக் குத்தம் சொல்ல முடியாது..யு ஹாவ் டன் யுவர் பெஸ்ட். ஆனா முக்கியமான குற்றவாளியை தப்பிக்கவிட்டுடிட்டீங்க. எ கிரேட் பிளண்டர்!''

'ஐ'ம் ஸாரி ஸார்'' என்று பாண்டியன் முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டான்.

''டோன்ட் வொர்ரி பாண்டியன். ராஜ்ஜைப் பிடிச்சுடலாம். அந்தப் பெண்ணைக் காப்பாத்திட்டீங்க. அதுவே பெரிய அச்சிவ்மென்ட்!''

''தாங்க் யூ ஸார்!''

''இந்த ஆளையும் லாக்-அப்பிலே வையுங்க!அப்புறம் விசாரிக்கிறேன்''

கோன்ஸால்வேஸை அனுப்பி வைத்தார்.

தேவகியை அழைத்துக்கொண்டு டாக்டர் பூஷணம் உள்ளே வந்தார்.

''என் பெண்ணைக் காப்பாத்திக் கொடுத்திட்டீங்க. ரொம்ப தேங்க்ஸ் சார்!'' என்றார் டாக்டர் பூஷணம்.

'அந்த கிரெடிட் இவருக்குத்தான்!' என்று பாண்டியனைக் காட்டினார் கமிஷனர்.

''அவருக்கு முன்னேயே நன்றி சொல்லிட்டேன்.''

''பாண்டியன், நீங்க போய் வேனையும் அதிலுள்ள சரக்கையும் இம்பௌண்ட் பண்ணச் சொல்லுங்க.... ராஜ் பிடிபட்ட தகவல் கிடைச்சதுமே எனக்குத் தெரியணும்!'' என்றார் கமிஷனர்.

''எஸ் ஸார்!'' என்று சல்யூட் அடித்துவிட்டு அகன்றான் பாண்டியன்.

தேவகியின் வாக்குமூலத்தைப் பதிவு செய்ய ஏற்பாடு செய்தார் கமிஷனர். அவளை ராஜ் அழைத்துப் போனது முதல் ஸ்டெல்லாவுடன் தப்பித்துப் போனது, விபத்து நேர்ந்தது, மறுபடியும் ராஜ் அவளை வேனில் தூக்கிச் சென்றது, பாண்டியனின் உதவியால் தப்பித்தது எல்லாவற்றையும் ஒன்று விடாமல் சொன்னாள். சின்னதுரையின் நடவடிக்கை பற்றியும் போதை மருந்து கடத்தல் பற்றியும் அவளுக்கு ஒன்றும் தெரியவில்லை.

சின்னதுரையைக் கூப்பிட்டனுப்பினார் கமிஷனர்.

அவள் அவனை உடனே அடையாளம் கண்டு சொன்னாள்.

''ஹௌ ஆர் யு ஸிஸ்டர்?'' என்று அவன் சுபாவமாக சிரித்தபடி கேட்டான். தேவகி முகத்தைத் திருப்பிக் கொண்டாள்.

''ஆல்ரைட்.... மிஸ்டர் சின்னதுரை! உங்க மேலே எப்.ஐ. ஆர்., முதல் குற்றப் பத்திரிகை தாக்கல் செய்து இருக்கோம். உங்களை ஜாமீனில் வீட்டுக்கு அனுப்பறேன். ஊரை விட்டு வெளியே போகக்கூடாது...''

சின்னதுரை சிரித்தான்.

''யூ கான்ட் ப்ரூவ் எனிதிங் அகெய்ன்ஸ்ட் மீ!''. என்றான்.

''நிருபித்துக் காட்டுகிறேன்.'' என்றார் கமிஷனர். மந்திரியின் காரியதரிசி கண்ணப்பன் கொடுத்த ஜாமீனின் பேரில் அவனை அனுப்பி வைத்தார்.

''இவனுடைய கூட்டாளி ராஜ் கிடைச்சாகணும்.... இல்லாவிட்டால் கேஸ் நிக்காது!'' என்றார்.

பிறகு, ''டாக்டர் நீங்க உங்க பெண்ணை அழைச்சுக்கிட்டுப் போகலாம்..... வேணும்னா அப்புறம் கூப்பிடறோம்!'' என்றார்.

''ஸ்டெல்லாவுக்கு எப்படி இருக்கு ஸார்!'' என்று கேட்டாள் தேவகி.

''ஆஸ்பத்திரியில் இன்டென்ஸிவ் கேர்ல இருக்கா. பிழைச்சுடலாம்னு டாக்டர் சொல்றார். இப்போ அவளைப் பார்க்கத்தான் போறேன்.''

''நானும் வரேன் ஸார்... அவளை ஒரு முறை பார்த்துடணும்!'' என்றாள் தேவகி.

''தென் நீங்க ரெண்டு பேரும் ஜி. ஹெச்சுக்கு வந்துடுங்க. பத்து நிமிடத்தில போயிடலாம்'' என்று எழுந்தார் கமிஷனர்.

கண்ணப்பனுடன் காரில் வீடு திரும்பினான் சின்னதுரை. மேலுக்கு அலட்சியமாக இருந்தாலும மனதுக்குள் இனமறியாத பயம் பிடுங்கியது. அப்பாவின் செல்வாக்கு எதுவும் கமிஷனரிடம் பலிக்காது போல் தோன்றியது. குற்றம் நிருபிக்கப்பட்டு அவன் ஜெயிலுக்குப் போனால் அப்பாவின் அரசியல் வாழ்க்கை முடிந்துவிடும்.

குற்றங்கள் நிரூபிக்கப்படக்கூடாது. நல்ல வேளை ராஜ் தப்பிவிட்டான். அவன் பிடிபடாமல் இருக்க வேண்டும். ஸ்டெல்லா ஒரு முக்கியமான எதிரி. அவள் பிழைத்து எழுந்துவிடக் கூடாது.

''என்ன செய்யலாம். என்னசெய்யலாம்!'' என்று யோசித்தான்.

கிரீன்வேஸ் ரோடு பங்களா முன் கேட் திறப்பதற்காக கார் நின்றது. டிரைவர் ஹார்ன் அடித்தான்.

கேட்டைத் திறக்க ஆள் ஓடிவந்தான். கார் நகர்ந்தது.

''தொர'' என்று குரல் கேட்டு திடுக்கிட்டுப் பார்த்தான் சின்னதுரை.

''ராஜ்!'' கார் நின்று கீழே குதித்தான் சின்னதுரை.

''உனக்காகக் காத்திட்டிருந்தேன் தொர. அர்ஜண்டாப் பேசணும்!''

''வா....வா...'' என்று அவன் தோளில் கை போட்டு நடந்தான். கார் தயங்கிவிட்டு மேலே வீட்டுக்குள் போனது.

இருட்டில் நின்றபடி இருவரும் ஐந்து நிமிஷம் பேசினார்கள்.

பிறகு ராஜ் வேகமாக வெளியேறினான்.

சாலையில் சேறு படிந்து எண்கள் மங்கி மறைந்திருந்த மோட்டார் சைக்கிளை நோக்கிச் சென்றான்.

அதில் ஏறி உதைத்துக் கிளப்பி அம்பு போல விரைந்தான்.

பதினைந்து நிமிடத்திற்குப் பிறகு ஜெனரல் ஆஸ்பத்திரிக்குள் அதே மோட்டார் சைக்கிள் நின்றது. வெள்ளை கோட்டும், குறுந்தாடியும் கண்ணாடியும் அணிந்த ஒரு டாக்டர் அதிலிருந்து இறங்கினார்.

(தொடரும்)



''என்னடா ரொம்பவும் மோசமான வார்த்தைகளைப் பேசறயே?''

''ஷேக்ஸ்பியர் அடிக்கடி அந்த வார்த்தைகளை உபயோகப்படுத்தியுள்ளாரே?''

''சரி, சரி..அந்தப் பயலோடு பேசாதே.''



# நேசம் மறக்கவில்லை நெஞ்சம்

எஸ். சார்வபௌமன்

ரங்கசாமி தொண்டையைக் கனைத்துக் கொண்டார். எதிரே நிரம்பி வழியும் கூட்டம். ஆலாபனையில் அடுத்த சங்கதியை எதிர்ப்பார்த்து மூச்சைக்கூட நிசப்தமாக விடும் கூட்டம். அதைப்பார்க்கையில் தனது வித்வத்தில் தன்னையறியாமலேயே தற்பெருமை பொங்கியது. இவனுக்கெல்லாம் நான் தான் சங்கீத பிரம்மா. இந்த மூன்று மணி நேரத்திற்கு என்னுடையதுதான் அரசாட்சி. எனது நாபியிலிருந்து உதயமாகும் ஒவ்வொரு ஒலிக்கும் இங்கே ஒரு உள் வாங்கி காத்திருக்கிறது.

கல்யாணி! இந்தக் கூட்டத்தில் நீ இருக்கிறாயோ? இப்போது மேடையில் அலங்காரமாக அமர்ந்து சபையையே ஆட்டிப் படைக்கும் சங்கீத விற்பன்னன் ரங்கசாமி உன்னுடைய ரங்குதான் என்பதை நீ அறிவாயோ? அவனை உனக்கு ஞாபகமிருக்கிறதோ? ஆற்று மணலில் அமர்ந்து நீ பாடப் பாட அந்த மணலிலேயே கோட்டை கட்டியவனைப் பார்த்து நீ எள்ளி நகையாடியதாவது உனக்கு நினைவிருக்குமா?

''கல்லு! நீ ரொம்ப நன்றாப் பாடறே!''

''உம்?'' என்று காது ஜிமிக்கி யாடத் திரும்பிக் கேட்கிறாய். கண்களில் ஏளனம்.

''இந்தக் காவிரி இருக்கே, இதுலே மீனைப் பாத்திருக்கயோ?''

''பாத்திருக்கேனே.'' உன் கேள்வி புரியவில்லை, உனது கண்களின் ஆழத்தைப் போலவே.

''அதுக்கு யாராவது நீச்சல் கத்துக் கொடுப்பாளோ?'' எக்காளமிட்டு நீ நகைக்கையில் உன் எண்ண வோட்டம் தெரிகிறது. உன் தந்தை சாம்ப மூர்த்தி சங்கீத சிரோன்மணி என்று பட்டமே வாங்கியவர். மகுடிக்கு அடங்காத நாகம் கூட அவர் மந்த்ர ஸ்தாயியிலே பாடுகையில் மயங்கும் என்று கூறுவதுண்டு. அவரின் மகளுக்கு சங்கீதம் சுவாசத்தைப் போன்றதுதான். பாராட்டெல்லாம்- அதுவும் என்னைப் போன்ற தற்குறியிடமிருந்து வருகையில் - ஏளனத்தின் இலக்குதான்.

ஆனாலும் உன்னுடைய பெருமை, கீத கர்வம் எல்லாவற்றையும் மீறி இந்த ரங்குவிடம் நேசம் பாராட்டியது ஆச்சரியம்தான். பிறந்தவுடனே தாயையும் தந்தையையும் விழுங்கி விட்ட விருகோதரன் என்று ஊரே ஒதுக்கியவனிடம் உனக்கு மட்டும் எப்படி நட்பிருந்தது?

மாமன் வீட்டில் அடிக்குப் பயந்து தெருவில் வருகையில் தன் வயதொத்த சிறுவர்களின் விளையாட்டு காந்தமாக ஈர்க்கும்.

''ஏய்... நானும் வரேண்டா...''

''போடா... துக்கிரிக்கெல்லாம் ஆட்டத்திலே எடம் கிடையாது. உன்னச் சேத்துண்டா எங்கம்மா அடிப்பா.''

துக்கிரித்தனம் ஒட்டிக் கொள்ளுமா? அல்லது அப்படித் துக்கிரியாகப் பிறந்தது என் தவறா?

அந்த வேளைகளில் ஆற்று மணலும் உன் பாட்டும் தான் அடைக்கலம். உன் வீட்டில் நம் சிநேகத்தைப் பற்றி ஒன்றும் சொல்லவில்லையா அல்லது சொல்லியும் நீ கேட்கவில்லையா என்று தெரியாது. அதை உன்னிடம் கேட்கப் பயம், இருக்கும் ஒரே நூலிழையும் அறுந்து விடுமோ என்று.

உன்னிடம் நான் பேசியது கூடக் கொஞ்சம் தான். நாதப் பிரவாகமாக நீ பெருக்கெடுக்கையில் அதில் முங்கி இடம், வழி தெரியாது தத்தளிக்கையில் பேச்சுக்கு ஏது இடம்?



# ஏஞ்சல் டஸ்ட்

கி. கஸ்தூரி ரங்கன்

## 25 ஸ்டெல்லா

நோய்கள் முற்றி வேதனைப்படுத்தும் நள்ளிரவு நேரம். ஜி.எச். வார்டுகள் நோயாளிகளின் அனத்தல்களுக்கிடையே உறங்கிக் கொண்டிருந்தன.

பட்டைக் கண்ணாடியும், குறுந்தாடியும் அரைக்கை வெள்ளைச் சட்டையும், தோள்மீது அலட்சியமாகப் படுத்திருந்த ஸ்டெதாஸ்கோப்பும், முகத்தில் ஒரு ஹௌஸ் சர்ஜனின் தீவிர பாவனையும் ஆஸ்பத்திரிக்குள் திரிவதற்கு முழுமையான சுதந்திரத்தை அளித்தன. எதிர்ப்பட்ட ஓரிரு நர்ஸுகளும் புன்னகைத்து, 'குட் ஈவினிங் டாக்டர்' என்றனர்.

ஸ்டெல்லாவை இன்டென்ஸிவ் கேரிலிருந்து ஸ்பெஷல் வார்டுக்கு மாற்றி விட்டதாகச் சொன்னார்கள்.

ராஜ் ஸ்டெல்லா படுத்திருந்த அறையை சுலபமாகக் கண்டுபிடித்து விட்டான். வாசலில் ஒரு ஸ்டூலில் போலீஸ்காரன் ஒருவன் தூங்கிவழிந்து கொண்டிருந்தான்.

வாசற்படியில் தயங்கினான். உள்ளே இருப்பவர்களை ஸ்கிரீன் ஸ்டான்ட் ஒன்று மறைத்திருந்தது.

லேசாக முனகல். ஸ்டெல்லா உணர்வுடன் இருக்கிறாள்.

''பேபி, யு வில்பீ ஆல்ரைட்... விஷால் ப்ரே டு காட்'' என்று குரல் கேட்டது. ஸ்டெல்லா வீட்டில் வேலை செய்யும் ஆயா. பொன்னியும் உடன் இருக்கலாம்; இருக்கட்டும்.

அவனை அடையாளம் கண்டு கொள்ளுமுன்பே வேலையை முடித்து விட்டுச் சடுதியில் திரும்பிவிடலாம்.

கோட்டுப் பையில் சிரிஞ்சும், ரப்பர் சார்க் அடைத்த சிறிய குப்பியும் இருக்கிறதா என்று உறுதிப்படுத்திக் கொண்டான். உள்ளே சென்றான்.

''ஹௌ இஸ் அவர் பேஷன்ட் நௌ!'' என்று கரகரத்த குரலில் கேட்டபடியே நெருங்கினான்.

படுக்கையை ஒட்டி ஒரு ஸ்டூலில் உட்கார்ந்திருந்த பாரியான ஆயா எழுந்து நின்றாள்.

''பை காட்ஸ் கிரேஸ்... ஷி இஸ் ரிகவரிங்... ஸ்டெல்லா சாவை ஜெயிச்சுட்டுது டாக்டர்!'' என்றாள் ஆயா வாஞ்சையுடன்.

ஸ்டெல்லா கண்களைத் திறக்கவில்லை. வலியுடன் முனகிக் கொண்டிருந்தாள்.

''வெரி குட்!... ஒரு பெயின்கில்லர் போடறேன். நல்லா தூங்கட்டும்.. காலையிலே எழுந்து நடந்துடுவா!'' என்றான் ராஜ்.

சிரிஞ்சை எடுத்து ஊசியைப் பொருத்தினான். குப்பியை தூக்கிப் பிடித்து குலுக்கினான். மார்பீன் கான்ஸன்ட்ரேட் நுரைத்துப் பொங்கிற்று.

''ஷி இஸ் இன் ஹியர் ஃபாதர்! வாங்க!'' என்று டெர்ஸியின் குரல் கேட்டு திடுக்கிட்டான் ராஜ்.

''டாக்டர்! அபாயின்ட்மெண்ட் செய்யச் சொல்லி ஃபாதரைக் கூட்டி வாரச்சொன்னேன்.. வந்திட்டாங்க.'

ராஜ் வெளிச்சம் மங்கி நிதுலாக இருந்த மூலைக்கு அவசரமாக ஒதுங்கினை.

முழு நீள வெள்ளை உடையில் நெடுநெடுவென்று வளர்ந்திருந்த ஃபாதர் உள்ளே நுழைந்தார். சிறிய சர்பிலீஸ் அங்கியின் மேல் ஊதா நிற ஸ்டோலா அணிந்திருந்தார். சிலுவைச் சின்னம் மார்பில் தவழ்ந்தது. கையில் கறுப்பு அட்டை போட்ட புத்தகம்.

அவர் பின்னேடு ஒரு பையன் தீர்த்த செம்புடன் வந்தான். பெர்னி ஆயாவின் அருகே மரியாதையாக நின்று கொண்டிருந்தான்.

குருவானவர் புனித தீர்த்தத்தை ஸ்டெல்லா மீது தெளித்தார். ஸ்டெல்லாவின் முகத்தில் சில துளிகள் பட்டு சிலிர்த்தாள். சண் கண்ணைத் திறந்து பார்த்தாள். ஃபாதரைப் பார்த்ததும் மலர்ச்சியுடன் கண்களை அகல விரித்தாள்...

குருவானவர் ஸ்டெல்லாவின் நெற்றி ... கைகளிலும் திரு எண்ணெய் பூசினர்.

ஸ்டெல்லா கண்களை மூடிக்கொண்டாள்.



அவர்: ''உங்கள் பையனைக் கொஞ்சம் கண்டித்து வையுங்கள். அவனுக்கு வரவரத் துணிச்சல் அதிகமாகிவிட்டது.''

இவர்: -'என்ன விஷயம்?''

அவர்: ''அவன் என் மகள் எழுதிய காதல் கடிதத்திற்குப் பதில் அனுப்பியிருக்கிறன்...''

கோ. தீபா

குருவானவரின் சனத்த குரல்வேத ஒலிபோல காதில் பெய்தது...

''இப்புனித பூசுதலினலும், தம் அன்பு மிகுந்த இரக்கத்தாலும், ஆண்டவர் பரிசுத்த ஆவியின் அருளைப் பொழிந்து உமக்குத் துணை புரிவராக (பெர்னி, ஆயாவுடன், ராஜ்ஜும் 'ஆமென்' என்றனர்) இவ்வாறு உம் பாவங்களைப் போக்கி உமக்கு நலமளித்து தயவாய் உம்மைத் தேற்றுவராக (ஆமென்)

தந்தையாகிய இறைவன் உம்மை ஆசீர்வதிப்பாராக (ஆமென்)

இறைவனின் திருமகன் உம்மைக் குணப்படுத்துவாராக (ஆமென்)

'செபிப்போமாக' என்று குரு தொடர்ந்தார். ''இரக்கமுள்ள எங்கள் மீட்பரே, பரிசுத்த ஆவியின் அருளால் இந்த நோயாளியின் சோர்வையும், பிணிகளையும் தணித்து இவருடைய புண்களை ஆற்றி, பாவங்களைப் போக்கி, உள்ளத்திலும், உடலிலும் இவர் படும் வேதனைகளை அகற்றி, உள்ளும் புறமும் இவர் முழுமையாக நலம் பெறத் தயை புரியும்; இவ்வாறு இவர் உமது பரிவன்பினல் நலமடைந்து, பழைய நிலைபெற்று, தம் கடமைகளைத் தொடர்ந்து நிறைவேற்றுவாராக. என்றென்றும் வாழ்ந்து ஆட்சி செய்கின்றவரே, உம்மை மன்றுடுகிறேம்.''

குருவானவர் விரல்களினல் சிலுவை வரைந்து ஸ்டெல்லாவை ஆசீர்வதித்து விட்டு திரும்பினர். பெர்னி அவர் பின்னேடு சென்றன். ஸ்டெல்லா கண்களை மீண்டும் திறந்தாள். நீர் தளும்பிற்று.

''பேபி, பேபி! இனி நல்லாயிடுவே. நல்லாயிடுவே...'' என்று அவன்

சபாஷ் ராசு! ஜெயிச்சுது மாட்சு! சட்டை அழுக்கானா என்ன போச்சு?






**ஹை பவர் ஸர்ஃப் சலவை**
**ஒப்பற்ற வெள்ளைவெளேர்**
**—இது வெட்டவெளிச்சம்!**




வெள்ளைத் துணிகளுக்கும் பலே,
வண்ணத் துணிகளுக்கும் பலே!

LINTAS SU-253-1810 TM

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

தலையை வருடினாள் அவள்.

ஸ்டெல்லாவின் உதடுகள் துடித்தன.

''தேவகி.. தேவகி..'' என்றாள். ஆயாவுக்குப் புரியவில்லை.

''என்ன சொல்றே பேபி?'' என்றாள். ராஜ் முன்னே வந்தான்.

''அவ தூங்கட்டும்மா..... ஊசி போட்டிடறேன்'' என்று மீண்டும் சிரிஞ்ச் ஊசியுடன் தயாரானான்.

ஆயா உதவியாக ஸ்டெல்லாவின் கையை அழுத்திப் பிடித்துக் கொள்ள அவன் ஊசியைப் பதித்து செருகினான்.

ஸ்டெல்லா அவனை வெறித்துப் பார்த்தாள். கையை வெடுக்கென்று இழுத்துக் கொண்டு.

''நோ'' என்று வீறிட்டாள். ராஜ்ஜின் கையிலிருந்து சிரிஞ்ச் எகிறி விழுந்தது. ராஜ் அவசரமாகப் பாய்ந்து எடுக்கக் குனிந்தான்.

அவன் சிரிஞ்சைப் பற்றி நிமிர்ந்த போது காக்கி சீருடை தெரிந்தது. பயந்து பின்வாங்கினான்.

''ஸார்! இவனைப் பிடியுங்க. இவன் தான் ராஜ்'' என்று தேவகியின் குரல் அவசரமாக வற்புறுத்தியது.

தேவகியுடன் உள்ளே நுழைந்த கமிஷனர் ராஜ்ஜை எட்டிப் பற்றினார். இன்னொரு கையால் அவன் கையிலிருந்த சிரிஞ்சைப் பறித்துக் கொண்டார்.

''ஓ! யு வான் டு மேக் ஷ்யூர் ஷீ இஸ் டெட்! ஸ்கௌண்ட்ரல்!'' என்று பளாரென்று அறைந்தார்.

கண்ணாடியும் குறுந்தாடியும் பறந்தன. ராஜ் சுய உருவத்தில் தவித்து நின்றான்.

ஃபோனரை அனுப்பி விட்டு உள்ளே வந்த பெர்னி ராஜ் மீது பாய்ந்தான்.

''ஐ வில் கில் யூ ரைட் நௌ!'' என்று கர்ஜித்தான்.

கமிஷனரும் டாக்டர் பூஷணமும் அவனைப் பிடித்து விலக்கினர்.

''சீட்! ஸ்கவுண்ட்ரல்!'' என்று ஆயா தன் பங்குக்கு ராஜ்ஜை மொத்தினாள்.

வெளியேயிருந்த கான்ஸ்டபிள் ஓடி வந்தான்.

ராஜ்ஜின் கையில் விலங்கைமாட்டி அவனிடம் ஒப்படைத்தார் கமிஷனர்.

''அவன் தப்பி ஓடிடப் போறான்.. பிடிச்சுவை'' என்று கமிஷனர் சொன்னார்.

தேவகி ஸ்டெல்லாவை நெருங்கி அவள் கன்னத்தை வருடினாள்.

''ஸ்டெல்லா.! தேவகி வந்திருக்கேன் பார்!'' என்றாள்.

ஸ்டெல்லா கண்களைத் திறந்து பார்த்தாள்.

''தேவகி...'' மெலிந்த குரலில் பேசினாள் ஸ்டெல்லா. ''ஆர் யூ ஆல் ரைட்.''

''எனக்கு ஒண்ணுமில்லை. ஸ்டெல்லா! நீ தான் பாவம்! இனிமே சரியாயிடும்..''

''ஐ பெட்டர் டை! ஐம் எ கிரிமினல்!''

''இல்லை ஸ்டெல்லா...'' என்று கமிஷனர் குறுக்கிட்டார். ''இனி நீயும் பெர்னியும் போலீஸ் தரப்பு சாட்சிகள். பயங்கர குற்றவாளிகள் ராஜ்ஜும் சின்ன துரையும்தான்...''

''கேட்டுகிட்டியா ஸ்டெல்லா!'' என்றாள் தேவகி.




சமைக்கத் தெரிந்த மனைவி 'சமைக்க முடியாது' என்று பிடிவாதம் பிடித்தால் ஏற்படுவது மனவருத்தம் மட்டுமே. ஆனால் சமைக்கத் தெரியாத மனைவி 'சமைப்பேன்' என்று பிடிவாதம் பிடித்தாலோ மன வருத்தத்துடன் அஜீரணமும் ஏற்படும்.

ராபர்ட் ஃபிராஸ்ட்

கோ. தீபா

> ஸ்டாண்டப்! ஸிட்டவுன்!
>
> கலிபோர்னியாவைச் சேர்ந்த ஸொகோல் ஆப்ஸான் ஜோஸபி என்பவர் 52,003 முறைகள் எழுந்து, உட்கார்ந்து, எழுந்து உட்கார்ந்து புதிய உலக சாதனையை ஏற்படுத்தியுள்ளார். இத்தனை தடவை எழுந்து உட்கார 32 மணி நேரங்கள் பிடித்திருக்கிறது!
>
> —ஐ. எஸ். ரமணி

ஸ்டெல்லா நன்றியுடன் கமிஷனரைப் பார்த்தாள்.

''ஐ வான்ட்டு கெட் அவுட் ஆஃப் டிரக்ஸ்.... ப்ளீஸ் ஹெல்ப் மீ?'' என்றாள். அசதி மேலிட கண்களை மூடிக் கொண்டாள்.

டியூடி நர்ஸ் உள்ளே வந்தாள்.

''நர்ஸ்! பேஷண்டை விட்டுட்டுப் போயிடாதீங்க. பெர்னி, நீங்களும் ஜாக்கிரதையா பார்த்துக்கனும்.... வெளியே போலீஸ் காவல் இருக்கு. தெரியாதவுங்க யாரையும் உள்ளே விடாதீங்க!'' என்று எச்சரித்துவிட்டு கமிஷனர் புறப்பட்டார்.

விலங்கு மாட்டிய ராஜ் வெளியே தலையைக் குனிந்தபடி நின்றிருந்தான். போலீஸ்காரர் அவனைத் தள்ளிக் கொண்டு கமிஷனரைத் தொடர்ந்தார்.

டாக்டர் பூஷணம், ஸ்டெல்லாவின் நாடியை சோதித்துப் பார்த்தார். அவர் நெற்யில் கவலைக் குறி படர்ந்தது.

''கெட் தி டாக்டர். இரவு முழுதும் இவளை வாட்ச் பண்ணனும்!'' என்று நர்ஸைப் பணித்தார்.

ஐந்து நிமிஷத்தில் ஹௌஸ் சர்ஜன் உள்ளே வந்தார்.

''கொஞ்ச நேரம் முன்னே இவளைக் கொல்வதற்கு ஓர் ஆள் வந்தான். ஏதோ விஷ மருந்தை ஊசி மூலம் போடப் பார்த்தான். யு பெட்டர் செக் அப். இவ பல்ஸ் அப்நார்மலா இருக்கு..'' என்றார் டாக்டர் பூஷணம். ஸ்டெல்லாவின் ரத்தத்தில் கலந்து விட்ட மார்ஃபீன் துளிகள் மூளை செல்களை தாக்கி நாடித் துடிப்பை தாறுமாறாக வேகப்படுத்தி விட்டது.

ஸ்டெல்லாவின் மனம் ஆகாயம் போல விரிந்தது. இருள் கவிந்தது. நடுவே பொட்டாய் தோன்றிய சிறு நட்சத்திரம். பெரிதாகிப் பெரிதாகி கண்ணைப் பறிக்கும் வெள்ளை வட்டமாய் தகதகத்தது. கருமையான வானில் ஊசிப் புள்ளிகளாய் நட்சத்திரங்கள். வெள்ளை வட்டம் 'வா' என்று அழைத்தது.

சிறகு முளைத்த தேவ தூதர்கள் வந்தனர். வெண்ணுடை தரித்த தேவதைகள் காற்றில் சிறகுபோல் மெல்ல இறங்கி வந்தனர். அவர்களிடையே அம்மாவின் கனிவான முகம் தெரிந்தது.

'வா' என்று அழைத்தாள். 'வா வா' என்று குரலற்ற எதிரொலி நாற்றிசையிலிருந்தும் ஒலித்தது....

கடல் ஓரம் வானை முட்டிய ஸ்தூபிகள். சர்ச்சின் ஸ்தூபிகள். உள்ளே விஸ்தாரமான சர்ச்...ஒரு கையால் அம்மாவின் கையைப் பற்றி இன்னொரு கையால் ஃபிராக்கைத் தூக்கிப் பிடித்துக் கொண்டு நடக்கிறாள்.

சுற்றிலும் மண்டியிட்டு பிரார்த்தனை செலுத்தும் பெருமக்கள். ஒருவர் படித்துச் சொல்ல பின்னேடு ஒரே குரலாகப் பாடுகிறார்கள்.

''ஓ, இறைவா! எமக்கு துணை புரியவாரும். ஆண்டவரே, எமக்குத் துணை புரிய வாரும் பிதாவுக்கும், சுதனுக்கும். பரிசுத்த ஆவிக்கும் மகிமை உண்டாவதாக.

ஆதியிலே இருந்தது போல இப்பொழுதும் எப்போதும் என்றென்றும் இருப்பதாக. -ஆமென் (அல்லேலுயா)

கிறிஸ்து இறந்தார்.
கிறிஸ்து உயிர்த்தார்
கிறிஸ்து மீண்டும் வருவார்.

நாம் அவரோடு இறந்தோமானால்
நாமும் அவரோடு வாழ்வோம்
நாம் அவரோடு நிலைத்து நின்றால்
நாமும் அவரோடு அரசாள்வோம்.

கிறிஸ்து இறந்தார்
கிறிஸ்து உயிர்த்தார்
கிறிஸ்து மீண்டும் வருவார்.

ஸ்டெல்லாவின் மூச்சு அடங்கிய போது அவள் முகத்தில் அலாதியான மலர்ச்சி விகசித்து நின்றது.

(அடுத்த இதழில் முடியும்)

# ஏஞ்சல் டஸ்ட்

## கி. கஸ்தூரி ரங்கன்

### 25. தேவ்

ஸ்டெல்லாவின் மரணத்திற்காகக் கண்ணீர் வடித்துவிட்டு தேவகி தந்தையுடன் விஜயா ஆஸ்பத்திரிக்குத் திரும்பினாள்.

தேவ் படுத்திருந்த வார்டில் வெளிச்சமும் பரபரப்பும் காணப்பட்டது. நர்ஸ் ஒருத்தி எதிர்ப்பட்டாள். ''டாக்டர்! உங்கபேஷன்ட் கோமாவிலிருந்து எழுந்திட்டார்!'' என்றாள்.

''இஸிட்?'' என்று டாக்டர் வேகமாக தேவ்வின் அறைக்கு விரைந்தார். பின்னோடு ஓடினாள் தேவகி. அதுவரை கூம்பியிருந்த மனம் சரேலென்று மலர்ந்து மகிழ்ச்சி சுரந்தது

தேவ்வின் கட்டிலைச் சுற்றி அவன் தாய் பாகீரதியும், தந்தை சிவபாத சுந்தரமும் நின்றிருந்தனர். தேவ் கண்களை விழித்து மிரளமிரளப்பார்த்தான்

''தேவ், தேவ்! — என் செல்லமே! உன்அப்பா வந்திருக்காரு பாரேன்!'' என்று கரைந்தாள் பாகீரதி.

டாக்டர் பூஷணம் உள்ளே நுழைந்தார்.

''அலட்டாமல் இருங்க. அவரால் உடனே அடையாளம் கண்டு சொல்லிட முடியாது. பொறுங்க'' என்றார் டாக்டர் மாத்ருபூதம்.

''எப்ப கண்முழிச்சார் இவர்?'' என்று டாக்டர் பூஷணம் கேட்டார்.

''அஞ்சு நிமிஷம் கூட ஆகலை. நர்ஸ் வந்து சொன்னா. டிஸ்ஒரியன்டேஷன்... யாரையும் அடையாளம் கண்டு பிடிக்க முடியலை.''

''இஸிட் ஸீரியஸ்!'' என்று கேட்டார் சிவபாத சுந்தரம்.

''கோமாவிலிருந்து எழுந்துட்டார். அதுவே பெரிசு. அடுத்து ஒவ்வொரு உணர்வா திரும்பி வரணும். மே டேக் எ லாங் டைம்!'' என்றார் டாக்டர் மாத்ருபூதம்

தேவகி கட்டிலின் அருகே மண்டியிட்டாள். தேவ்வின் முகத்தைத் தொட்டு—

''தேவ்?'' என்றாள்

தேவ்வின் பார்வை அவள் மீது படிந்தது. கண்ணில் மலர்ச்சி தோன்றியது.

''தேவகி!'' என்று முணுமுணுத்தான்.

''ஸ்ப்லெண்டிட்!'' என்றார் டாக்டர் மாத்ருபூதம்.

தேவ் ஒவ்வொருவராகப் பார்த்து அடையாளம் கண்டு கொண்டான்.

''தேவ், என் கண்ணே!'' என்று பாரதி கண்ணீர் வடித்து ஆனந்தித்தாள்.

சிவபாத சுந்தரம், டாக்டர் பூஷணத்தைப் பார்த்துச் சிரித்தார்.

''கல்யாணத்தை தள்ளிப்போட்டுடீங்க. அடுத்த முகூர்த்தத்திலியாவது நடத்திடலாமில்லையா?'' என்று கேட்டார்.

''நான் தயார்தான். ஆனா டாக்டர் மாத்ருபூதத்தைக் கேட்கணும்'' என்றார்.

''என்ன டாக்டர், நீங்க என்ன சொல்றீங்க?' என்று டாக்டர் மாத்ருபூதத்தைக் கேட்டார் சிவபாத சுந்தரம்.

''இப்பதானே கோமாவிலிருந்து மீண்டிருக்கார். ஆறுமாசம் டயம் கொடுங்க. பூரணமா குணப்படுத்தி டிரக் அடிக்ஷனிலிருந்து மீட்டுக் கொடுத்திடறேன்!'' என்றார்.

தேவகி தேவ்வின் கையைத் தேடி, தன் விரல்களுடன் பிணைத்துக் கொண்டாள்.

அடுத்த சில நாட்கள் தனியான பாதுகாப்பான ஸைக்கியாட்ரி வார்டில் வைக்கப்பட்டான். நர்ஸைத் தவிர தேவகிக்கு மட்டும் பகல் நேரத்தில் அவனுடன் இருக்க அனுமதித்தார் டாக்டர்.

பாரதி, தேவகியை இறைஞ்சி வேண்டிக் கொண்டாள்.

''எப்பிடியாவது என் பிள்ளையை மீட்டு ஆளாக்கிடும்மா!'' என்று கண்ணீர் மல்க வேண்டிக் கொண்டாள்.

சாதாரண நிலைக்கு தேவ் திரும்ப நாள் பிடித்தது. பல நாட்கள் சம்பந்தமில்லாமல் ஏதோ பேசிக் கொண்டேயிருந்தான்.

டாக்டர் மாத்ருபூதம் தேவகியிடம் ஒரு கேள்விப் பட்டியலைத் தந்து தேவ்வின் சார்பாகப் பூர்த்தி செய்யச் சொன்னார். தெளிவாக இருந்த நேரத்தில் அவனே சிலவற்றுக்குப் பதில் சொன்னான். அவன் அப்பாவும் அம்மாவும் சில தகவல் தந்தனர்.

தேவ்வின் போதை மருந்துப் பழக்கம் பள்ளி நாட்களில் ஆரம்பித்துவிட்டது. இதுவரை பெரும்பாலும் ஹஷீஷ், மரிஜுவானா, எல்எஸ்டி மாத்திரைகள் என்று ஆரம்பக் கட்ட போதைப் பொருள்களையே அவன் சாப்பிட்டான். அதுவே அவனை அடிமையாக்கி யிருந்தது.

நல்லவேளையாக மார்ஃபீன் ஹெராயின் ஊசிகள் போட்டுக்கொள்வதை தவிர்த்து விட்டான்.

ஒரு தடவை ஊசி மருந்து ஏற்றிக் கொண்டால். அதற்கே அடிமையாகி விட வேண்டும். டிரக் புஷர்ஸ் எனப்படும் போதை மருந்து வியாபாரிகள் இளைஞர்களுக்கு முதலில் இனமாகவே ஊசி போடுவதுண்டு. அதன் பிறகு ஒரு முறைக்கு 25 பிறகு 50 பிறகு 250



'எனக்கு வயிற்று வலி வேறொன்றுமில்லை..'

ரூபாய் என்று உயர்த்திக் கொண்டே போவார்கள். தினம் பல தடவை ஊசி போட்டுக் கொள்ள வேண்டிய நிர்ப்பந்தத்தில் மாட்டிக் கொள்ளும் இளைஞர்கள் பணத்திற்காக திருடுவார்கள். வீட்டினுள்ளே பொருள்களை விற்று விடுவார்கள். பெற்ற தாயை அடித்துத் துன்புறுத்தி பணம் பிடுங்குவார்கள். அம்மாவைக் கொலை செய்தவர்களும் உண்டு. போதை அடிமைக்குள்ளான பெண்கள் தம் உடலை விற்றுப் பணம் தேடவும் முற்படுவதுண்டு.

ஒரு கட்டத்தில் ஊசி போட்டுக் கொள்பவர்கள் பணம் கிடைக்காமல்

பைத்தியம் பிடித்தாற் போல் ஆகி விடுவார்கள். தற்கொலைதான் இவர்கள் முடிவாக இருக்கும்.

தேவ் இவ்வளவு மோசமாகி விடவில்லை. ஆனால் அதிகம் பி ஸி பி எனப்படும் ஏஞ்சல் டஸ்ட் ரத்தத்தில் கலந்து விட்டதால் அவன் மூளை ரசாயனத்தில் தீவிர மாற்றம் ஏற்பட்டிருந்தது.



## இளைய தலைமுறை

# ஆல் ரவுண்டர்



டி. பி. ஜெயின் கல்லூரியில் பி. ஏ. (எக்கனுமிக்ஸ்) படித்துக் கொண்டிருந்த போது, என்.ஸி.ஸி.யில் ஸீனியர் அன்டர் ஆபீஸராஞர் அருள்மணி. ரைபிள் பயரிங்கில் எக்ஸ்பர்ட்டான இவர், 0.202, 0.303, எல்.எம்.ஜி., ஸெல்ப் லோடிங் ரைபிள் ஆகிய எல்லா வகை துப்பாக்கிகளேயும், 'பல்லாவரம் டிரெயினிங் காம்பில்' உபயோகப் படுத்தக் கற்றுக் கொண்டு இரண்டாவது பெஸ்ட் ஃபயரர் விருது பெற்ருர். இன்டர்யூனிட், இன்டர் பெட்டாலியன் இன்டர் குரூப் காம்படிஷன்களில்விருதுகள் வாங்கி, ஸ்டேட் லெவலில் தேர்வு பெற்று, தமிழ்நாடு பாண்டிசேரிக்காக, ராஜஸ்தானில் நடைபெற்ற அனைத்து இந்திய பயரிங் காம்படிஷனில் கலந்து கொண்டுள்ளார். 'ராஜஸ்தானத்து ரைபிள் மார்ச்சிங்கையும், 40 மைல் ரைபிள் ரன்னிங்கையும்' மறக்க முடியாத அனுபவங்களாகக் குறிப்பிடும் அருள்மணி, தமிழ்நாடு அரசாங்கத்தால், 'அவுட்ஸ்டாண்டிங் என். ஸி. ஸி.

---

'டோபாமைன்' என்று ஒரு ஹார்மோன் ரசாயனப் பொருள். இதன் அளவு அதிகரித்து விட்டதாக டாக்டர் மாத்ருபூதம் சொன்ஞர்.

ஃ ஃ ஃ

தேவ்வின் சிகிச்சை முறை இந்த அடிப்படையில் ஆரம்ப மாயிற்று. ஒரு வாரம் அவனுக்கு மருந்து ஒன்றும் கொடுக்கப்படவில்லே. பிறகு ட்ரான்குலேஸர் எனப்படும் தூக்க மருந்துகள் ஊசி மூலம் ஏற்றப்பட்டன. அதன் பிறகு, 'ஜோம்பி'போலே ஆகிவிட்டான். உணர்வுகள் அற்றுப்போனவன்போல் புலன்கள் செயல்படும் - பார்க்கும், கேட்கும், உணரும் சக்தி அற்றவனுகத் தோன்றிஞன். சம்பந்தமில்லாமல் பேச ஆரம்பித்தான். கற்பனையாகப் பூப்பறித்தான், பேப்பரும் பேனுவும் கேட்டான்.

காகிதங்களில் கிறுக்கித் தள்ளிஞன்.

'பூஜ்யம்
கடவுள்
கடவுள்
பூஜ்யம்
புல்லின்
நுனியில்
பூஜ்யம்
பனியின்
துளியில்
பூஜ்யம்
கோளம்
அண்டம்
பூஜ்யம்
நீயும்
நானும்
பூஜ்யம்

பூஜ்யம்
பூர்ணம்.

என்று ஒரு கவிதை எழுதிஞன். சைபர் சைபராக நான்கு பக்கங்களுக்கு போட்டு நிரப்பிஞன்.

ஃ ஃ ஃ

'ஜன்னல் விளிம்பில் எனக்காகக் காத்திருக்கிறது ஒரு கரிய காக்கை. எமனின் வாகனம்! காக்கை தானே?' என்று ஒரு கேள்வி.

ஃ ஃ ஃ

'நான் ஏன் இப்படி ஆனேன். என்னை நானே அழித்துக் கொள்வதற்கு ஏன் முயன்றேன்? என்னை நானே அறிந்து கொள்ளும்முயற்சி

## அருள்மணி

காடட்'டாக தேர்ந்தெடுக்கப் பட்டு உதவித் தொகை பெற்றிருக்கிறார். என். ஸி. ஸி. ஸ்விம்மிங்கில், ஸ்டேட் லெவலில் தேர்ந்தெடுக்கப்பட்டு, காஷ்மீரில் நடைபெற்ற 'அனைத்திந்திய வாட்டார் ஸ்கியிங் கோர்ஸில்' பங்கு கொண்டு 'பெஸ்ட் ஸ்விம்மர் அவார்டு வாங்கி இருக்கிறார். அனைத்துக் கல்லூரி பேச்சு, அறுவை, கவிதை, மோனோ ஆக்டிங்,

நாடகம், ஒருவிநாடி ஆகிய பற்பல போட்டிகளில் சென்னையிலுள்ள எல்லாக் கல்லூரிகளிலும் நூற்றுக்கும் மேற்பட்ட முதற் பரிசுகளை வாங்கியுள்ளார்.

பல தலைவர்கள், மற்றும் கலைஞர்களைப் போல குரல் கொடுக்கும் அருள்மணியின், சிறப்பு நிகழ்ச்சிகள், சிலோன் ரேடியோ, சென்னை நியூஸ், சுராங்கனியை கிருபானந்தவாரியார் ஸ்டைலில் பாடுவது ஆகியன. தமிழ்ப் பேரவையில், டி. பி. ஜெயின் கல்லூரி செகரட்டரியாக இருந்து பின்னர், அனைத்துக் கல்லூரி தமிழ்ப் பேரவையின் செகரட்டரியாக உயர்வு பெற்றார். கலைஞரின் தூக்குமேடை, சேவாஸ் ஸ்டேஜின் நாடகங்கள், எம். ஆர். ராதாவின் ரத்தக்கண்ணீர் முதலிய பல நாடகங்களிலும் நடித்திருக்கும் அருள்மணி, தற்போது, திரைப்படக் கல்லூரியில் 'ஆக்டிங்' பிரிவில், படித்து வருகிறார். 80-81-ம் ஆண்டில் நாவலரிடமிருந்து, 'தமிழகத்தின் மிகத் திறமையான மாணவர்' விருதைப் பெற்ற இவர் தற்போது கற்று வரும் கலைகள்: குங்ஃபூ, கராத்தே, சிலம்பம், ஜிம்னாஸ்டிக்ஸ், ரோலர் ஸ்கேட்டிங், ஹார்ஸ் ரைடிங், வெஸ்டர்ன் மற்றும் பரத நாட்டியம்.

வாமாலி

---

யில் என்னை அழித்துக் கொள்ள முற்பட்டேனோ? நான் யார்? 'பித்தனா சித்தனா?' இப்படி ஒரு குறிப்பு.

ஃ ஃ ஃ

'தேவகி மை டார்லிங்' என்று பத்துப் பக்கங்களுக்கு எழுதித் தள்ளினான் ஒரு நாள்.

ஃ ஃ ஃ

'எச்சரிக்கை! எச்சரிக்கை!! எச்சரிக்கை!! இளைஞர்களே என்னைப் பாருங்கள்... என்னைப் போல் போதை மருந்தின் அடிமையாகி விடாதீர்கள்!...' என்று கொட்டை எழுத்தில் எழுதினான். கீழே ஒரு அட்டவணை.

கவலை அல்லது க்யூரியாசிடி-ட்ரக்ஸ் அடிமை-சுதந்திர உணர்வு-மேலும் போதை மருந்து - மனச்சோர்வு இன்னும் மருந்து- அடிக்கடி பயம்- கவலை சந்தேகம்- நிரந்தர அடிமை- குற்ற உணர்வு-தற்கொலை எண்ணம்- சமூகத்தின் மேல் வெறுப்பு- தாய் தந்தையர் மீது வெறுப்பு- தன்மீதே வெறுப்பு- குற்ற உணர்வு- அதிகம் போதை மருந்து- இன்னும் இன்னும் பைத்தியம்- சாவு- விடுதலை!

எச்சரிக்கை! எச்சரிக்கை!! எச்சரிக்கை!!!

ஃ ஃ ஃ

ஒரு மாலை நேரத்தில் தேவ்வைப் பார்க்க அவன் அம்மா வந்திருந்தாள். தேவ் அவளை வெறித்துப் பார்த்தான்

'அம்மா உன்னைக் கொன்றுபோடணும்' என்று கத்தினான். அவள் பயந்து பின்வாங்கினாள்.

ஃ ஃ ஃ

ஒரு நாள் முன்னிரவில் யாருக்கும் தெரியாமல் ஆஸ்பத்திரியை விட்டு வெளியேறினான். இரண்டு மணி நேரத்திற்குப் பிறகு சாராயக்கடை ஒன்றில் ஏகமாகக் குடித்து விட்டு மயங்கிக் கிடந்த நிலையில் அவனைக் கண்டு பிடித்தார்கள்.

ஃ ஃ ஃ

மீண்டும் கட்டுப்பாடான ஆஸ்பத்திரி வாசம். போதை முறிவு மருந்தின் அளவை அதிகம் ஏற்றினார்கள். இதில் பலனில்லாவிட்டால் ஷாக் ட்ரீட்மெண்ட் தர வேண்டும் என்றார் டாக்டர்.

ஃ ஃ ஃ

தேவகி அதிக நேரம் ஆஸ்பத்திரியிலேயே இருந்தாள். அவன் பெரும்பாலும் உறக்கத்திலேயே கிடந்தான். இடைஇடையே தூக்கித் தூக்கிப் போட்டது. விழிப்பு வரும் போது மிரளமிரளப் பார்த்தான்.



ஃ ஃ ஃ

ஓர் இரவு முழுவதும் விசிலடித்துப் பாடினான்.

ஃ ஃ ஃ

ஒரு தினம் பாத்ரூமுக்குள் போய் உட்கார்ந்து கொண்டு வெளியே வர மறுத்துச் சண்டித்தனம் செய்தான். கதவின் தாழை உடைத்து இழுத்து வந்தார்கள்.

ஃ ஃ ஃ

இப்படியே ஆறு வாரங்கள்.

ஒரு காலை நேரத்தில் தேவகி அவனைப் பார்க்க வந்தபோது அவன் கட்டிலின்மேல் பத்மாசனம்போட்டு உட்கார்ந்திருந்தான். அவன் கண்கள் மூடித் தியானத்தில் இருப்பது போல தோன்றியது.

''விடிகாலையிலிருந்து இப்படித்தான் உக்கார்ந்திருக்கார்!'' என்று நர்ஸ் சொன்னாள்.

தேவகி சப்தம் செய்யாமல் அவன் அருகே நாற்காலியில்உட்கார்ந்து கொண்டு அவனையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

தேவ் கண்களைத் திறந்தான்.

''இஸ் ஸ்டெல்லா டெட்?'' என்று கேட்டான்.

தேவகிக்குத் திக்சென்றது. இவனுக்கு எப்படித் தெரிந்தது?

''சற்று முன் அவளைப் பார்த்தேன். ஷி இஸ் தேர் வே அப்!'' என்று கையை உயர்த்தி மேலே சுட்டிக் காட்டினான். ''ஷி ப்ளெஸ்ட் அஸ்'' என்றான்.

தேவகிக்கு பேச்சே வரவில்லை. அவன் கையைப் பற்றி எடுத்தாள்.

''தேவ், யு ஆர் பேக் டு நார்மல்?'' என்று கேட்டாள்.

''ஐ'ம் ஓ கே!'' என்றான்.

பிறகு படுத்துக் கொண்டு தூங்கிப் போனான். முதல் தடவையாக நிச்சலனமாக நிம்மதியாக எட்டு மணி நேரம் தூங்கினான். அதன் பிறகு அவனுக்கு மருந்துகள் தேவைப்படவில்லை.

ஃ ஃ ஃ

பின்குறிப்பு: ஒரு வழியாக போதை மருந்து அடிமைத்தளையிலிருந்து விடுபட்ட தேவ்வின் கதை ஆயிரம் பதினாயிரம்இளைஞர்களின் அனுபவமே ஆகும். ஆனால் தேவ்வைப் போல் பூரணமாக விடுதலை பெற்று முழு மனிதனாக மீண்டவர்கள் மிகவும் மிகவும் குறைவு. காரணம் தேவ்வுக்கு வாய்த்ததைப் போல விசுவாசமான காதலியும் அவன் நிலைமையைப் புரிந்து கொண்டுபொறுத்துப் போகிற குடும்பத்தினரும் எல்லாருக்கும் வாய்ப்பதில்லை. மீளாத அடிமைகளாக போதை மருந்திலேயே வாழ்க்கையை முடித்துக் கொண்ட இளவயதுப் பெண்களும் ஆண்களும் எத்தனை எத்தனையோ! இவர்களில் சிலரைப் பற்றி டாக்டர் மாத்ருபூதம் சில கட்டுரைகள் வழங்க இசைந்திருக்கிறார்.

[டாக்டர் மாத்ருபூதம் விஜயா ஆஸ்பத்திரியில் சைக்கியாட்ரி கன்ஸல்டன்ட். அரசு மன நோய் மருத்துவ மனையிலும் பணிபுரிகிறார். இந்தக் கதையில் அவர் மட்டும் நிஜமான பாத்திரம்.

உங்கள் குடும்பத்தில் இதுபோன்று பிரச்னை இருந்தால் அது பற்றியும் அவரிடம் 'கதிர்' மூலமாகக் கேட்டுப் பதில் பெறலாம்.]

முற்றும்.